# அறநெறி மார்க்கம்

# மனிதனின் அதிமுக்கிய அலுவல்



எட்டாம் பதிப்பு

# 1921-ம் ஆு வெளியான முதல் பதிப்பின்

# முகவுரை

இதைக் கையில் எடுத்துத் திறந்து பார்த்து, முதற் கேள்வியை வாசித்ததும், இது என்ன, இருக்கிற ஞானோபதேசக் குறிப்பிடப் புஸ்தகங்கள் போதாதா என்று சலிப்புடன் தூக்கித் தூர எறிந்துவிடச் சிலருக்குச் சோதனை உண்டாகலாம். ஆகிலும், இதுவரை இத்தகைய புஸ்தகம் தமிழில் பிரசுரமானதில்லை என்பது நிச்சயம். வினுவிடை ரூபமாக எழுதப்பட்டிருப்பதொன்றே சாதாரண ஞானோபதேசக் குறிப்பிடப் புஸ்தகங்களுக்கும் இந்தப் புஸ்தகத்துக்கும் பொதுவானதொழிய இது வேத குறிப்பிட புஸ்தகமல்ல.

நமது பள்ளிக்கூடங்களில் பயின்றுவரும் பிள்ளைகள் பற்பல மதங்களைச் சார்ந்தவராயிருப்பதின் காரணத்தால் அவர்களுக்கு மனத்தாங்கள் உண்டாகாதபடி, உலக சாஸ்திரங்களைமட்டும் கற்றுக்கொடுத்து, நல்லொழுக்கத்தைப்பற்றி ஒன்றும் போதியாமல் விட்டுவிடுகிறோம். ஏனெனில் நல்லொழுக்கமும் வேதாநுசாரமும் ஒன்றோடொன்று இணைபிரியா சம்பந்தமுள்ளவை. நல்லொழுக்கத்தைப்பற்றிப் பேசும் பொழுது வேத விஷயத்தைப்பற்றிப் பேசாமலிருக்கமுடியாது. இதைப்பற்றி முன்சொன்னதுபோல், நல்லொழுக்கத்தைக் கற்றுக்கொடுக்காமல் விட்டுவிடுகிறோம். இது ஓர் பெருங்குறை என்பதற்குச் சற்றேனும் சந்தேகமில்லை; ஏனெனில், சன்மார்க்கப் படிப்பினையில்லாத கல்வி, மெய்யான கல்வி என்று சொல்லமுடியாது.

ஆகையால், கடவுள் ஒருவர் உண்டென்று அங்கீகரிக்கும் எம்மதத்தினருக்கும் பொதுவான நன்மார்க்க போதனைகள் அடங்கிய ஓர் புஸ்தகம் தேவையாயிற்று. பம்பாய் நகரில், பல்லாண்டுகளாய், **எக்ஸாமினர்** என்னும் வாராந்தர ஆங்கில பத்திரிகையை வெகு சாமர்த்திய திறமையுடன் நடத்திவரும் பத்திராசிரியரும், ஆழ்ந்த ஞான சாஸ்திரங்களைப் பாமரரும் எளிதில் கண்டுபிடிக்கத்தக்க தெளிவுடன் எழுதும் அப்பியாசம் சுயம்பாயுள்ளவருமான கனம் ஹல் சுவாமியவர்கள்

(Rev. E. R. Hull, S.J.) இத்தகைய புஸ்தகத்தின் அவசியத்தை உணர்ந்து, இன்றைக்கு இரண்டு வருஷங்களுக்கு முன் சகல மதத்தினருக்கும் பிரயோஜனப்படக்கூடிய புஸ்தகம் ஒன்று ஆங்கிலத்தில் எழுதியுள்ளார்.

ஆங்கிலங் கற்கும் உயர்தரப் பள்ளிக்கூட மாணவருக்காக, இந்தப் புஸ்தகம் அவரால் எழுதப்பட்டிருந்தாலும், அதில் அடங்கிய விஷயங்கள் சகலருக்கும் பிரயோசனப்படக்கூடியவை. நம்மவரில் அநேகருக்கு இவ்விஷயங்கள் தெரியாதிருப்பதினுல் இதைத் தமிழில் வெளியாக்குவது நன்மையாயிருக்குமென்று சிலர் கேட்டுக்கொண்டதின்மேல் இதைத் தமிழில் பிரசுரிக்கக் கருத்துக்கொண்டோம்.

சாதாரணமாய் வழங்கிவரும் ஞானுபதேசப் புஸ்தகங்களில் கிறீஸ்துவ விசுவாச சத்தியங்களைச் சிறிது வியாக்கியானத்துடன் எடுத்துக்காட்டியிருக்குமேயல்லாமல், காரணங் கேட்கிறவனுக்குச் சொல்லவேண்டிய நியாயம் கூறப்பட்டிருக்காது. நமது ஜனங்களும் வழக்கமாய்க் கிளிப்பிள்ளைகளைப் போல் குருட்டுப் பாடமாய்க் குறிப்பிடப் புஸ்தகத்திலுள்ள கேள்விகளையும் மறுமொழிகளையும் கட்டாயத்துக்காகச் சிறு பிராயத்தில் மனப்பாடம் பண்ணி அப்பியாசப்பட்டவர்களேயன்றி, யாதொரு விஷயத்துக்கும் எளிதான நியாயம் காரணம் சொல்லத் தெரியாதவர்களாயிருக்கிறுர்கள். இந்தப் புஸ்தகத்தில், கிறீஸ்துவ விசுவாச சத்தியங்களைப்பற்றிய பேச்சே கிடையாது. ஏனெனில், ஏற்கனவே சொல்லியிருப்பதுபோல், இது கிறீஸ்து வேதக் குறிப்பிடப் புஸ்தகமல்ல. **சகலருக்கும் பொதுவான நீதிநூல். சுபாவ அறிவைக்கொண்டு மனிதன் தெரிந்துகொள்ளக்கூடிய விஷயங்களைப்பற்றிமாத்திரம் இங்கே விவரித்து எழுதப்பட்டிருக்கிறது.** ஆகையினுல், இதை உபயோகிக்கும் கிறீஸ்துவர்கள், இதில் உள்ளவைகள்மாத்திரம் நாம் ஏற்றுக்கொள்ளவேண்டிய விஷயங்கள் என்று தப்பிதமாய் எண்ணவேண்டாம். கடவுளைப்பற்றியும், மனிதனுடைய முடிவைப்பற்றியும் சர்வேசுரன்தாமே வெளிப்படுத்தியிருக்கிற விஷயங்கள் வேறநேகம் உண்டு. அவற்றை ஞானுபதேசக் குறிப்பிடப் புஸ்த்கத்தில் கண்டுகொள்ளலாம்.

சுருக்கமாய் இந்தப் புஸ்தகத்தின் விசேஷம் யாதெனில்:- (1) கிறீஸ்துவர்கள், கிறீஸ்துவர்களல்லாதார் யாவரும் எந்த மதத்தைச் சேர்ந்தவர்களானுலும், யாதொரு ஐயுறவின்றி இதை உபயோகிக்கலாம். (2) நல்லொழுக்கம் எதென்றும்,

நாம் செய்யத்தக்கது எது, செய்யத்தகாதது எது என்றும் சொல்லிக் காட்டுவதுமல்லாமல், ஏன் செய்யலாம் செய்யக் கூடாது என்று காரணமும் கூறுகிறது. சில பாகங்கள் சாமான்ய ஜனங்களுக்குக் கொஞ்சம் கடினமாகத் தோன்ற லாம்; பாஷையும், பதங்களும் சற்றே கடினமாயிருக்கலாம். ஒவ்வொரு சாஸ்திரத்திலும் அதற்குரிய விசேஷ வார்த்தை களும் பாஷையும் உண்டு என்பது கற்றோர் யாவருக்கும் தெரிந்த விஷயம். ஆகையால் இதைப்பற்றிச் சஞ்சலப் படுவது சரியல்ல.

குருட்டுப் பாடமாய் மனப்பாடம் பண்ணுவதற்காக எழுதப்பட்ட புஸ்தகமல்ல இது. உபாத்திமார் பள்ளிக்கூடங் களில் உபயோகித்து வியாக்கியானம் செய்யவேண்டியது. கொஞ்சம் கடினமாயிருக்கப்பட்ட பாகங்களுக்கு, "விஷய அட்டவணையில்"* குறியிடப்பட்டிருக்கிறது. பள்ளிக்கூடங் களில் இதை உபயோகிக்கும்போது, இக்குறியிடப்பட்ட பாகங்களை முதன்முறை விட்டுவிடலாம்.

மாணுக்கராஞலும் சரி, மற்றப் பெரியவர்களாஞலும் சரி, இதை ஒருதடவை கடகடென வாசித்து மூலையில் போட்டு விடக்கூடிய புஸ்தகமென்று எண்ணுவது பெருந் தப்பிதமாகும். நமது ஜீவிய காலத்தின் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் செய்யத் தக்கது என்னவென்று சங்க்ஷேபமாய்ச் சொல்லுகிற புஸ்தக மாதலால், எப்போதும் நமதண்டையிலிருந்து நாம் நடந்து கொள்ளவேண்டிய வழியைக் காட்டும் உத்தம நண்பனுக இதைப் பாவிக்கவேண்டும். நாம் செய்த காரியம் தப்பிதமா சரியாவென்கிற சந்தேகம் நேரிடும்போதெல்லாம், இந்தப் புஸ்தகத்தைத் திறந்துபார்த்துச் சந்தேகத்தை நிவர்த்தித்து மனதைச் சாந்தப்படுத்திக்கொள்ளத்தகும். ஆகையால், நமது கையில் எப்போதும் இருக்கவேண்டிய நீதிநூல் இது என்பது மிகையல்ல.

J. J.

# அறநெறி மார்க்கம்

# மனிதனின் அதிமுக்கிய அலுவல்



## முதற் பாகம்



### 1-ம் அதிகாரம்

#### 1. மானிட ஜீவியத்தின் கருத்து யாது?

*1. மனிதன் தன்னைத்தானே உண்டாக்கினனா?*

இல்லை, மனிதன் தன்னைத்தானே உண்டாக்கவில்லை.

*2. இல்லை என்றால், மனிதனை உண்டாக்கினவர் யார்?*

உலகத்தையும் அதிலுள்ள யாவையும் படைத்துக் காப்பாற்றி ஆண்டுவரும் கடவுளே, மனிதனையும் உண்டாக்கினர்.

*3. என்ன கருத்துக்காகக் கடவுள் மனிதனை உண்டாக்கினர்?*

மனிதன் சன்மார்க்கத்தில் ஒழுகி, அதனால் பூரண பாக்கியத்தைச் சுகிக்கும்படியாகக் கடவுள் அவனை உண்டாக்கினர்.

*4. மனிதன் இவ்வுலகில் பூரண பாக்கியத்தைச் சுகிக்கக் கூடுமா?*

இவ்வுலகில் மனிதன் ஒரு சிறிதளவு பாக்கியமுள்ளவனயிருக்கக்கூடும்; ஆனால் முற்றிலும் பூரண பாக்கியம் அநுபவிக்க முடியாது.

*5. பூரண பாக்கியம் பெற மனிதனால் எப்போது கூடும்?*

கலப்பில்லாப் பாக்கியம் பெறுவது மறு ஜீவியத்தில்தான் கூடும்.

*6. அப்படியானால் இப்பிரபஞ்ச வாழ்வை மனிதனுக்குக் கடவுள் கொடுப்பானேன்?*

மறு ஜீவியத்துக்குத் தன்னை ஆயத்தப்படுத்தும் வண்ணம் மனிதன் இப்பிரபஞ்ச வாழ்வை அடைந்திருக்கிறான்.

7. இத்தகைய ஆயத்தத்தின் அவசியம் என்ன ?

மனிதன் அடையவேண்டுமாய்க் கடவுள் விரும்பும் அந்தப் பூரண பாக்கியம் மனுஷப் பிரயாசையின் பலனாக இருக்கத் தக்கதாக இத்தகைய ஆயத்தம் அவசியமாயிற்று.

8. மறு ஜீவிய பாக்கியத்தை மனிதன் தானே அடைந்து கொள்வது எப்படியாகும்?

தேவ சட்டப்பிரகாரம் இவ்வுலகில் ஜீவிப்பதால், மறு ஜீவிய பாக்கியத்தை மனிதன் அடைந்துகொள்ளத்தகும்.

9. தேவ சட்டம் யாது ?

நினைவு, வாக்கு, கிரியைகளில் நேர்மையானதைச் (நியாயமானதை) செய்து, அடாததை விலக்கவேண்டுமென்பதே தேவ சட்டம்.

10. தேவப் பிரமாணத்துக்குக் கீழ்ப்படிவதால் உண்டாகும் பயன் என்ன ?

இப்பிரமாணப்பிரகாரம் நடப்போமானால், கடவுளுக்குப் பிரியமுள்ள தாசராவோம், அவரது ஆசீர் நம்மீது அருளப்படும்; மறு உலகில் பூரண பாக்கியம் நமக்குச் சன்மானமாக அளிக்கப்படும்.

11. இச்சட்டத்தை மீறினால் என்ன நேரிடும் ?

இதை மீறினால், கடவுளுக்கு நம்மீது பிரியமற்றுப் போகும்; அவருடைய ஆசீரை இழந்து, மறு ஜீவியத்தில் நிர்ப்பாக்கிய தண்டனைக்காளாவோம்.

## 2. பூரண பாக்கியம்

12. பூரண பாக்கியம் என்பதின் பொருள் என்ன ?

எவ்வித துன்பமும் தின்மையுமின்றி, நாம் ஆசிக்கும் நன்மை யாவும் சுகிப்பதோடு, அத்தகைய இன்பம் ஒருபோதும் நம்மைவிட்டுப் பிரியாது என்று நிச்சயமாயிருப்பதே, பூரண பாக்கியம் எனப்படும்.

13. ஏன் இவ்வுலக வாழ்வில் பூரண பாக்கியம் அநுபவிக்க முடியாது ?

ஏனெனில், இவ்வுலகில் நானாவித துன்பமும் தின்மையும் இருக்கின்றன ; நாம் ஆசிக்கும் நன்மை யாவும் அடைவதில்லை. நமக்குக் கிடைக்கும் இன்பசுகம் நம்மைவிட்டு எளிதில் அகன்று போகக்கூடும்.

**14. இதைத் திருஷ்டாந்தப்படுத்தும் சில உதாரணங்கள் கூறு.**

இவ்வுலக இன்பம் நமக்குத் திருப்தி உண்டுபண்ணுவதில்லை. அது அபரிமிதமாக இருந்தால், வெகுசீக்கிரம் நாம் சலிப்புற்று, மென்மேலும் அதிகமாய் ஆசிக்கிறோம்; இதுவுமின்றி, இன்பசுகம் நிறைந்த வாழ்வினால், நாம் திடனற்றவர்களும் அதைரியவான்களாகவும் ஆகிறோம். நமது திரேக சௌக்கியத்துக்கே அது இடையூறுகிறது. ஆஸ்தியினால் நாம் திருப்தி அடைவதில்லை. ஆஸ்தி பெருகப் பெருக ஆசையும் பெருகுகிறது. நம் கையிலுள்ள தனமும் எளிதில் நம் கைவிட்டுப்போகக் கூடியது. நிற்க, எவ்வளவு திரண்ட ஐசுவரியம் படைத்தவர்களானாலும், அசௌக்கியம், கவலை, முதலான பலவித கஷ்டங்கள் அவர்களுக்கும் இருக்கின்றன.

மகிமையோடுகூடிய அதிகாரத்துவமும் நம் மனதை ரம்மியப்படுத்துவதில்லை, அதனால் நமக்குக் கர்வமும் அகந்தையும் உண்டாகின்றன; யாரென்கிலும், நம்மைக் கனப்படுத்தாமல் நிராகரித்து உபேட்சித்தால், வெகுளி மேலெழும்பி நம்மை ஆட்கொண்டு வாதிக்கின்றது. மகிமையும், அதிகாரமும் எளிதாய் நாம் இழந்துபோகக்கூடும். அறிவு, சாமர்த்தியத் திறமையினால் நமக்குத் திருப்தி உண்டாகாது. கற்றது கையளவு கல்லாதது உலகளவு; அரிய பிரயாசையும் ஆக்கக்கூடாதவைகள் அனந்தம்.

திரேக சௌக்கியமும், திடகாத்திரமும் திருப்தியைக் கொடுக்கமுடியாது. ஏனெனில், மானிட சரீரம் நோய்க்கிருப்பிடம் என்பதுபற்றி, எக்காலமானாலும் வியாதி நம்மை அண்டக்கூடும்; பலவித அசந்தர்ப்பங்கள் நேரிடக்கூடும். சொற்ப காலத்துக்குள் வயது முற்றிப் பலவீனரும் ஆதரவற்றவர்களுமாகிறோம்.

கடைசியாய், எவ்வளவுதான் இன்பசுகம், ஆஸ்தி பாஸ்தி, மகிமை, அதிகாரம், அறிவு திறமை, தேக சௌக்கியம், திடகாத்திரம் நமக்கிருந்தாலும், நாம் மரிக்குங்காலம், இவை யாவும் நம்மை விட்டகன்றுபோம். மரணம் எவ்வளவு அருகாமையிலிருக்கிறதென்பது, நாம் எக்காலமும் அறியுந்தன்மையல்ல.

**15. புண்ணியத்தாலாகிலும் நமக்குத் திருப்தி இல்லையா?**

இல்லை; ஏனெனில், நமது புண்ணியம் மிகவும் குறைவுபாடானது. நாம் இருப்பதைவிட உத்தமர்களாக இருக்கத்தகும் என்று உணர்கிறோம். எப்போதும் தவறுதல்கள் உண்டாகின்றன. துர் ஆசாபாசம், துர்நாட்டம் இவைகளோடு போராடவேண்டியதாயிருக்கிறது. எதிர்காலத்தில் எவ்வித சோதனைகள்

வந்து நம்மை அலைக்கழிக்கக்கூடுமென்று நாம் ஒருக்காலும் ஏற்கனவே அறியக்கூடுமாயில்லை.

*16.* இவ்வுலக வாழ்வில் நமக்குக் கிடைக்கக்கூடுமான பாக்கியத்தை முழுவதும் நாம் அடைவதற்குச் செய்யவேண்டிய தென்ன?

தனவந்தனோ, தரித்திரனோ, பிரபுவோ, பிச்சைக்காரனோ, சுகவாழ்கனோ, நோயாளியோ, திறமையுள்ளவனோ, தெம்மாடியோ, எவனென்கிலும் சரி, எப்போதும் நன்மையைப் பயிற்சித்துத் தின்மையை விலக்குவதே, இவ்வுலக வாழ்வில் நாம் அடையக்கூடுமான பாக்கியமெல்லாம் பெறுவதற்கான உத்தம வழி. ஏனெனில், அவ்விதம் நடப்பதால், தேவ சித்தத்தின்படி நாம் நடக்கிறோமென்றும், அவருக்குப் பிரியப்பட ஜீவிக்கிறோமென்றும், மகத்தானதும், நமது ஏக விருப்பத்துக்குரியதுமான மறு உலக பூரண பாக்கியத்தை நாடிச்செல்கிறோமென்றாகிலும் நாம் அறிந்துகொள்ளலாம். "நற்குணமே நல்ல ஆஸ்தி; நன்மையே பாக்கியம்."

## 3. மறு ஜீவியம்

*17.* மறு ஜீவியம் உண்டென்று நாம் அறிவதெப்படி?

இப்பிரபஞ்ச ஜீவியத்திலும் மேன்மையான ஜீவியத்துக்காக உண்டாக்கப்பட்டிருக்கிறோம்; இந்த வாழ்விற்குரிய இன்பம் எல்லாம் மறைந்துபோவதுமன்றி நம்மை ரம்மியப்படுத்த இயலாது என்று நாமே உணர்கிறோம். பூரண பாக்கியத்தைப்பெற்று அனுபவிக்க நம்மில் ஒவ்வொருவருக்கும், இயல்பான நாட்டம் உண்டு. இத்தன்மையான நாட்டத்தைப் பூர்த்திபண்ணுவது கடவுளுடைய நோக்கமில்லையென்றால் நமது சுபாவத்தோடு இந்த விருப்பத்தைச் சேர்த்திருக்கமாட்டார் இந்த விருப்பம் மறு ஜீவியத்தில்மட்டும், பூரண திருப்தி அடையக்கூடும் என்பதும் நாம் இயல்பில் உணருவதே. கடைசியாக, மனித ஜென்மம் ஒருப்பட, நாகரீகத்தின் கொடு முடியை அடைந்தவர்களும், நாகரீகத்தின் நாமமேயறியாச் சுத்தக்காட்டு மிராண்டிகளும் யாவரும், மறு ஜீவியம் உண்டென்று நினைத்து வந்திருக்கிறார்கள். உலகப் பிரசித்திபெற்ற இத்தகைய எண்ணம் சத்தியமாகவே இருக்கவேண்டும்.

*18.* மறு ஜீவியம் நல்லோருக்குப் பாக்கியமும், தீயோர்க்குத் துன்பம் நிறைந்ததாகவும் இருக்குமென்று நமக்கு எப்படித் தெரியும்?

கடவுள் நீதியுள்ளவர்; நம்மில் ஒவ்வொருவரையும் ஏற்ற பிரகாரம் நடத்துவார் என்பதினால் அறியலாம்.

**19.** நற்கிரியைகளுக்குச் சன்மானமும், துர்கிரியைகளுக்குத் தண்டனையும் ஏற்றதென்று சொல்வது என்ன காரணத்தினால்?

இதற்குக் காரணம் நமது சுபாவ அறிவே. இயல்பில், நமது அறிவே இதை நமக்குப் புகட்டுகிறது. நாமும் நன்மை செய்பவர்களுக்குச் சன்மானம் அளித்து, தின்மை புரிகிறவர்களைத் தண்டிக்கிறோமல்லவா? இப்படிச் செய்வதும் நீதியென்று உணர்கிறோம். அற்ப அறிவுள்ள நாம் இவ்விதம் செய்ய, சர்வ ஞானக்கடலாகிய கடவுள், தமது கற்பனையை அநுசரிப்பவர்களுக்குச் சன்மானம் கொடுப்பதும் மீறுகிறவர்களைத் தண்டிப்பதுமே தகுதியென்று உணர்வாரன்றோ?

**20.** இதிலிருந்து நாம் அறிவதென்ன?

நமது ஜீவியகாலத்தின்போது, எவ்வேளையும் நன்மையானதைச் செய்து, தின்மையைத் தவிர்த்துவருவது நமது அதி முக்கியமான அலுவல்; ஏனெனில், கடவுளால் நமக்குச் சித்தம் பண்ணப்பட்டிருக்கும் பூரண பாக்கியத்தைப் பெறுவதற்கு நிச்சயமான வழி இஃதொன்றே.

---

## 2-ம் அதிகாரம்

## மறு ஜீவியத்தைப்பற்றிய வேறு விஷயங்கள்

### 1. மறுஜீவிய நிருபணம்

**21.** சகல ஜாதி மனிதரும் மறு ஜீவியம் ஒன்று உண்டென்று சொல்வதற்குக் காரணம் என்ன?

மரணத்தோடு எல்லா வாழ்வும் முடிந்தது என்று நினைப்பதுமுதலாய் மனித சுபாவத்துக்கு அருவருப்பாயிருக்கிறது. நாம் இருக்கிறோம், எப்போதுமே இருப்போம் என்கிற பூரண விசுவாசம் நம்மில் உண்டு. இவ்வித உணர்ச்சிகள் வனாந்தரத்தில் வசிக்கும் நாகரீகமற்ற ஜனங்களுக்கும் இருக்கின்றன. ஆகையால், இந்த உணர்ச்சிகள் இயற்கையைச் சேர்ந்தவை; மறு ஜீவியம் உண்டென்று நாம் அறிவதற்காகக் கடவுளே, இவ்வுணர்ச்சிகளை நம்மில் உண்டுபண்ணியிருக்கிறாரென்று சொல்லவேண்டியதாகிறது.

**22.** இளைஞர், இவை யாவும் உணர்கிறார்களா?

அவர்கள் இவற்றை முற்றும் உணர்வதில்லையென்கலாம்; ஏனெனில் இளம்பருவத்தில், யோசிக்கும் தத்துவங்களும், ஆழ்ந்த உணர்வுகளும் முழு பிராப்தி அடைந்ததில்லை.

ஆனால் யாராவது இதைப்பற்றிப் பேசினால், உடனே அது அவர்களுக்கு இயல்பாய்த் தோன்றும். வயதில் முதிர முதிர, அதன் உண்மை அறிவையும் அதிகமதிகமாய்க் கண்டுணர்கிறார்கள்.

23. இவ்வபிப்ராயம் சத்தியமென்று உறுதிப்படுத்துவதற்கான நியாயங்கள் எவை?

இதை உறுதிப்படுத்துவதற்கான நியாயங்கள் நான்கு கூறலாம் :—

(1) முதல் நியாயம் இயற்கையினின்று இலங்குகிறது :

இயற்கையில் ஏற்பட்டுள்ள ஒவ்வோர் சுய நாட்டத்துக்கும், அதற்கு உரித்தானதும் அது அடையக்கூடியதுமான ஒரு மெய்யான கதி உண்டு. தாவரங்கள் தாங்கள் வளர்வதற்காக, உணவை உறிஞ்சத் தேடுகின்றன ; அவற்றிற்கு உணவுப் பொருள் திட்டப்படுத்தியிருக்கிறது. மிருகங்கள் உணவையும் சுகபோகத்தையும் நாடுகின்றன ; சுகபோகமும் உணவும் அவை கைவசம் அகப்படுகின்றன. கண், பார்ப்பதற்காக உண்டாக்கப்பட்டது ; பார்ப்பதற்கான பொருட்கள் இருக்கின்றன. கேட்பதற்காகக் காது அமைக்கப்பட்டது ; கேட்பதற்கான சத்தங்கள் உண்டு. ஆண் மிருகங்களுக்குப் பெட்டையின்மீது சுபாவத் தேட்டம் உண்டு. பெட்டைகளும் அவற்றிற்கு கிடைக்கின்றன. கன்றுகள் ஈன்ற விருப்பம் உண்டு, கன்றுகளும் உண்டாகின்றன, இப்படியே, மற்றநேக விஷயங்களிலும்.

இவ்விதமாக தாவர ஜீவஜெந்துக்களில் (தாழ்ந்த) சுபாவநாட்டம் யாவும் சித்திபெற்றுவருவதாயிருக்கக்கொள்ள, மனிதனின் உன்னதத் தத்துவங்களுக்கு ஏற்பட்டுள்ள சுபாவநாட்டம் சித்திபெறவேண்டுவதில்லையா? சத்தியத்தையும் நன்மைத்தனத்தையும் கண்டுணர மானிட புத்தி இயற்றப்பட்டிருக்கிறது ; கண்டுணர்வதற்கான சத்தியமும் நன்மைத்தனமும் கிட்ட இருக்கின்றன. மனச்சுதந்தரம் இருப்பதால், பகுத்துத் தெரிந்து கொள்ளத்தக்கபொருட்களும் மனதின் கண்முன், வந்துகொண்டேயிருக்கின்றன. ஆனால் மானிட சுபாவம் ஒருபட பூரண பாக்கியத்தையும் நல்விருப்பையும் நாடுவதுபற்றி, அத்தகைய பாக்கிய பூர்த்தி எங்கேனும் காணப்பெறவேண்டுவது அவசியமாகிறது. இவ்வுலகில் அவ்விதமான பாக்கியம் பூரணமாய்ப் பெறக்கூடாதென்றிருப்பதால், அதை முற்றிலும் பெறுவதற்கேற்ற வேறொரு ஜீவியம் இருக்கவேண்டுமென்பது தேற்றம்.

(2) தெய்வ சம்பூரணம், இரண்டாவது நியாயத்தை வெளிப்படுத்துகிறது :

கடவுள் சர்வ ஞானமும் நிறைந்துள்ள சத்தியவாளர். ஆகவே, நம்மில் சித்திபெறக்கூடாத சுபாவநாட்டம் யாதாவது இருக்குமானால், அதை இயற்றிய சிருஷ்டிகரின் சத்தியத்துக்கு அது விரோதமாகும். மேலும், அடையக்கூடாத பொருளின்மீது நமது சுபாவத்தில் நாட்டத்தை இயற்றினால், நம்மைக் கடவுள் ஏமாற்றினதுபோலாகும். இதுவும் அவரது சத்தியத்துக்குப் பொருந்தாது. கடவுள் நன்மைத்தனமும் நீதியுமுள்ளவர்; நன்மையும் தின்மையும் பகுத்துத் தெரிந்துகொள்ளும்படியான மனச்சுதந்தரம் நமக்குக் கொடுத்திருப்பதால், நன்மைக்குச் சன்மானமும், தின்மைக்குத் தண்டனையும் அளிப்பாரென்பது வெளிப்படை. ஆனால் இவ்வுலகில் தக்க மேரையாய் சன்மானம், தண்டனை சம்பவிப்பதில்லை; ஏனெனில், அநேக சமயங்களில் நல்லோர் துன்புறுவதும், தீயோர் செழிப்புற்றோங்குவதும் இவ்வுலக அனுபவம். ஆகையால், யாவருக்கும் நீதிப்பிரகாரம் கைமாறு கிடைக்கக்கூடிய வேறொரு ஜீவியத்தை நாம் எதிர்பார்க்கவேண்டும்.

(3) மூன்றாவது நியாயம் ஒப்பனையால் ஏற்படுகிறது:

பகுத்தறிவில்லா மிருகங்களும், தங்கள் சுபநாட்டச் சட்டப்பிரகாரம் நடந்து, தங்கள் ஆசையை பூர்த்திபண்ணுகிற இன்ப சௌகரியத்தை அடைந்துகொள்கின்றன. ஆகையால் (அறிவுள்ள) மனிதர், அறநெறி மார்க்கத்தைப் பின்பற்றுவதால், தங்களைப் பூரிப்பிக்கக்கூடியதான பூரண பாக்கியம் கிடைக்குமென்று நம்புவது நியாயமே.

(4) நமது சுபாவ அறநெறி ஏவலே நான்காவது நியாயம்:

புண்ணியம் இப்பிரபஞ்ச வாழ்விற்கேற்ற நன்னடத்தை மட்டுமன்று; அதற்கு இன்னும் ஆழ்ந்த கருத்தும் மதிப்பும் இருக்கிறதென்று நாம் யாவரும் உணர்கிறோம். ஏனெனில், புண்ணியம் அரிய பெரிய பிரயாசையால் ஆகும் நற்குண பான்மை; நமது ஜீவியகால முழுவதும் அதற்காக இடைவிடாது உழைக்கவேண்டியதிருக்கிறது. மரித்தவுடன், நமது ஜீவியமே (நாம் ஒன்றுமில்லாமையாய் போய்விடுவதினால்) முற்றிலும் முடிந்துபோகிறதாயிருந்தால், புண்ணியத்தைத் தேடுவதில் நாம் படும் பிரயாசை வீண் என்னத்தகும்; புண்ணியத்தால் பலன் இல்லாதிருக்க அதைத் தேடுவானேன்? அதற்கு மாறாய், நமது பிரயாசையின் பலன் வேறொரு ஜீவியத்தில் நீடித்திருக்குமானால் புண்ணியத்தையடையப் பிரயாசைப்படுவது நியாயமாகத் தோன்றும். இல்லாவிடில், புண்ணியம் எனும் பதமே அர்த்த சாரமற்ற மொழியாகும். நித்தியகாலமும் சுகித்தனுபவிக்கக்

கூடிய பாக்கியம் ஒன்று உண்டென்று நமக்கு நிச்சயமாயிருந்தால் மாத்திரம், பாக்கியமாயிருப்பதற்காகப் பிரயாசைப்படுவது நியாயமாகும். செத்தவுடனே, எல்லாம் முடிந்துபோயிற்று என்றிருக்குமானால், புண்ணியத்தை அடைந்து என்ன பிரயோசனம்?

**24.** மறு ஜீவியம் உண்டென்று நம்புவதற்குக் கடவுள் ருவர் உண்டென்று முதன்முதல் நம்புவது அவசியமா?

கடவுள் உண்டென்று நாம் விசுவசியாவிடினும், இயல்பிலே நமக்கு ஏற்பட்டுள்ள, மறு ஜீவியத்தைப்பற்றிய நம்பிக்கையும் ஆசையும் நம்மில் இருந்துவரும்; ஆயினும் கடவுள், உண்டென்று விசுவசிக்காமல் மறு ஜீவியம் உண்டென்று நாம் நிரூபிக்கமுடியாது. மேற்கூறிய சுபாவ ஆசையும் நம்பிக்கையும் என்னவென்று முதலாய்க் கண்டுபிடிக்க முடியாது.

## 2. இவ்வுலக ஜீவியம்

**25.** இவ்வுலக ஜீவியத்துக்கும், மறு ஜீவியத்துக்குமுள்ள தொந்தார்த்தம் யாது?

இந்த ஜீவியம் மறு ஜீவியத்துக்காக ஆயத்தப்படுத்துங் காலம்; அதற்காக நம்மைப் பரீட்சிக்கும் காலம் இது.

**26.** பரீட்சை என்பதின் பொருள் என்ன?

பரீட்சை என்றால், சோதனை அல்லது சீர்தூக்கிப் பார்த்தல் எனப் பொருள்படும்; நமக்கிருக்கும் தத்துவங்களையும், காலத்தையும் என்னவிதமாய் உபயோகிக்கப்போகிறோம் என்று சோதித்துப் பார்த்தல்: நமது கடைசிக் கதியாகிய பாக்கியத்தை அடையவேணுமென்பது நமது தீர்மானமா அல்லது அதை இழந்துபோவது நமது தீர்மானமா என்று பார்த்தறிதல்தான் பரீட்சை என்பதின் அர்த்தம்.

**27.** எவ்வளவு காலம் இந்த சோதனை நீடித்திருக்கும்?

இந்த ஜீவியம் உள்ள அளவும் நமது சோதனை நீடித்திருக்கும்; சாகும் க்ஷணம் அது முடிவுபெறுகிறது.

**28.** இவ்விதம் கூறுவதற்கு முகாந்தரங்கள் எவை?

முதலாவது. இந்த ஜீவியம் நிச்சயமாகவே ஒரு சோதனை; எவ்வித சோதனையும் ஒருக்கால் முடிவுபெறவேண்டியது அவசியம். அல்லாவிடில் அதைச் சோதனை என்று கூறுவது தகாது. இந்த ஜீவியம் முடிந்ததும் நமது சோதனையும் முடியும் என்று சொல்வது நியாயமாய்த் தோன்றுகிறது; ஏனெனில் அதற்குப் பிறகு வேறு ஏதாவது சோதனை இருக்கும் என்பதற்கு யாதொரு காரணத்தையுங் காணோம்.

இரண்டாவது: இந்த ஜீவியம் விளையாட்டுக் காரியமல்ல; அது அதிக கவனத்துக்குரியதென்றும் அதில் அதிகப் பொறுப்பு அடங்கியுள்ளதென்றும், நமது நல்லுணர்ச்சிகளே நமக்குப் புகட்டுகின்றன. ஆனால், அதனால் விளையும் பலன் வெகு முக்கியமான விஷயமாயிருந்தாலன்றி, மனிதர் அதில் தங்கள் கவனத்தைச் செலுத்தவும், அதில் அதிக பொறுப்புண்டென்று நினைக்கவுங் கூடுமா?—இந்த ஜீவியத்திற்குப் பிறகு, வேறொரு சோதனை இருந்தால், இவ்வுலக ஜீவியத்தின் சோதனை யாதொரு பயனற்றதாகும். வேறொரு சோதனை இருக்கும்பட்சத்தில், இந்த ஜீவியத்தை மனுஷன் ஒரு பொருட்டாக எண்ணமாட்டான். இந்த ஜீவியத்தில், நான் என் இஷ்டப்பிரகாரம் நடந்து கொள்வேன், கடவுளைக் கவனிக்கமாட்டேன், மறு ஜீவியத்தில் கிரமமாய் நடந்துகொள்ளலாம், எல்லாம் இறுதியில் சரியாய்ப் போகும், என்று எவனும் சொல்லக்கூடுமல்லவா?—அதற்கு மாறாய், எப்போதைக்கும் நமக்குக் கிடைக்கும் பாக்கியம் அல்லது நிர்பாக்கியம், இந்த ஒரு ஜீவியத்திலேயே நேரிடும் காரியமாகக் கொண்டால், ஒருவனும் மேற்கூறியவண்ணம் சொல்லமாட்டான். கடவுள் கட்டளைப்பிரகாரம் இப்போதுதானே நடந்துகொள்ள வேணும்; தவறினால் பொல்லாப்பு விளையும் என்று எண்ணி ஜீவியத்தை நடத்திவருவான்.

*29.* இதனால் நாம் அறிவதென்ன?

செத்தபிற்பாடு எல்லாம் பார்த்துக்கொள்ளலாம் என்று புத்தியுள்ள எவனும் புகலத் துணியான்; இச்சமயம் தவறினால் எச்சமயமும் கிட்டாது என்பதை உறுதியாகக்கொண்டு, எதிர் காலத்தில் எதிர்பார்க்கத்தக்க பாக்கியத்துக்காகச் செய்ய வேண்டியதெல்லாம் இப்பொழுதே செய்து முடிக்கத்தகும்.

## 3. மறு ஜீவியத்தின் தன்மை

*30.* மறு ஜீவியத்தில் நமக்குக் கிடைக்க இருக்கும் பாக்கியம் எத்தகையது?

நீதி சாஸ்திரிகள் பின்வருமாறு இதைப்பற்றிக் கூறியிருக்கிறார்கள்:—

(1) சத்தியத்தைத் தீர உணர்வதும், கலப்பில்லா நன்மையை கைக்கொண்டு களிப்பதுமே, நமது மேலான ஆவல். உண்மைச் சத்தியம் பூரணமாயுள்ளதும், நன்மைத்தனத்தை முற்றிலும் அடங்கியுள்ளதுமான வஸ்து கடவுளைத்தவிர வேறொன்றுமில்லையாதலால், நம்மாவியன்றமட்டும் அவரை அறிந்து அவரை நேசிப்பதே மேலான பாக்கியம்.

(2) அவரை அறிந்து சிநேகிப்பதால் நமக்குண்டாகும் இன்பமும், அது ஒருக்காலும் இழந்துபோகக்கூடியதல்ல என்னும் நிச்சயமும் நமது பாக்கியத்தைப் பூரணமாக்கும்.

(3) பூரண பாக்கியத்துக்கு வேறு ஏதாவது அவசியமானல், அதையும் நாம் அடைவோம்.

31. மறு ஜீவியத்தில், நமது சரீரம் நம்முடன் இருக்குமா?

இது விஷயமாக, நமது புத்தியினுல் நாம் ஊகித்துக் கொள்ளக்கூடியது வெகு வெகு சொற்பம். மானிட சரீரம், மனிதனின் ஒரு பிரதானமான பகுதியானதுபற்றி, அது மறு ஜீவியத்தில் மீண்டும் நம்முடன் இருக்குமென்று நம்புவதற்கு இடமுண்டு. ஆனல், நமது ஆன்மா தேகமின்றி ஜீவிக்கக் கூடியது; சில சமயம், தேகமில்லாமலும், பாக்கியமாயிருக்கக் கூடும். ஆகையால் தப்பறையின்றி நாம் இது விஷயமாக, ஏற்றுக் கொள்ளத்தக்கது ஒன்றுண்டு; அது யாதெனில்: மனிதனின் பூரண பாக்கியத்துக்கு அவனது சரீரம் அவசியமாயின், எவ்வகையினும் அது மீண்டும் அவனுக்குக் கொடுக்கப்படும்.

32. தீயோருக்கு எவ்விதமான தண்டனை கிடைக்கும்?

கடவுளைவிட்டு விலகி அவரை இழந்துபோனேமே, பாக்கியமாயிருப்பதற்கு நமக்கு இனி வழியில்லையே என்ற ஏக்கந் தான் அவர்களுக்கு ஏற்படும் பிரதான தண்டனை. இதுவுமன்றி, வேறு ஏதாவது திட்டமான தண்டனையும் இருக்குமென்று நாம் சந்தேகமறச் சொல்லலாம்.

33. தீயோரின் துன்பம் (தண்டனை) எப்பொழுதாகிலும் தீருமா?

அது ஒருக்காலும் தீராது என்று சொல்வதற்குப் பலத்த காரணங்கள் உண்டு.

34. இக்காரணங்கள் எவை?

அவையாவன :—

(1) யாதொரு சட்டத்தை மீறுவதினுல் ஏற்படும் தண்டனை, சட்டத்தின் கனகனத்துக்கும், சட்டத்தை இயற்றியவருடைய மகத்துவத்திற்கும் ஏற்றதாயிருக்கத்தகும். கடவுளின் சட்டம், மற்றச் சகல சட்டங்களிலும் கனமானது; கடவுளின் மகத்துவம், மற்றெந்த மகத்துவத்தையும்விடச் சிறந்தது என்பதும் வெளிப்படை. ஆகையால் அவர் கொடுத்த சட்டத்தை மீறுவதனுல் ஏற்படும் தண்டனை, சகலவித தண்டனைகளிலும் கண்டிப்பாயிருக்கும்.

(2) இவ்வுலகில் பெரும் பாதகங்களுக்கு மரணத் தண்டனை விதிக்கப்படுகின்றது; இத்தண்டனையால், குற்றஞ் செய்தவன், எந்த இராச்சியத்தின் சட்டத்தை மீறினனே, அவ்விராச்சியத்தினின்று அறவே நீக்கப்படுகிறான். இவ் வண்ணமே, கடவுளின் சட்டத்தை மீறினவன், அவருடைய இராச்சியமாகிய மறு ஜீவியபாக்கியத்தினின்று, முற்றிலும் நீக்கப்படுவதே தகுதி.

(3) கடவுளுடைய சட்டத்தை அனுசரிப்பதினால் மாத்திரம் நாம் மறு ஜீவிய பாக்கியத்தை அடைந்துகொள்ளலாம் என்றிருப்பதால், ஒரு தடவை, இரண்டு தடவை, நாம் பாவம் செய்த பின்னும் நாம் நமது பரம கதியை இழந்துபோகாமல், இன்னும் அதை அடைவதற்கான காலத்தை கடவுள் நமக்குக் கொடுப்பதே, அவரது கருணையின் சிறந்த கிரிகையாயிற்றே. அப்படியிருக்க, தன் ஜீவியகால முழுவதும் அவரது கட்டளையை மீறி, பச்சாத்தாபப்படாதவன், சொற்ப காலம் தண்டனைக்குள்ளான பிறகு, நித்திய பாக்கியத்தை அடையக்கூடுமானால் கடவுளுடைய கட்டளைகளும் நிபந்தனைகளும் விளையாட்டுப்பிள்ளைச் சட்டமாகும்; அதனால், கடவுளே பகடிக்குரியவராவார்.

(4) நல்லோருக்குக் கடவுள் நீடூழிகாலம் நிலைக்கும் பாக்கியத்தை வாக்களித்திருப்பதால், தீயோர்க்கு அவர் இடும் தண்டனையும் நித்தியகாலம் நிலைத்திருக்கத் தகுமென்பது நியாயந்தானே.

இவை தவிர, வேறு சில காரணங்களும் கூறலாம்:—

(1) ஒருவன் தன் ஜீவியகாலமுழுவதும் துர்நடத்தையில் செலவழித்தபின், சிறிதுகாலமட்டும் சிக்ஷைபெற்று விடுதலையாகி, இறுதியில் பூரண பாக்கியம் பெறுவானாகில், "எனது சோதனைகால முழுவதும், துராகிர்தமாய் ஜீவித்தால், என்ன மோசம் வந்துவிடும்; அதற்காகத் துன்பப்படவேண்டியிருக்கும். வாஸ்தவம், ஆகிலும் பரவாயில்லை; இறுதியில் எல்லாம் ஒழுங்காய்ப்போகும்" என்று சொல்லித் துணிகரமாய் மனிதர் தேவ சட்டத்தை மீறக்கூடுமல்லவா?

(2) தண்டனை முடிவுபெறுகிறதாயிருந்தால், நல்லோரும் தீயோரும் சரிசமானமாகிவிடுவார்கள். "புண்ணியத்தைத் தேடுவதில் நாம் பட்ட பிரயாசையினால் என்ன பலனைக் கண்டோம்; ஜீவியகாலமெல்லாம், துராகிர்தமாய் நடந்து, புண்ணியத்தின்மட்டில் அற்பக் கவனமுமில்லாமல் ஜீவித்தவர்களும், இப்போது நம்மைப்போல் பாக்கியமாயிருக்கிறார்களே, இந்த பாக்கியத்தை அடைய அவர்கள் செய்துகொண்டதென்ன, ஒன்றுமில்லை. நாமும் அவர்களைப்போல், உலக ஜீவியத்தின்

போது, இச்சையைத் தண்டிக்காமல் நடந்திருக்கலாமே" என்று நல்லோர் தங்கள் நன்னடத்தையைப்பற்றியே குறைவாய் மதிக்கக்கூடும்.

(3) தீயோரின் தண்டனை சிறிதுகாலந்தான் இருக்கும் அதன்பின் முடிந்துபோகும் என்கிற எண்ணமானது, இந்த ஜீவிய காலத்தின்மட்டில் நமக்கிருக்கவேண்டிய கவனத்தையும் அக்கறையையும் அறவே நீக்கிப்போடும். அவ்விதமின்றி, நித்திய காலமும் தீயோர் தண்டனை அடைவதாயிருந்தால், இந்த ஜீவியம் வெகு பிரதானமான கடமைகள் நிறைந்தது, கடவுளது சட்டத்தை மீறுவது கனமான காரியம், அதன்மட்டில் வெகு எச்சரிக்கைக் கொண்டிருக்கவேணும் என்று நமக்குத் தெளிவாய் புலப்படும். நித்தியகாலத் தண்டனையின் நினைவானது, எந்தப் பாவத்தையும், நாம் என்ன சிரமப்பட்டும் விலக்கும்படியாக நம்மை எப்போதும் ஏவித்தூண்டும். நமது நடத்தையில்தான் பாக்கியமும் நிர்ப்பாக்கியமும் அடங்கியிருப்பதாக நிதானித்து நமது நடத்தையின்மட்டில் விசேஷ கவனமுற்றிருப்போம்.

குறிப்பு :—இதுவரை கூறியுள்ள யாவும் நமது புத்தியின் தத்துவத்தைக்கொண்டு நாம் அறியக்கூடியவை என்பதையும், விசுவாசத்தினுல் இவ்விஷயங்களைப்பற்றி நாம் அறிந்துள்ளவை இன்னும் அநேகம் உண்டு என்பதையும், நமது கத்தோலிக்கு நண்பர் கவனிப்பார்களாக !

---

## 3-ம் அதிகாரம்

## ஜீவிய சட்டம் அல்லது நமது கதியை அடையும் விதம்

### 1. தக்கது எது, தகாதது எது எனும் சட்டம்

**35. கடவுள் நமக்கருளிய ஜீவிய சட்டம் எது ?**

நினைவு, வாக்கு, கிரிகைகளில் தக்கதைச் செய்வதும் தகாததைத் தவிர்ப்பதுமே ஜீவிய சட்டம் எனப்படும்.

**36. இச்சட்டத்தைக் கடவுள் நமக்குக் கொடுப்பானேன் ?**

ஏனெனில், கடவுள் நல்லவர், நாமும் நல்லோராயிருக்கும்படி அவர் நம்மை உண்டாக்கினதால், இந்தச் சட்டம் ஏற்பட்டது. மீளவும், பூரணபாக்கியம் நமக்குக் கிடைக்கக்கூடும் என்கிற நம்பிக்கையையும் நமது இயல்பில் நமக்குத் தந்து, இந்த ஜீவிய சட்டத்தை அநுசரிப்பதால் பூரண பாக்கியத்தைச் சுதந்தரித்துக்கொள்ளும்படியாகச் செய்திருக்கிறுர்.

37. சகல நற்கிருத்தியங்களும் செய்ய நமக்குக் கடனு?

இல்லை; நம்மால் இயன்ற அளவு செய்வது நல்லது; ஆனால் கடமையாகத் தோன்றுபவைகளைமாத்திரம் செய்யக் கடன்.

38. இதற்குச் சில உதாரணங்கள் கூறு.

தர்மம் கொடுப்பது எச்சமயமும் நற்கிரிகைதான்; ஆனால், மெய்யாகவே கஷ்டதசையிலிருப்பவர்களுக்கன்றி, மற்றவர்களுக்குத் தர்மம் புரியக் கடமை இல்லை. கடவுளைத் தினந்தோறும் அடிக்கடி பிரார்த்திப்பது சுகிர்தம்; ஆனால் சில சமயங்களில் பிரார்த்திக்கவேணுமென்பதுதான் கடமை.

39. சகல துர்க்கிருத்தியங்களையும் விலக்கக் கடமையுண்டா?

துர்க்கிருத்தியங்கள் யாவும் விலக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்; துர்க்கிரிகைகள் மாத்திரமன்று, துர்வார்த்தைகள் துர்நினைவுகளையும் விலக்கவேண்டும்.

40. வார்த்தைகளையும், நினைவுகளையுங்கூட விலக்குவானேன்?

ஏனெனில், வார்த்தைகள் நாவின் கிரிகை; நினைவுகளோ மனதின் கிரிகை.

41. துர்வார்த்தைகளை ஏன் விலக்கவேண்டும்?

ஏனெனில், நமக்கருளப்பட்ட பேசும் தத்துவத்தை அவற்றால் துர்ப்பிரயோகம் செய்கிறோம்; நமக்கும், பிறருக்கும் அவற்றால் தீங்கு விளைகின்றது.

42. துர்நினைவுகளைத் தவிர்ப்பானேன்?

முதலாவது, அவை, இயல்பிலே தின்மையானவை; இரண்டாவது, அவற்றால் கெட்ட ஆசை மனதில் கிளம்பி, கெட்ட கிரிகைகளுக்குக் காரணமாகின்றது.

43. சகல துர்நினைவுகளையும் தவிர்க்க நம்மால் இயலுமா?

துர்நினைவுகள் ஒருக்காலும் மனதில் பிரவேசியாவண்ணம் நாம் தடுக்கமுடியாது; ஆனால், அவற்றை அருவருத்துத் தள்ளிவிடவும், அவற்றிற்கு நாம் சம்மதியாமலிருக்கவும் நம்மால் எப்போதும் சாத்தியப்படும்.

## 2. இந்த ஜீவிய சட்ட நிர்மாணத்துக்குரிய காரணங்கள்

**44. சட்டம் என்றால் என்ன?**

அதிகாரம் செலுத்துவோன், தனது அதிகாரக்குடையின் கீழ்ப்பட்டவர்கள் அநுசரிக்கும்படியாக நியமிக்கும் ஓர் கட்டளைக்குப் பொதுப்பட '**சட்டம்**' என்ற பெயர் பொருந்தும்.

**45. கடவுளுக்கு நம்மை ஆளும் அதிகாரம் இருப்பானேன்?**

அவர் நமது சிருஷ்டிகர்; நம்மில் உள்ள யாவும், நமக்குள்ள யாவும் அவரே நமக்குக் கொடுத்தவர். ஆகையால், அவர் நமது எஜமானன்; (ஆண்டவர் என்பதும் அதுவே). நாம் அவரது சட்டதிட்டங்களுக்குக் கீழ்ப்படியவேண்டியவர்கள்.

**46. கடவுளுடைய சட்டத்துக்குக் கீழ்ப்படியவேணுமென்பது நமக்குக் கடமையா?**

ஒருதிறத்தாருக்கு உரிமையுண்டானால், மறுதிறத்தாருக்குக் கடமையுண்டு; இஃதின்றி, அஃதில்லை. இரண்டும் இணைபிரிக்கக்கூடாதவை. கடவுளுக்குக் கட்டளையிடும் உரிமையுண்டு; ஆகையால் நமக்குக் கீழ்ப்படியக் கடமை உண்டு.

**47. கடவுள் நற்கிரிகைகளைக் கற்பிப்பானேன்?**

அவர் நன்மையானவர்; அவரைப்போல் நாமும் நல்லவர்களாயிருக்கும்படி நம்மை உண்டாக்கினார். நாம் எவ்வளவுக்கு நல்லவர்களாயிருக்கும்படி நம்மை உண்டாக்கினார். நாம் எவ்வளவுக்கு நல்லவர்களாயிருப்போமோ, அவ்வளவுக்கு அவர் நம்மீது பிரியப்படக்கூடுமேயல்லாது வேறல்ல. இது காரணம்பற்றி, நற்கிரிகைகளைக் கற்பிக்கிறார்.

**48. துர்க்கிரிகைகளை விலக்கும்படி ஏன் கற்பிக்கிறார்?**

ஏனெனில், நன்மையும், தின்மையும் ஒன்றுக்கொன்று ஒவ்வாதன; துர்க்கிரிகை நம்மைக் கெடுத்து, நம்மைக் கடவுளின் விருப்பத்துக்கு விரோதிகளாக்குகின்றது.

**49. கடவுள் கற்பித்ததினால்மாத்திரம், ஒரு கிரிகை நல்லது அல்லது தீயது என்று தீர்க்கிறதா?**

இல்லை; அதற்குமாறாய், அவை தம்மிலே நல்லவை அல்லது தீயவை ஆனதுபற்றிக் கடவுள் அவற்றை செய்யவோ, அல்லது விலக்கவோ கற்பித்திருக்கிறார் என்கவேணும்.

**50. சில கிரிகைகள் தம்மிலே நல்லவை என்பானேன்?**

இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு; முதலாவது, கடவுள் நமக்கருளின தத்துவங்களின் நற்பிரயோகத்தை அவை

காட்டுகின்றன. இரண்டாவது, அவை நமக்காவது, பிறருக்காவது அல்லது கடவுளுக்கே நன்மை செய்கின்றன.

51. தம்மிலே தீயவை என்று சில கிரிகைகளைக் கூறுவது ஏன்?

இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு; முதலாவது, இவற்றால் கடவுள் நமக்கருளின தத்துவங்களின் துர்ப்பிரயோகம் ஏற்படுகிறது; இரண்டாவது, இவற்றால், நமக்கென்கினும், பிறருக்கென்கினும், கடவுளுக்கென்கினும் தின்மை நேரிடுகிறது.

52. சில உதாரணங்கள் சொல்லு.

அளவுப்படி (மட்டாக) சாப்பிடுவதும், குடிப்பதும் நற்கிரிகைகள், ஏனெனில், நமது நாட்டத்தின் நற்பிரயோகம் இது; இவற்றால் நமது சுகத்திற்கு நன்மையுண்டு. குடிவெறியும், காமாதூரமும் துர்க்கிரிகைகள். ஏனெனில் அவை நமது நாட்டத்தைத் துர்ப்பிரயோகம் பண்ணுவதால் உண்டாகிறவை: அவற்றால் நமது சுகத்துக்குக் கேடு விளைகின்றது.

மெய்மொழியும், கபடற்ற நடத்தையும் நற்கிரிகைகள், ஏனெனில், இவை இரண்டும் பிறருக்கு நன்மை புரிகின்றன. பொய்மொழியும், வஞ்சகமும் தீயவை; ஏனெனில் இவை பிறருக்குத் தீங்கு வருவிக்கின்றன.

கடவுளைத் துதித்தல் அல்லது வழிபடல் நற்கிரிகை; ஏனெனில், கடவுளுக்கு உரித்தான சங்கையை அது காண்பிக்கின்றது. தேவதூஷணமும், தெய்வ இகழ்ச்சியும் (தேவனைத் தூஷிப்பது அல்லது இகழ்ச்சியாய்க் கூறுவது) தீயவை; ஏனெனில் கடவுளுக்கு இவற்றால் அவசங்கை ஏற்படுகிறது.

### 3. இச்சட்டச் சங்கிரகம்

53. இந்தச் சட்டத்தைச் சுருங்கச் சொல்லு.

இரண்டு வாக்கியங்களில் அதை அடக்கிக் கூறலாம். முதலாவது, நமது தத்துவங்கள் யாவையும் கடவுள் அவற்றை இயற்றின கருத்துக்காகப் பிரயோகம் பண்ணவேண்டும்; துர்ப்பிரயோகம் செய்யலாகாது. இரண்டாவது, கடவுளுக்கும், நமக்கும், பிறருக்கும் நன்மையானவைகளையே எப்போதும் செய்யத்தகும்.

குறிப்பு:—நமது தத்துவங்களின் நற்பிரயோகம் துர்ப்பிரயோகத்தைப்பற்றி இப்புஸ்தகத்தின் இரண்டாவது பாகத்திலும் கடவுள்மட்டிலும், நம்மட்டிலும், பிறர்மட்டிலும் நமக்குள்ள கடமைகளைப்பற்றி நான்காவது பாகத்திலும் விரிவாய்க் கூறப்படும்.



# 4-ம் அதிகாரம்

## சட்டத்தை அறிவது அல்லது புத்தியும் மனச்சாட்சியும்

### 1. மனச்சாட்சியின் குரலொலி

*54. தக்கது இது, தகாதது அது என்று நாம் அறிவதெப்படி ?*

நமது புத்தியே நமக்கு இதைப் புகட்டுகிறது.

*55. இது எப்படியாகும் ?*

கடவுளது நோக்கப்பிரகாரம் நமது தத்துவங்களைப் பிரயோகிப்பது ஒழுங்கு ; நம்மட்டிலும், பிறர்மட்டிலும், கடவுளுக்கும் நியாயமாய் நடப்பது கிரமம் ; இதற்கு விரோதமான நடத்தை தகாது என்று நமது புத்தி நமக்கு உரைக்கின்றது.

*56. தகுந்ததைச் செய்வதும், தவறுதலானதைத் தவிர்ப்பதும் நமது கடமையென்று நாம் எதினால் அறிந்துகொள்ளுகிறோம் ?*

இதை நமக்கு அறிவிப்பது மனச்சாட்சியின் குரலொலி.

*57. மனச்சாட்சியின் குரலொலி என்பது யாது ?*

தக்கதைக் செய்து, தகாததை விலக்குவது நம் கடமை என்று நமக்குரைக்கும், மனசினுள்ளடங்கிய ஓர் அறிக்கை இது.

*58. மனச்சாட்சியின் குரலொலி வெறும் அறிக்கைதானா ?*

இல்லை ; நாம் கீழ்ப்படியவேணுமென்று உணரும் வண்ணம் மனச்சாட்சி நமக்கு ஓர் விதமாகக் கற்பிக்கின்றது.

*59. மனச்சாட்சியால் உதிக்கும் உணர்வு வேறு யாதாவது உண்டா ?*

தகுதியானதைச் செய்யுங்கால், நமக்குத் திருப்தியும் சந்தோஷமும் உண்டாகிறது ; தகாததைச் செய்யுங்கால், நமது குற்றத்தை உணர்ந்து, நம் மனதில் திகில்கொள்ளச் செய்கின்றது.

" குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும் "

" மனக்குரங்கை மாற்றலரிது " என்ற முதுமொழிகள் இதை உணர்த்துகின்றன.

*60. இவ்வித உணர்ச்சிகள் உதிப்பதற்குக் காரணம் என்ன ?*

கடவுள் நாம் செய்கிறதைப் பார்க்கிறார் ; நன்மை செய்யும்பொழுது, அவருக்கு நம்மட்டில் பிரீதியும், தின்மை செய்யும்பொழுது நம்மீது அவருக்கு அருவருப்பும் (கோபமும்) உண்டாகிறது என்பதை நாம் திண்ணமாய் அறிந்திருப்பதுதான் இதற்குக்காரணம்.

. 61. தின்மை செய்யும்பொழுது, மனதில் சஞ்சலம் ஏற்படுவது என்ன காரணத்தினால்?

ஏனெனில், கடவுளுடைய கற்பனையை மீறியிருக்கிறோம் என்று நமக்குத் தெரிகிறது; இத்தவறுதலுக்காக நம்மை ஒருக்கால் தண்டிப்பார் என்று அஞ்சுகிறோம்.

62. மனிதரைப்பற்றிய பயமும் நமக்கு ஏற்படுகிறது உண்டா?

ஆம்; நமது கிரியையைப்பற்றி வெட்கம் அடைந்து, மனிதர் நம்மைக் கண்டுபிடித்துக் குற்றஞ்சாட்டித் தண்டிப்பார்களோ என்று பயப்படுவதுண்டு. ஆனால் இது மனச்சாட்சியின் குரலொலியல்ல. நமது பாவம் அந்தரங்கமானாலும், எவரும் அறியக்கூடாததானாலும் பாவத்தால் கடவுளுக்கு நம்மட்டில் அருவருப்பும், அதனால் நமக்கு அவரது தண்டனையும் வருமென்று அஞ்சும்படி செய்வது மனச்சாட்சி.

63. மனச்சாட்சியின் குரலொலி எவ்விதம் ஏற்பட்டுள்ளது?

கடவுளே, அதை நமது ஆன்மாவில் அமைத்திருக்கிறார். அவரது கட்டளையை அநுசரிக்க நாம் கடமைப்பட்டுள்ளோம் என்று நாம் அதைக்கொண்டு உணரவேணுமென்பது அவருடைய சித்தம்.

## 2. மனச்சாட்சியும் கடவுளும்

64. கடவுளை அறியாத அல்லது கடவுள் இல்லை என்று சாதிக்கும் நாஸ்திகனுக்கு மனச்சாட்சி இத்தன்மையாக உரைக்குமா?

இல்லை; நம்மைப்போல் அவனும் நன்மை தின்மையைப் பற்றி உணரக்கூடும்; ஆனால் அவ்வுணர்ச்சிகளின் (சுபாவம்) அர்த்தம் அவனுக்குப் புரியாது. கடவுளை விசுவசியாமல், அவற்றைக் கண்டுபிடிக்க இயலாது.

65. இந்த வித்தியாசம் ஏன்?

நமக்குப் பொறுப்பும் கடமையும் உண்டென்று மனச்சாட்சி கூறுகிறது. பொறுப்பு என்றால் பிறர்மட்டுள்ள உத்தரவாதம்; பிறருக்கு நம்மால் ஏதோ கொடுபடவேண்டியதிருக்கிறது என்பதைக் கடமை உணர்த்துகிறது. ஒருவன், மற்றொருவனுக்குத் தன்மட்டில் உண்டான உரிமையின் காரணத்தால், அவனுக்குத்தான் உத்திரவாதியாகவேண்டும். அவன்மட்டில் தனக்குக் கடமை உண்டென்று உணரலாம். இது மனச்சாட்சியல்ல. ஏனெனில், மனச்சாட்சி, மற்றொரு மனிதன்மட்டில் அல்ல, கடவுள்மட்டில் நமக்குள்ள உத்தரவாதம், கடமையைக் குறிக்கின்றது.

மேலும், கடவுளைப்பற்றி ஒன்றுமே அறியாதவன் தண்டனைக்கஞ்சினால், இது மனிதரால் வரக்கூடிய தண்டனையைப்பற்றியேயன்றி கடவுளால் விதிக்கப்படும் தண்டனையைப்பற்றி இராது. மனச்சாட்சியோவென்றால், தேவ கோபாக்கினையின் பயத்தை நமக்கு வற்புறுத்துகிறது.

66. இதனால் நாம் அறிவதென்ன?

கடவுளைப்பற்றிய விசுவாசமின்றி (கடவுள் உண்டு என்று விசுவசியாதேபோனால்) மெய்யான கடமையை உணர்த்தும் "அறநெறி மார்க்கம்" என்பது அறவே கிடையாது. அவரின்றி, அறநெறி மார்க்கம், பிரயோசனகரமான நடத்தை நமக்குப் பிரீதியையுண்டாக்கும் நடத்தை அல்லது ஜனசமூகத்தால் ஏற்பட்ட ஒரு வழக்கமேயன்றி வேறொன்றுமாகாது.

கடவுளை நீக்கின மனச்சாட்சி, நியாயாதிபதி இல்லாத நியாயஸ்தலத்துக்கொப்பாகும்.

## 3. மனச்சாட்சி விர்த்தித்தல்

67. எல்லா மனிதரிடமுமுள்ள மனச்சாட்சி ஒரே விதமானதா?

சிலரிடத்தில் அது அதிகத் தெளிவாகவும் திறமையுள்ளதாகவும் இருக்கிறது. வேறு சிலரிடம் அது தெளிவுக் குறைவாகவும், திறமை குன்றினதாகவும் காணப்படுகிறது.

68. இந்த வித்தியாசத்திற்குக் காரணம் என்ன?

பயிற்சியும், அப்பியாசமும் இந்த வித்தியாசத்திற்குப் பிரதான காரணம். சரிவரப் பயின்று, நல்வழியில் நடக்க விருப்பமுள்ளவருக்கு மனச்சாட்சியின் குரலொலி வெகு தெளிவாய்க் கேட்கும்; நன்றாய்ப் பயிலாதவர்களுக்கும், துன்மார்க்கத்தைப் பற்றிய கவனமில்லாதவர்களுக்கும், அது தெளிவுக் குறைவாயிருக்கும், குறைந்த தொனியுடன் சப்திக்கும்; ஏனெனில் சாதாரணமாய் அவர்கள் அதைக் கவனிப்பதுமில்லை. உற்றுக்கேட்பதுமில்லை.

69. 'இன்னது தக்கது இன்னது தகாதது' என்று நிதானிப்பதில் எல்லாருடைய மனச்சாட்சியும் ஒரே விதமாய்க் (மாறுபாடின்றி) கூறுகின்றதா?

மிகவும் பிரதானமான விஷயங்களில், எல்லாருடைய மனச்சாட்சியும் ஒரேவிதமாய்த்தான் நிதானிக்கின்றது; ஆனால் வேறு சில நுட்பமான விஷயங்களைப்பற்றி சகலருடைய மனச்சாட்சியும் ஒத்திருப்பதில்லை.

70. இந்த வித்தியாசம் என்ன காரணத்தினல் உண்டாகிறது?

யோசிக்காத குறையினல் அல்லது ஓர் வழக்கத்தை உண்மைச் சத்தியமாகப் பாவித்துக்கொள்வதினல் இந்த வித்தியாசம் விசேஷமாய் உண்டாகக் காரணமாகிறது?

71. சில திருஷ்டாந்தங்கள் சொல்லு.

நாகரீகமில்லாத சில முரட்டு ஜாதியார், தங்கள் கையில் சிக்கினவர்களை வெகு குரூர சிக்ஷை செய்கிருர்கள்; வேறு சிலர் திருடுகிறதும் கொள்ளையடிப்பதும் தொழிலாகக் கொள்கிருர்கள். சிலர் நரபலி இடுகிருர்கள். நர மாம்சத்தையும் புசிக்கிருர்கள். வேறு சிலர், பொய்சொல்வதும் பிறரை வஞ்சிப்பதுமே தொழிலாயிருக்கிருர்கள். ஆனல், இவற்றில் எதையாகிலும் தப்பிதமென்று அவர்கள் எண்ணுவதில்லை.

72. இவர்களுடைய எண்ணம் தப்பறையானது என்று நமக்கு எப்படித் தெரியும்?

நமது புத்தியைச் செவ்வையாய் உபயோகித்து யோசித்துப் பார்ப்போமாகில், மேற்கூறிய செயல்கள் யாவும் துர்க்கிரிகைகள் என்று நமக்குப் புலப்படும். நாகரீகமடைந்த ஜனங்கள் இதைக் கண்டுணர்ந்து, இத்துர்வழக்கங்களை ஒழித்துவிட்டார்கள். குரூரச் செயல்களைப்புரியும் நாகரீகமில்லாத ஜனங்களும், அவர்கள் செய்வது தப்பிதமென்று நாம் அவர்களுக்குப் படிப்பித்தால், தங்களுடைய நடத்தை தவறுதலானதென்று தாங்களே உணர்கிருர்கள்.

73. மனச்சாட்சி விர்த்தியடையக்கூடியதா?

நல்லது எது, கெட்டது எதுவென்று அதிகத் தெளிவாய் அறியப் பிரயாசப்படுவதாலும், மனச்சாட்சி நமக்குச் சொல்லுவதை உற்றுக்கேட்டு, எப்பொழுதும் அது சொல்கிற பிரகாரம் கேட்டு நடக்கிற அப்பியாசத்தாலும், மனச்சாட்சியை விர்த்திபண்ணக்கூடும்.

74. இது நல்லது, அது கெட்டதென்று நாம் அதிகத் தெளிவாய் அறிவதற்குச் செய்யவேண்டியதென்ன?

நம்மிலும் நல்லோர் எனப்படுகிற ஜனங்களோடு அதிகமாய் உறவாடுவது, இதை அறிவதற்கேற்ற உத்தம வழி. அவர்கள் யாதாவது ஒரு கிரிகை தப்பிதம் என்று கூறினல் நமக்கு அது அவ்விதமாக ஏற்கனவே தோன்ருவிட்டாலும், இப்போது, அது அவர்கள் சொல்லுமாப்போல், தப்பிதம்தான் என்று நாமே உணர்வோம். நல்லோராகிய பிறர் தங்கள் மனச்சாட்சிப்பிரகாரம் எப்போதும் கவனமாய் நடந்துவருகிருர்கள் என்பதை நாம்

காணும்போது, நாமும் அதேபிரகாரம் நடக்கப் பிரியமும் ஏவுதலும் நமக்கு உண்டாகும்.

## 4. அறியாமை

75. மற்றவர்கள் தப்பிதம் செய்யும்போது, நாம் நினைக்க வேண்டியதென்ன?

அவர்கள் தப்பிதம் இருவிதத்தால் ஏற்படக்கூடும். ஒன்றில் தேவ சட்டத்தை அவர்கள் அறியாதிருக்கிறார்கள். ஆகையால் அவர்களுக்கு அதைச் சொல்லிக்காட்டுவது அவசியம்; அல்லது தேவ சட்டத்தையறிந்தும், மனதார அதை மீறுகிறார்கள் என்று சொல்லவேண்டும்.

76. யாதொரு கிரிகை கெட்டது என்று அறியாமல் அதைச் செய்தால் அது அவர்களுக்குப் பாவம் ஆகுமா?

அந்தக் கிரிகை கெட்ட கிரிகைதான்; ஆனால் சுத்த அறியாமை அல்லது களங்கமற்ற தன்மை அக்கிரிகைக்குக் காரணமானதுபற்றி, அது அவர்களுக்குப் பாவம் ஆகாது.

77. களங்கமற்ற தன்மை என்றால் என்ன?

ஒருவன் யாதாமொன்று செய்யும்பொழுது, அது கெட்ட கிரிகையாயிருந்தாலும் அவன் அதை அறியாமல், வாஸ்தவத்தில் தான் செய்வது சரி என்று மனதில் எண்ணி மனதுக்கு வஞ்சகமில்லாமல் செய்வதுதான் களங்கமற்ற குணம் என்னப்படும்.

78. சுத்த அறியாமை என்றால் எது?

தன்னுடைய அறியாமையைக் கிஞ்சித்தேனும் உணராத தன்மைதான் சுத்த அறியாமை என்பதாகும். அத்தகைய மனிதன், மெய்யாகவே உண்மையை அறியவில்லை. ஆனால் தன் உள்ளத்தில் அது தனக்குத் தெரியும் என்று நினைக்கிறான்.

79. தான் செய்வது தப்பிதமாயிருக்கலாம் என்கிற சந்தேகத்தோடு, ஒருவன் அதைச் செய்தால், அது பாவம் ஆகுமா?

பாவந்தான்; ஏனெனில், சந்தேகம் உண்டானவுடன் சந்தேகத்தை நிவர்த்தித்துக்கொள்ளவேண்டிய கடமை அவனுக்குண்டு. மற்றவர்களிடம் கலந்துபேசி உண்மையை அறிந்துகொள்ளவேண்டும்.

80. சந்தேகம் ஏற்பட்டபோது, அதைப்பற்றி விசாரியாமலிருப்பது பாவமா?

ஆம்; அந்தப் பாவம் அசட்டைத்தனம் எனப்படும். இவ்விதம் விசாரியாத குறையினால் ஏற்படும் சகல குற்றங்

களுக்கும் அவன் உத்திரவாதியாகிறான். ஏனெனில் நம்மில் ஒவ்வொருவரும் நமக்குத் தெரிந்த நியாயப்பிரகாரம் நடப்பது மன்றி, நமக்குத் தெரியாதவைகளை ஆராய்ந்து அறியவும் நமக்குக் கடமை உண்டு.

81. ஒருவன் தான் செய்வது சரி என்று நினைத்து ஒரு துர்க்கிரிகை செய்கிறான்; செய்தபிறகு, தான் செய்தது தப்பிதம் என்று தெரியவருகிறது. அந்தக் கிரிகைக்கு அவன் உத்திரவாதியாவானா?

கடந்துபோன அந்தக் கிரிகைக்கு அவன் உத்திரவாதியல்ல; ஆனால், அதே கிரியை மீண்டும் செயவானாகில் அந்தக் குற்றம் அவனைச்சாரும்.

82. மனவஞ்சகமின்றி அல்லது சுத்த அறியாமையினால் செய்த துர்க்கிரிகைக்காகக் கடவுள் தண்டிப்பாரா?

அவர்களுடைய அறியாமை நீங்காதிருக்கும் பரியந்தம் செய்த கிரிகைகளுக்காக அவர்களைத் தண்டிக்கமாட்டார். தப்பிதம் என்று உணர்ந்தும் மனதாரச் செய்யும் தவறுதலுக்காக மாத்திரம் கடவுள் தண்டிப்பார்.

---

## 5-ம் அதிகாரம்

## பாவம் அல்லது சட்டத்தை மீறுதல்

### 1. பாவம் என்பதின் அர்த்தம்

83. ஜீவிய சட்டத்தை அநுசரிப்பது எவ்விதம்?

அதை அறிந்து, அதை நேசித்து, அதன் பிரகாரம் எப்பொழுதும் நடப்பதினால் அதை அநுசரிக்கலாம்.

84. அதை மீறுவது எவ்விதம்?

சட்டம் உண்டென்று முதலாய் சிந்திக்காமல், அதைக் கவனியாமலிருப்பதாலும், அதன் பிரகாரம் நடவாமல், அதற்கு விரோதமாய் நடப்பதாலும் சட்டத்தை மீறக்கூடும்.

85. ஜீவிய சட்டத்தை மீறுதலுக்கு என்ன பெயர் வழங்குகிறது?

அதற்குப் பெயர் 'பாவம்.'

86. பாவம் என்றால் என்ன?

மனதுபொருந்தி, தேவசட்டம் விலக்குகிறதைச் செய்வதும், தேவசட்டம் கற்பிப்பதைச் செய்யாமல் விட்டுவிடுவதும் பாவம் என்னப்படும்.

87. செய்யத்தகாததைச் செய்தால், அது என்னவிதமான பாவம் என்று சொல்லுவது?

அது நினைவு, வாக்கு அல்லது கிரிகையின் பாவம் என்று சொல்லுகிறோம்.

88. கற்பித்திருப்பதைச் செய்யத்தவறினால், என்ன பாவம் கட்டிக்கொள்கிறோம்?

அது 'தவறுதல்' (தவிர்த்தல்) எனப்படும்.

89. யாதொன்றும் செய்யாதிருப்பதினால் பாவம் உண்டாகக் கூடுமா?

யாதாமொன்றை இன்னின்ன காலத்தில் செய்வது நமது கடமையாகத் தேவசட்டம் கூறியிருக்க, நாம் அதைச் செய்யாதிருந்தால் பாவம் ஆகும்.

90. இத்தகைய பாவங்களில் சிலவற்றைச் சொல்லு.

நாம் ஜெபிக்கவேண்டிய சமயத்தில் ஜெபியாமலிருப்பது. பிறருக்கு நியாயம் தீர்க்கவேண்டியபொழுது, அவ்விதம் செய்யாதிருப்பது. பிறருக்கு உதவிபுரிவது, அவசரமாயிருக்கும் வேளையில், உதவி புரியாமலிருப்பது. தீங்கு (பொல்லாப்பை) விளையாமல் தடுக்கவேண்டிய சமயத்தில், தடுக்காமல் அது வர விட்டுவிடுவது, இவையாவும், நாம் ஒரு கிரிகை செய்ய வேணுமென்று கடமையிருக்குங்காலத்தில், ஒன்றுஞ் செய்யாமல் சும்மா இருப்பதினால், உண்டாகிற பாவங்கள்.

## 2. பாவச்சோதனை

91. பாவம் செய்ய நம்மை ஏவுவது யாது?

அதைச் சோதனை என்கிறோம்.

92. சோதனை என்றால் என்ன?

பாவத்தின்மட்டிலுள்ள நாட்டம் அது; இத்துடன் எதிர்ப்பதற்கு மனதானது முயற்சிப்பது அவசியம். (பிரயாசப்படவேண்டும்.)

93. எங்கிருந்து சோதனை உண்டாகின்றது?

நம்மிலிருந்தே அல்லது பிறரால் சோதனை வரக்கூடும்.

94. மற்றவர்களால் நமக்கு எப்படி சோதனை வரக்கூடும்?

அவர்களுடைய துர்மாதிரிகையால், அல்லது பாவம் செய்ய நம்மை உற்சாகப்படுத்துவதால், தைரியங்கொடுப்பதால், அல்லது நாம் பாவம் செய்யும்படி சொல்வதால், அவர்களால் சோதனை வரக்கூடும். (9-ம் அதிகாரம் காண்க.)

*95. நம்மிடமிருந்தே சோதனை எவ்விதம் வரக்கூடும்?

கெட்ட நினைவு, கெட்ட உணர்ச்சி, கெட்ட ஆசைகளினால் வரக்கூடும். (2-ம் பாகம், மானிட தத்துவங்கள் காண்க.)

96. சோதனை வரும்பொழுது செய்யத்தக்கதென்ன?

சோதனைக்கு விரோதமாய் நமது மனத்திறமையைக் காட்டவேண்டும். நமது சிந்தனைகள் அதன்பேரில் செல்லாதபடி தவிர்த்து, இதர விஷயங்களின்மட்டில் நமது கவனம் சார்ந்திருக்கச் செய்யத்தகும். (வேறு விஷயங்களைக் கவனிக்கத்தகும்) சோதனையை ஜெயிப்பதில் கடவுள் நமக்கு உதவியாய் நிற்கும்படி நாம் அவரைப் பிரார்த்திக்கவேண்டும்.

### 3. பச்சாத்தாபமும் மன்னிப்பும்

97. நாம் பாவத்தில் தவறியிருந்தால் செய்யவேண்டியதென்ன?

அந்தப் பாவத்திற்காக பச்சாத்தாபப்பட்டு (துக்கப்பட்டு) இனிமேல் அதைச் செய்வதில்லையென்றும், அதற்கான சோதனையின் மட்டில் வெகு எச்சரிக்கையாயிருந்துகொள்ளுவோமென்றும் பிரதிக்கினை செய்யவேண்டும். நாம் செய்த குற்றத்தைப்பற்றித் துக்கிப்பதாகக் கடவுளிடம் சொல்லி, அவர் நம்மை மன்னிக்கும்படி கேட்கவேண்டும்.

98. இவ்விதம் செய்தால், கடவுள் மன்னித்துக் கொள்வாரா?

கடவுள் தாமே இதை வெளிப்படுத்தினாலன்றி (தேவோக்தம்) நாம் இதைப்பற்றி நிச்சயமாய் ஒன்றும் சொல்ல முடியாது. ஆனால் கடவுள் நல்லவர், பட்சமுள்ளவர், (தகப்பன்) நமது நன்மையை விரும்புகிறார் என்று நமக்குத் தெரிந்திருப்பதால், நாம் திரும்பவும் பாவத்தைக் கட்டிக்கொள்வதில்லையென்கிற மெய்யான தீர்மானம் செய்தால், அவர் நம்மை மன்னிப்பாரென்று நம்புவதற்குக் காரணம் உண்டு.

99. அடிக்கடி பாவம் செய்தால், நாம் என்ன செய்யத்தகும்?

ஒவ்வொரு தடவையும் அதற்காக துக்கப்படவேண்டும். ஒவ்வொரு தடவையும் கடவுளிடம் மன்னிப்பும் கேட்கவேண்டும். பாவப்பழக்கம் ஏற்பட்டு, அத்தால் நமது நித்திய பாக்கியத்தை இழந்துபோகாவண்ணம் பாவம் செய்த ஒவ்வொரு தடவையும், அதிகமதிகமாய் அதற்கு விரோதமாய் பிரயத்தனப்படவேண்டும்.

# 6-ம் அதிகாரம்

## பாவத்தைப்பற்றி வேறு விஷயங்கள்

### 1. பாவம் செய்வதற்கான திறமை

**100.** மனிதனுக்கு பாவம் செய்வதற்கான திறமை இருப்பதற்குக் காரணம் என்ன?

நன்மை செய்யவோ, தின்மை செய்யவோ, இரண்டிலொன்றைத் தெரிந்துகொள்ளக்கூடிய மனச்சுதந்தரம் மனிதனுக்கு இருப்பதால், இந்த திறமை உண்டாயிற்று.

**101.** தின்மை செய்யும் திறமையைக் கடவுள் நமக்கு ஏன் கொடுத்திருக்கிருர்?

இந்தத் திறமை நமக்கு இல்லாவிடில், நாம் கட்டாயமாய் நன்மை செய்யத்தான் வேண்டியதாகும். பிரியம், பிரியமில்லாமை என்கிற வித்தியாசம் இராது. தன் இஷ்டப்படி நடக்க முடியாது. நாம் வேருெருவன் ஆட்டிவைக்கும் பம்பரத்துக் கொப்பாவோம். இது கடவுளுக்குப் பிரியமில்லை. நாம் மனதார இஷ்டப்பட்டு, கடவுளுக்கு ஊழியஞ்செய்யவும் கீழ்ப்படியவும் வேணுமென்பது அவருடைய விருப்பம். அப்படியிருந்தால்தான், நாம் அவருக்குப் பிரியப்பட நடக்கிறேம் என்று சொல்லக்கூடும். அவர் கொடுக்கும் சம்பாவனைக்கு நாம் அருகராகக்கூடும்.

மனிதனுடைய மனதை அழிக்கமாட்டார் கடவுள்; மனச்சுதந்தரம் இல்லாதவன், ஒரு யந்திரத்துக்குச் சமானம். மனச்சுதந்தரம் உள்ளவன், தனக்குப் பிரியப்பட்டால் மாத்திரம் நன்மை செய்வான். இது ஒரு பெரும் நன்கொடை. ஏனெனில், இஷ்டப்பிரகாரம் தெரிந்துகொள்ளக்கூடிய தத்துவத்தைவிட மதிப்புள்ளது ஒன்றும் இல்லை.

**102.** இதைச் சற்றே விவரித்துச் சொல்.

தன் இஷ்டத்தைப் பொறுத்து நன்மையானதைத் தெரிந்துகொள்ளும் மனதானது, நன்மையான சகலத்தையும் நேசிக்கிற கடவுளின் மனதோடு ஐக்கியப்படுகிறது. இதற்கு மாருய், தின்மையைத் தெரிந்துகொள்ளும் மனதோ தெய்வசித்தத்தை எதிர்த்து, அவருக்கு முற்றிலும் ஒவ்வாததாகின்றது... மனதார நன்மையைத் தெரிந்துகொள்வதில்தான், நன்மனதின் மதிப்பு (கண்ணியம்) அடங்கியுள்ளது. ஆகையால் தன் மனதைத் தகுந்த விதமாய் எக்காலமும் உபயோகிக்கிறவன், உத்தமன் எனப்படுவான்.

**103.** இதனால் நாம் அறிவதென்ன?

"புண்ணியமே, நமக்கு இவ்வுலகில் கிடைக்கத்தகும் சிறந்த திரவியம்; பாவம், சகல பொல்லாப்புகளிலும் பெரிதானது" என்று நாம் அறியவேண்டும். மேலும், புண்ணியத்துக்குச் சிறந்த சம்பாவனையும், பாவத்துக்குக் கனத்த தண்டனையும் கடவுள் நிரூபித்திருப்பதின் காரணமும் இதினின்று தெளிவாய் விளங்குகின்றது. பாவச் சோதனையின் பிரயோசனமும் நன்றாய் இலங்குகிறது.

**104.** சோதனையினால் என்ன பிரயோசனம்?

உலையிலிட்ட பொன் ஒளி பெறுமாப்போல், சோதனையில் சிக்குண்டு, அத்தோடு எதிர்த்துப் போராடித் தின்மையைத் தவிர்த்து நன்மையைச் செய்யும் மனிதனுடைய மனது சிறப்புற்றோங்கும். சோதனையோடு போராடுவதால், நமது நன்மனது வெளியரங்கமாகிறது. கடவுளுக்குப் பிரியப்பட நாம் விரும்புகிறோமென்றும் இதனால் காண்பிக்கிறோம்.

**105.** இதைத் தெளிவிக்கச் சில உதாரணங்கள் கூறு.

பிள்ளைகளுக்குப் பெற்றோர்மட்டில் உள்ள சிநேகம் அதிகமாய் வெளியாகிறது எவ்வேளை? பெற்றோருக்காகப் பிள்ளைகள் துன்பமுற்றுக் கஷ்டப்பட்டுத் தங்களைத்தாமே வருத்தப் படுத்திப் பிரயாசையான காரியங்களைச் செய்யும்போதல்லவோ, அவர்களுடைய சிநேகம் எளிதாய் விளங்குகிறது. தங்களுக்குப் பிரியமான அல்லது எளிதான காரியங்களைச் செய்வதனால் மாத்திரம் அவர்கள் மெய்யாகவே தங்கள் பெற்றோரைச் சிநேகிக்கிறார்கள் என்று புலப்படுமா, இல்லை. போர்வீரன் வீட்டிலிருந்துகொண்டு, சமர்புரியக் கற்றுக்கொள்ளும்போதல்ல, போர் முகத்தில் சண்டைசெய்யுங் காலத்திலன்றோ தனக்குள்ள தேச பக்தியை அதிகத் தெளிவாய்க் காட்டுகிறான்.

**106.** எளிதான கிரிகைகளுக்குக் கிடைக்கும் சம்பாவனையை விட கடினமான கிரிகைகளுக்கு அதிக சம்பாவனை அளிக்கப்படுமா?

சந்தேகமில்லாமல் சிரமத்துக்குத் தகுந்த சம்பாவனை கிடைக்கும்.

## 2. பாவத்தினால் வரும் பலன்

**107.** பாவத்தால் வரும் பயனென்ன?

முதலாவது, பாவம் நமது சுபாவத்தைக் கெடுத்து, நம்மைக் கடவுளுடைய விருப்பத்துக்கு விரோதிகளாக்குகின்றது; இரண்டாவது, தேவ மகத்துவத்தை நிந்தித்து அவருக்குத்

துரோகம் செய்கிறது; மூன்றாவது, அது கடவுளுக்கு நம்மீது கோபத்தை உண்டுபண்ணி, நம்மைத் தண்டனைக்கு ஆளாக்குகிறது; நான்காவது, நாம் கடைசியாய்ப் பாக்கியவான்களாயிருப்பதற்கு யாதொரு வழியில்லாமல் கெடுத்துப்போடுகிறது.

*108. நாம் நமது அந்திய பாக்கியத்தை இழந்துபோவதற்கு ஓரேயொரு பாவம் போதுமா?*

நீதிப்பிரகாரம் ஓரேயொரு (கனமான) பாவம் நமது அந்திய பாக்கியத்தை இழந்துபோகச் செய்யப் போதுமானது. ஏனென்றால், அந்த ஒரே பாவத்தால் நாம் கடவுளுக்கு விரோதமாய் எதிர்த்து, அவர் நமக்கு அந்திய பாக்கியம் கொடுப்பதற்கு நியமித்த நிபந்தனைகளை நிராகரித்துவிட்டோம். ஆகையால்தான் மன்னிப்புக் கேட்பது மிகவும் அவசியமானது.

*109. ஒருவன் அடிக்கடி பாவம் செய்து, துராகிர்தமாய் ஜீவித்துவருகிறான்; இவனுக்கு மன்னிப்புக் கிடைக்கும் என்கிற நம்பிக்கை இருக்கிறதா?*

அவன் பச்சாத்தாபப்பட்டுப் பாவத்தை விட்டுவிடுவானாகில் மன்னிப்புக் கிடைக்கும்; ஆனால் நீண்டகாலமாய்ப் பாவம் செய்கிறவனுக்கு எளிதில் பச்சாத்தாபம் உண்டாகாது.

*110. மரணவேளை பரியந்தம் பாவ வழியிலிருக்கிறவனுக்கு விமோசனம் உண்டா?*

மரணவேளையில் ஓர் சிறிதளவு நம்பிக்கையுண்டு; ஆனால், இதை நம்பி நடப்பது பெரும் அபாயம்.

*111. அது ஏன் பெருத்த அபாயம்?*

நீண்டகாலம் பாவம் செய்து வருவதினால், கடவுளைப் பற்றிய நினைவே இல்லாமல் எப்போதும் துர் இச்சைகளின் பேரில் மாத்திரம் ஆவலும் கருத்துமாயிருக்கப் பழக்கம் ஏற்பட்டுவிடுகிறது. இவ்வித பழக்கம் உண்டான பிறகு, இவ்வளவு காலமாக அவன் நேசித்து வந்ததைத் திடீரென கடைசிச் சமயத்தில் விரோதிக்கப்போகிறானா, இது அபூர்வம். அவனுக்கு மெய்யான பச்சாத்தாபம் உண்டாவது அரிது. "சாகப்போகிறேனே, தண்டனை கிடைக்குமே" என்று ஓர்வித கோழைத்தனமான பயம் இருக்கக்கூடும். ஆனால் இவ்விதமான பயம் மன்னிப்படையப் போதாது. ஆகையால் அந்தியவேளையில் மன்னிக்கக் கடவுள் சித்தமாயிருக்கிறாரென்று சொல்லக்கூடுமாயினும், கடைசி நிமிஷமட்டும் காத்துக்கொண்டிருக்கிறவனுக்கு மெய்யான பச்சாத்தாபம் ஏற்படும் என்று நம்ப இடமில்லை.

***112.*** **இதனால் வெளியாகும் உண்மை யாது?**

பாவத்திற்கான முதல் நாட்டத்துக்கு விரோதமாக, ஆரம்பத்திலேயே நாம் தண்டித்துப் போராடவேண்டும். ஏனெனில், ஒருமுறை பாவஞ்செய்த பின்பு, மீளவும் பல பாவங்களில் விழுவது எளிது. இவ்விதம் பாவத்தில் பழக்கப்பட்டால், அந்திய காலமட்டும் பாவத்தில் ஜீவித்துக் கெட்ட மரணம் நேரிடுவதற்கான அபாயம் ஏற்படும்.

## 3. மன்னிப்பும் தண்டனையும்

***113.*** **கடவுள் பாவத்தை மன்னித்துக்கொண்டால், இன்னும் இதற்குப் பிறகும் ஏதாவது தண்டனை இருக்குமா?**

பாவம் மன்னிக்கப்பட்டுப்போனாலும், இன்னும் ஒவ்வொரு பாவத்துக்கும் ஏற்றவண்ணம் கடவுள் யாதொரு வகைத் தண்டனை இடுவாரென்று சொல்வது நியாயமாய்த் தோன்றுகிறது.

***114.*** **அப்படியானால், மன்னிப்பினால் என்ன பிரயோசனம்?**

அப்படியிருந்தாலும், மன்னிப்பினால் பெருத்த நன்மையுண்டு; பாவத்தினால் இழந்துபோன பரகதியையடையும்படியான வழியில் நம்மை அது மீண்டும் கொண்டுவந்துவிடுகிறது. மன்னிக்கப்பட்ட பாவத்துக்கு ஏற்படும் தண்டனை என்றென்றைக்கும் நீடித்திராது. சொற்பகாலம் மட்டும் அதை அநுபவிக்க வேண்டியதிருக்கும்.

***115.*** **இவ்விதம் அபிப்பிராயங்கொள்வதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது?**

முதன்முதல், கடவுள் பாவத்தை மன்னித்ததோடு, சகலவிதமான தண்டனையும் நீக்கிப்போட்டால், மன்னிப்புக்கு மதிப்பு இராது; கடவுளையும் அவரது சட்டத்தையும் அற்பமாய் எண்ணுவோம். பாவத்தின் கனாகனத்தையும் சிந்திக்க மாட்டோம்.

மீளவும, முற்றிலும் மன்னிப்படைவது இவ்வளவு சுலபமாயிருந்தால், பாவத்தை விலக்கும்படி கடின பிரயாசப்படுவதில் என்ன லாபம்? சோதனையை ஜெயிப்பது என்னத்திற்காக? பாவத்துக்குச் சம்மதித்து, ஒவ்வொரு தடவையும் அதற்காகத் துக்கப்பட்டு மன்னிப்புக் கேட்டுக்கொள்ளலாமே என்று சொல்லக்கூடும். ஆனால் ஒவ்வொரு பாவத்துக்கும் ஏற்ற தண்டனை இருந்தால் இவ்விதம் சொல்லமுடியாது; பாவத்துக்குச் சம்மதித்துப பிற்காலத்தில் பெருத்த துன்பம் அநுபவிப்பதை விட, இப்போது சோதனையை அகற்றுவதிலுள்ள சொற்ப கஷ்டத்தைச் சகித்துக்கொள்வது மேல் என்பதாக யாவரும் எளிதில் உணர்வார்கள்.

---

## 7-ம் அதிகாரம்

### பாவத்தின் கனகனம்

#### 1. கனமான பாவம், அற்பப் பாவம்

**116.** சகல பாவங்களும் ஒரே விதமாய்த் தின்மையானவைகளா ?

எல்லாப் பாவமும் தின்மையானதுதான். ஆனால் பாவத்திலும் உயர்வு, தாழ்வு உண்டு.

**117.** பாவத்துக்குப் பாவம் வித்தியாசப்படுவானேன் ?

பாவத்தினால் விளையும் பொல்லாப்புக்குத் தகுந்தாப்போல், பாவம் கனமானது அல்லது அற்பப் பாவமாயிருக்கும்.

**118.** இதற்குச் சில உதாரணங்கள் கூறு.

ஒருவனைக் கொல்லுவது, ஓர் பெரிய பாதகம்; அவனை முகத்தில் அடிப்பது, அதிலும் சிறிய குற்றம்.

ஒரு லட்சம் ரூபாய் திருடுவது கனமான பாவம். ஒரு அணவை அபகரிப்பது அற்பக் குற்றம்.

பொய் சொல்வதால், பிறருக்கு நஷ்டம் நேரிடுமானால், அது பெரிய பாவம்; நஷ்டம் ஒன்றுமில்லை என்கில், அற்பக் குற்றமாகும்.

#### 2. பெரும் தப்பிதம், சிறு தப்பிதம்

**119.** ஒரே பாவம் ஒரு சமயம் பெரும் தப்பிதமாகவும், வேறு சமயம் சிறு தப்பிதமாகவும், இருக்கக்கூடுமா ?

ஒரு பாவத்தின்பேரில் யோசனை செய்து, மனதாரச் செய்தால், அது பெரும் தப்பிதம்; யோசிக்காமல், சோதனையின் வேகத்தால் சடுதியில் செய்யப்படும் அதே பாவம் சிறு தப்பிதமாகும்.

**120.** இதை சில உதாரணங்களால் விளக்கிக்காட்டு.

ஒருவன் (முன்யோசனையின்றி) ஏதோ கோபவெறி மூர்க்கத்தால் (ஆத்திரத்தால்) வேறொருவனைத் தாக்குவதைவிட, ஏற்கனவே யாவும் திட்டப்படுத்திக்கொண்டு அவன்மேல் விழுந்து தாக்குவது பெரும் தப்பிதம்.

பணத்தைக் கண்டால் பிணமும் வாயைத் திறக்கும் என்றவாறு ஏதோ திடீரென உண்டாகும் சோதனையை ஜெயிக்க மாட்டாமல், மேஜையில் கண்ட பணத்தை எடுத்துப் பையில் போட்டுக்கொள்வதைவிட ஏற்கனவே கொள்ளையடிக்கவேணு

மென்று கருதி, அதற்கான ஏற்பாடுகள் செய்து, சரியான சமயம் பார்த்திருந்து, தட்டிக்கொண்டுபோவது பெரும் தப்பிதம். அடிக்குப் பயந்து கேட்டவுடனே வாயிலிருந்து பொய்மொழி வருவதிலும், முன்னதாக யோசனைபண்ணி இன்னவிதமாய் உண்மையை மறைக்கலாம் என்று தீர்மானித்துப் பொய் யுரைப்பது பெரும் தப்பிதம் என்னப்படும்,

**121.** என்ன காரணத்தால் தப்பிதம் குறைவுபடும்?

இதற்குப் பல காரணங்கள் இருக்கக்கூடும் :—

(1) மந்தப்புத்தி, பூரண அறிவின்மை, கவனமில்லாக் குறை இவைபோன்ற காரணங்களால், செய்யும் தப்பிதத்தை முற்றிலும் உணராமற்போவது.

(2) அறிவைக்கொண்டு கடமையையுணர்ந்து, தகாத அக்காரியத்தைத் தடுக்க முயலுமுன், நமது அவயவம் அக்கிரிகை யில் பிரவேசித்துவிடுவது, இதற்குக் காரணம் ஆசாபாசத்தின் அதிவேகம்.

(3) மிரட்டுக்குப் பயந்து அல்லது பிறருடைய வலு வந்தத்துக்கு இசைந்து பாவம் செய்வது ; இதனால், நமது மனச் சுதந்தரம் குன்றிப்போகிறது...இன்னும் வேறு பல காரணங் களால் இது நேரிடக்கூடும்.

**122.** இத்தகைய காரணங்களால் மனச்சுதந்தரம் முற்றும் அற்றுப்போகிறதா ?

அபூர்வமான சில சமயங்களில் இது நேரிடக்கூடும். மற்ற வேளைகளில், மனச்சுதந்தரம் முற்றும் அற்றுப்போவ தில்லை ; அதை உபயோகிப்பது வெகு கடினமாகிறது. அதிகப் பிரயாசைக்குக் காரணமாகும்.

**123.** அறியாமை மனச்சுதந்தரத்தை (சுவாதீனம்) அழித்துப் போடுமா ?

இல்லை ; மனச்சுவாதீனத்தை உபயோகிப்பதற்கு அறி யாமை தடையாய் நிற்காது. அறியாமையினால், தவறுதலாய் ஒரு காரியத்தைத் தெரிந்துகொள்ளக்கூடும். செய்யப்போகும் காரியத்தைப்பற்றிய நன்மை தின்மையின் அறிவே இன்றி, சுத்த சூனியமாயிருக்கும்பட்சத்தில், இத்தகைய அறியாமையின் கார ணத்தால், அந்தக் காரியம் பாவம் ஆகாது.

**124.** சகல பாவங்களிலும் கனமான பாவம் எது ?

மனதார, வேணுமென்று, அது குற்றம் என்று நன் ருய்த் தெரிந்தும், கனமான காரியத்தைச் செய்வது மகா பெரும் தப்பிதம்.

**125.** அற்பச் சொற்பப் பாவங்களையும் **விலக்குவது** அவசியமா?

ஆம்; ஏனெனில், முதன்முதல், பாவம் என்றால் எல்லாப் பாவமும் பொல்லாப்புத்தான். இது தவிர, அற்பக் குற்றம் தானே பரவாயில்லை என்பதாக அடிக்கடி சிறு தப்பிதங்களைச் செய்யும் அப்பியாசம் ஏற்பட்டுப்போனால், வெகு எளிதாய்க் கனமான பாவங்களில் தவறி விழக்கூடும்; சாதாரணமாய், பாவத்தை அற்பமாய் எண்ணும்படி நேரும்.

---

## 8-ம் அதிகாரம்

## நன்மை தின்மையின்றி நடுத்தரமான கிரிகைகள்

### 1. நன்மை, தின்மை, நடுத்தரம்

**126.** சகல கிரிகைகளும் ஒன்றில் நல்லவை அல்லது கெட்டவை என்கலாமா?

இல்லை; நற்கிரிகைகள், துர்க்கிரிகைகள் நீங்கலாக, வேறு நடுத்தரமான கிரிகைகளும் உண்டு.

**127.** நடுத்தரமான கிரிகை என்றால் என்ன?

ஒரு கிரிகையைக் கற்பிக்கவும் இல்லை, விலக்கவும் இல்லை என்றிருக்குமானால், தன்னிலே நன்மையானதுமல்ல, தின்மையானதுமல்ல, தன்னிலே குற்றமற்றது, செய்யலாம். ஆனால் சில விசேஷ சந்தர்ப்பங்களில் தின்மையாகக்கூடியது. இத்தகைய கிரிகை நடுத்தரமானது என்று சொல்லப்படும்.

### 2. சந்தர்ப்பங்கள் சம்பவத்தன்மையை மாற்றுவது

**128.** மேற்கூறிய (நடுத்தரமான) கிரிகை எந்த சந்தர்ப்பங்களில் தின்மையானதாகக்கூடும்?

அந்தக் கிரிகையினால் உண்டாகும் பயனுக, நாம் விலக்கக் கடமைப்பட்டுள்ள சில காரியங்களும் கலந்து வருமானால், அந்தக் கிரிகை தின்மையானதாகும்.

**129.** இதைத் தெளிவாய்க் காண்பிக்கத்தக்க உதாரணங்கள் சில கூறு.

ஜன்னல் வழியாய் கல் எறிவது தன்னிலே குற்றமற்ற காரியம்; அந்த வழியாய்ப் போகும் ஜனங்களின்மேல் விழுந்து

மண்டையை உடைப்பதற்கான அபாயம் இருக்குமானால், அது குற்றமுள்ளதாகும்.

வாசித்தல், தன்னிலே குற்றமற்றது; வாசிக்கிற புஸ்தகத்தில் ஏதாவது வேதத்துக்கு விரோதமானது அல்லது பாவத்துக்கு வழியான விஷயம் இருந்தால், அதை வாசிப்பது தின்மையாகும்.

நேரப்போக்காக, அல்லது உல்லாசமாக, தன்னிலே பாவமில்லாத எந்த விளையாட்டு வேடிக்கையும் செய்யலாம். ஆயினும் இப்படி விளையாடுவதினால் அல்லது வேடிக்கை பார்ப்பதற்காக, நமது கடமையான காரியங்களை அலட்சியம் செய்ய நேர்ந்தால், அந்த விளையாட்டும் வேடிக்கையும் குற்றமாகும்.

பந்தயக்குதிரை முதலிய ஆட்டங்களுக்குப் போவதும் பந்தயம் ஆடுவதும் விலக்கப்பட்டவைகளல்ல; என்றாலும், இந்தப் பந்தயத்தால், நமக்கென்கிலும் நமது குடும்பத்துக்கென்கிலும் பெரும் நஷ்டம் விளையக்கூடியதாயிருந்தால் அந்த ஆட்டத்துக்குப் போகவொண்ணாது.

நடந்த சம்பவங்களைப்பற்றிப் பேசுவது, தன்னிலே தின்மையான விஷயமல்ல; அதினால், ஏதாவது பொல்லாப்பு விளைகிறதாயிருந்தால், பேசாமலிருப்பது நமது கடமை.

சிநேகிதனுக்கு உபசாரமாக ஏதோ கொஞ்சம் குடிக்கக் கொடுப்பது தின்மையல்ல; இவ்விதம் செய்வதினால், அவன் குடிவெறியனாவதற்கு இது காரணமாகக்கூடும் என்று தெரிந்தால், அதைக் கொடுக்கத்தகாது.

### 3. கருத்து அல்லது நோக்கம்

**130.** ஒரு நற்கிரிகை, எவ்வகையிலென்கிலும் துர்க்கிரிகையாகக்கூடுமா?

ஆம்; கெட்ட கருத்தோடு அல்லது கெட்ட முகாந்தரங்களுக்காகச் செய்தால், நற்கிரிகையும் துர்க்கிரிகையாகக் கூடும்.

**131.** இதற்கு உதாரணங்கள் உண்டா?

ஒருவன் ஏழை மனிதனுக்கு, அவனைப் பிற்பாடு பாவத்துக்கு இழுக்கலாம் என்கிற கருத்தோடு, உதவிசெய்தால், இது பாவம். ஒருவனுக்கு ஏற்பட்ட கடனை நீ அவனுக்குப் பதிலாகத் தீர்க்கும்போது, இம்மனிதனை உன் துர் ஆளுகைக்கு உட்படுத்தலாம் என்கிற கருத்தோடு செய்தால், இது தப்பிதம்.

யாதாமொரு வேதத்தை, இலௌகிக இலாபத்தை முன்னிட்டுமாத்திரம், ஒருவன் அநுசரிப்பது சரியல்ல.

பிறர் சிநேகத்தைப்பற்றியல்லாமல், வீண்பெருமை டம்பத்துக்காக ஒருவன் தானம் செய்வது, தின்மை என்னப்படும்.

## 4. பயனும் உபாயமும்

**132.** ஓர் நல்ல முகாந்தரத்தைக் கருதி அதை அடைவதற்கு உதவியான எந்த உபாயத்தையும் உபயோகிக்கலாமா?

குற்றமற்ற எந்த உபாயமும் உபயோகிக்கலாம்; பாவமான வழிகளை உபயோகிக்கத்தகாது.

**133.** பாவமான வழியும் நற்பயனும் கலந்த சில உதாரணங்கள் சொல்லு.

ஏழைகளுக்கு உதவிபுரிவதற்காகவென்ருவது, நமது குடும்ப சம்ரட்சணைக்கென்ருவது, திருடக்கூடாது, வஞ்சிக்கக்கூடாது.

ஒரு சிநேகிதனுக்குச் சகாயமாக, அவனுக்குப் பொய்யான "நன்னடத்தை அல்லது நற்சாட்சி" பத்திரம் கொடுக்கக்கூடாது.

யாதாமொரு வில்லங்கத்தினின்று நமது நண்பனை விடுவிக்கும்படியாக, பொய்ச்சாட்சி சொல்லத்தகாது. போலீசாருக்கு லஞ்சம் கொடுக்கவும் தகாது. ஒரு பொல்லாத மனிதனுல் பிறருக்குத் தீங்கு வராமல் தடுப்பதற்காக அவனைச் சுட்டுக் கொன்றுபோடக்கூடாது. யாதாமொரு உத்தியோகம் கிடைப்பதற்காக, ஒரு பரீட்சையில் தேர்ச்சியடையவேண்டியிருந்தால், ஏற்கனவே திருட்டுத்தனமாய் பரீட்சைக் கேள்விகளைப் பார்க்கக்கூடாது.

**134.** இந்த உண்மையை வற்புறுத்தும் மூதுரை யாது?

"நன்மை பயக்கத் தின்மை புரியலாகாது."

## 5. விசேஷ குறிப்புகள்

**135.** "கருத்து நேர்மையானதாகில், வழியைப்பற்றிக் கவலைப்படவேண்டியதில்லை" என்பது சரியா?

ஒரு பொதுக் கோட்பாடாக இதைக் கொள்வது சரியல்ல; பாவமான வழி, நேர்மையான கருத்தினுல் ஒருக்காலும் செவ்வைப்படாது.

**136. ஆனால், சில சமயங்களில் இது உண்மையல்லவா ?**

ஒரு வகையில் இது உண்மை, அஃதாவது : பொதுவாக விலக்கப்பட்ட சில விஷயங்கள் உண்டு ; சில சமயங்களில் இவற்ருல் நன்மை விளைவதுபற்றி, அச்சமயங்களில் அவற்றைச் செய்யலாம்.

**137. இவ்விதமான சில விஷயங்களைச் சொல்லு.**

சாதாரணமாய் எவனையும் கொல்லுவது தப்பிதம். ஆனல் பொதுஜனப் பிரயோசனத்தை முன்னிட்டு, அல்லது பாதகங்கள் முதிர்ந்து அதிகரிக்காவண்ணம், பெருங் குற்றவாளிகளுக்குச் சர்க்கார் மரணத்தண்டனை விதிக்கலாம். தன் உயிரைக் காப்பாற்றப் பிரயத்தனப்படுவதில் அல்லது நீதியான யுத்தத்தின் போது பிறர் உயிரைப் பறிப்பது பாதகமல்ல.

கை கால் எந்த அவயவத்தையும் சாதாரணமாய்த் துண்டிக்கக் கூடாது ; ஆனல் வியாதியின் காரணத்தால், உயிரைக் காப்பாற்ற அல்லது சுகம் அடைவதற்காக, அவ்விதம் துண்டிக்கலாம்.

பிறருக்குத் துன்பம் (வருத்தம்) விளைவிக்கத்தகாது ; ஆனல் குற்றம் செய்யும் பிள்ளையைக் கண்டிப்பதற்கும், அவனைச் சீர்திருத்தவும், அவ்வண்ணம் செய்யலாம். தன் உயிருக்கே ஆபத்தான விஷயங்களைத் தவிர்க்கக் கடன் ; ஆனல் பிறரைக் காப்பாற்றும்படி தன் உயிரை மோசத்துக்குள்ளாக்குவது சிறந்த புண்ணியம். பிறர் பொருளை அபகரித்தல் சாதாரணமாய் விலக்கப்பட்டிருக்கிறது ; ஆனல், பசியால் வருந்துகிறவனுடைய உயிரைக் காப்பாற்றும்படி கொஞ்சம் உணவுப் பொருளை எடுப்பது குற்றமல்ல.

**138. இவ்விதமாக வித்தியாசப் படுத்துவதற்குக் காரணம் என்ன ?**

அகத்தியமாய் அடையத்தகும் சில முக்கியமான நன்மைகளைக் கருதி, இந்த வித்தியாசம் இருக்கவேணுமென்று நமது சுபாவ அறிவே நமக்கு வற்புறுத்துகிறது.

**139. அப்படியானல், ஒரு கிரிகை நல்லது என்று முடிப்பதற்கு, அதற்கான இலட்சணங்கள் எவை ?**

முதலாவது : அதன் பொருள் அதாவது செய்யும் காரியம் நல்லதாக இருக்கத்தகும்.

இரண்டாவது : அதன் சந்தர்ப்பங்கள் சரியானவைகளாயிருக்கவேண்டும் ; அதாவது, விலக்கத்தக்க எந்தக் காரியமும் அதன் பயனக சம்பவிக்கத்தகாது.

மூன்றாவது : அதன் கருத்து நேர்மையாயிருக்கவேண்டும். அதாவது, நல்ல கருத்தோடும், நல்ல முகாந்தரத்துக்காகவும் செய்யவேண்டும். துர்க்கருத்து கலக்கத்தகாது.

இந்த மூன்று இலட்சணங்களில் ஏதாவது ஒன்று குறைவுபட்டால், அந்தக் கிரிகை முழுவதும் கெட்டுப்போகும்.

**140.** நடுத்தரமான கிரிகைகளை, கடவுளிடமிருந்து சம்பாவனை அடையத்தக்க புண்ணியக் கிரிகைகள் ஆக்கக்கூடுமா?

கூடும்; நமது ஜீவியம் கடவுள் நமக்கருளிய ஓர் நன்கொடை; அதை அவருடைய ஊழியத்தில் பிரயோகிக்க வேண்டும் என்பதை உன்னி, அதே கருத்துக்காக நமது கிரிகைகள் யாவும் செய்தால், நாம் செய்யும் ஒவ்வொரு சாதாரண கிரிகையும் அவருக்குப் பிரியமுள்ளதாகும்.

## 6. சந்தேகப்படும்போது செய்யத்தக்கது

**141.** நாம் செய்யும் ஒவ்வொரு கிரிகைக்குமுன், இவை யாவும் எப்படிச் சிந்தித்துப் பார்க்கக்கூடும்?

அநேக காரியங்களில் அற்பக் கஷ்டமுமில்லாமல் இது சாத்தியப்படும். அந்தந்தக் காரியம் நன்மையா, தின்மையா, குற்றமற்றதா, தப்பிதமானதாவென்று தெற்றெனப் புலப்படும். வெகு அபூர்வமாய்க் கஷ்டம் நேரிடுவதுண்டு.

**142.** தீர்மானிப்பதற்குக் கஷ்டமான காரியமாயிருந்தால், நாம் செய்யத்தக்கது யாது?

அத்தகைய கஷ்டம் நேரிடுங்கால், நாம் சிறிது நேரம் சிந்தித்து யோசிக்கவேண்டும். சந்தேகம் நிவாரணமாகுமுன், அந்தக் காரியத்தைச் செய்யக்கூடாது.

**143.** சந்தேகம் முற்றிலும் நீங்கித் தீர்மானமாக, அந்தக் கிரிகையின் நன்மை தின்மை தெரிவதற்குமுன், அதைச் செய்யக்கூடாதா?

அது தப்பிதம் என்பது தெளிவாயில்லை, அது சரி என்று நினைப்பதற்குச் சில பலத்த நியாயம் தோன்றுகின்றது; அப்பொழுது செய்யலாம். ஆனால், அது தப்பிதம் என்று நினைக்கப் பலத்த காரணம் தோன்றுகின்றது. ஆகிலும் நிச்சயமல்ல, இவ்விதம் இருந்தால் முற்றிலும் சந்தேகத்தைத் தீர்க்காமல் செய்யலாகாது.

*144.* ஆனால், இவ்வளவு தூரம் யோசிப்பதற்கு நேரமில்லை ; இரண்டிலொன்று, சீக்கிரம் தீர்க்கவேண்டியதிருக்கிறது. அப்போது என்ன செய்வது ?

அப்போது, அந்தக் காரியம் குற்றமானது என்று ஏறக்குறைய திட்டமாகத் தோன்றினாலொழிய, அதைச் செய்யலாம்.

*145.* மன வஞ்சகமின்றி ஒரு கிரிகை செய்தபிறகு, அது தப்பிதம் என்று தெரியவருகிறது. அதைச் செய்தது தப்பிதமாகுமா ?

அதற்கு நாம் உத்திரவாதியல்ல ; ஆனால், இனிமேலாக அதே விதமான காரியம் நேரிடும்போது என்ன செய்யவேண்டுமெனத் தீர்மானம் செய்துகொள்வது அவசியம்.

---

# 9-ம் அதிகாரம்

## நானும், பிறனும்

### 1. இருபேருடைய நடத்தைக்குமுள்ள சம்பந்தம்

*146.* அறநெறி மார்க்கம், நமது சொந்த அலுவலா ?

நமது நடத்தைக்கு நாமே உத்திரவாதி என்கிற அர்த்தத்தில் இது உண்மைதான். ஆனால், மற்றவர்கள் நமது நடத்தையில் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள் ; நமக்கும் அவர்களுடைய நடத்தையில் சம்பந்தம் உண்டு.

*147.* இதைச் சற்றே விவரித்துச் சொல்.

முதலாவது . சகலருக்கும் ஒருவரொருவர்மட்டில் கடமைகளும் உரிமைகளும் உண்டு; ஒவ்வொருவனும், மற்றொருவனுடைய உரிமைகளுக்கு பங்கம் நேரிடாது நடந்துகொள்ளவும், மற்றொருவன் மட்டிலுள்ள கடமைகளைச் சுமுத்திரையாய் நிறைவேற்றவும் வேண்டியவனாயிருக்கிறான்.

இரண்டாவது : மனிதருக்குள், ஒருவரொருவர்மட்டில் ஓர்வித வல்லமை உண்டு ; இவ்வல்லமையை, நன்மை உண்டாகவோ, தின்மை நேரிடவோ, பிரயோகிக்கலாம். இதின் முகாந்தரமாகப் பிறர் நம்மை எளிதில் பாவம் செய்யத் தூண்டக்கூடும் ; நாமும் பிறர் பாவம் செய்ய இலகுவாய் ஏவக்கூடும். பாவத்திற்குக் காரணமாயிருந்த எவனும், அந்தப் பாவத்துக்கு உத்தரவாதம் சொல்லவேண்டியவனாவான்.

## 2. பிறருடைய பாவத்துக்கு நாம் உத்தரவாதிகள் ஆவது

**148.** பிறருடைய பாவத்துக்கு நாம் எச்சமயங்களில் உத்தர வாதிகள் ஆகிறோம்?

பிறருக்குத் துர்மாதிரிகை காட்டும்போதும், அவர்கள் பாவம் செய்ய நாம் ஏவும்போதும், அல்லது உற்சாகப்படுத்திப் பாவத்துக்கு அவர்களை இழுக்கும்போதும், அவர்கள் பாவஞ் செய்ய நாம் உதவியாயிருக்கும்போதும், பிறருடைய பாவங் களுக்கு நாம் உத்தரவாதிகள் ஆகிறோம்.

**149.** சில உதாரணங்கள் கூறு.

பிறர் பார்க்க நாம் பாவம் செய்தால், அல்லது பகிரங்க மாய் துர்நடத்தை நடந்தால், அவர்கள் நம்மைக் கண்டுபாவிப் பதற்குக் காரணம் ஆகிறோம். விசேஷமாய் சிறுவர் முன்னிலை யில் பெரியோர் குற்றம் செய்வது, பாவத்தில் சிறியோரைப் பழக்கினதுபோலாகும்.

உதாசனமான வார்த்தைகள் பேசுவது, பிறர் பாவத் துக்குக் காரணம். நாம் பிறருடன் சேர்ந்து பாவம் செய்யும் போது அவர்கள் பாவம்செய்ய நாம் தைரியப்படுத்துகிறோம்.

**150.** பிறர் பாவம் செய்கிறதை நாம் அறிந்தால், அதைத் தடுப்பது நமது கடமையா?

அவர்கள்மேல் நமக்கு யாதொரு அதிகாரம் இல்லா விடில் அவர்களுக்குப் புத்தி சொல்லத்தான்கூடும்; கூடுமானால் அவ்விதம் அவர்களுக்குப் புத்தி சொல்லவேண்டும். அவர்கள் மேல் நமக்கு அதிகாரம் உண்டானால், தகுந்த விதமாய் அவர்களை அடக்கித் தடுக்கக் கடமையுண்டு.

**151.** இந்தக் கடமையை எடுத்துக்காட்டும் உதாரணங்கள் எவை?

பெற்றோர், தங்கள் பிள்ளைகளைக் கண்டித்து, அடக்கி அல்லது தண்டித்து, அவர்கள் பாவம் செய்யாதபடி தடுக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். பிள்ளைகளின்பட்டில் உத்தரவாதம் உள்ள உபாத்திமார், வேலைக்காரர் அவ்விதமே செய்யக்கடமை யுண்டு.

வேலைக்காரர் தங்கள் கடமைகளைச் செய்கிறார்களா என்று கண்காணித்துப் பார்க்கவும், அவர்களுக்குச் சோதனை உண்டாகாதபடி நடந்துகொள்ளவும், எஜமானனுக்குக் கடன்.

**152.** ஒருவனுடைய பாவத்தால், வேறொருவனுக்குத் தீங்கு விளைகிறதாயிருந்தால், நேர்ந்த பொல்லாப்புக்கு நாம் உத்திர வாதியா?

(1) அந்தப் பாவத்துக்கு நாம் எந்த வகையிலென்கிலும் உதவியாயிருந்தால், நேரிட்ட பொல்லாப்புக்கு நாம் உத்தரவாதிதான்.

(2) நாம் அந்தப் பொல்லாப்பைத் தடுக்கக் கடமைப்பட்டிருக்க, தடுக்காமலிருந்தால், அப்போதும் அதற்கு உத்தரவாதியே.

(3) நமக்குத் தடுக்கக் கடமை இல்லை; ஆகிலும் தடுத்திருக்கக்கூடும். இவ்விதமாயின், நாம் உத்தரவாதியல்ல.

### 3. நாம் பாவம் செய்யப் பிறர் நம்மை ஏவுவது

**153.** பிறர் நம்மை, பாவம் செய்யும்படி, எவ்விதம் ஏவக்கூடும்?

தங்களுடைய துர்நடத்தையால், பாவம் செய்ய நமக்குத் தைரியம்கொடுப்பதால், அல்லது பாவத்துக்கு நம்மை இழுத்துக்கொண்டுபோவதால், இது நேரிடக்கூடும்.

**154.** நமது பாவத்துக்குப் பிறர் உத்தரவாதியாகும் பட்சத்தில், நமக்கு அதைப்பற்றிய பொறுப்பு அற்றுப்போகிறதா?

இல்லை; நாம் கட்டிக்கொண்ட பாவத்துக்கு நாம்தாமே பொறுப்பு ஏற்றுக்கொள்ளவேண்டியது. ஏனெனில், பிறர் நம்மைப் பாவத்துக்கு ஏவினாலும், நாம் அவர்களுடைய ஏவுதலை எதிர்க்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

**155.** துர்மாதிரிகையால் விளையும் தின்மையை விவரித்துச் சொல்.

பிறர் பாவம் செய்வதை அல்லது துர்நடத்தையாய் ஜீவிப்பதைப் பார்க்கும்போது, பாவநினைவு நமக்குண்டாகி பாவத்தைப்பற்றி அற்பமாக எண்ணக் காரணமாகிறது. விசேஷமாய் இப்படிப் பாவம் செய்கிறவர்கள் உயர்ந்த பதவியிலுள்ளவர்கள், கல்வியில் பயிற்சியுள்ளோர், அல்லது மேலான உத்தியோகஸ்தராயிருந்தால், இது அதிக எளிதாய் நேரிடும். பாவம் அவ்வளவு கனமான காரியமல்ல, அரோசிகம் அருவருப்புக்குரியதல்ல என்னும் தப்பறையான உணர்ச்சி கிளம்பி, மெள்ள மெள்ளப் பாவத்தில் தவறி விழுவோம்.

**156.** கெட்ட சகவாசத்தால் விளையும் பயனென்ன?

கெட்ட தோழரோடு கூடினால், அவர்களுடைய துர்மாதிரிகையே நமக்குத் துர் ஏவலாயிருப்பதுமன்றி, அவர்கள் தாமே பாவத்தைப்பற்றி நம்மிடம் பேசித் தூண்டி அதைச்

செய்யச்சொல்லுகிறார்கள். நமக்கு அவர்கள்மேல் எவ்வளவு அதிகமாய் வாஞ்சை (பாசம்) உண்டோ, அவ்வளவு எளிதாய் அவர்களுடைய ஏவுதலுக்குச் சம்மதித்து உடன்படுவோம்.

157. நம்மோடு உறவாடும் கெட்ட தோழரால் இதுவரை நமக்கு யாதொரு பொல்லாப்பு நேரிடவில்லையென்றாலும், அவர்களோடு சேராமல் விலகிக்கொள்ளக் கடமையா?

முற்றிலும் அவர்கள் துர்ச்சனர் இல்லை. அவர்கள் தங்கள் நடத்தையைச் சீர்திருத்தும்படி, அவர்களை வற்புறுத்தி, கிரமமாய் அடக்கிவைக்க, நமக்குத் தைரியமும் வல்லமையுமுண்டு; அவ்விதமாயின், அவர்களைவிட்டு விலகக்கடமையில்லை. ஆனால், சாதாரணமாய் நேரிடுவதுபோல், அவர்களுடைய சகவாசம் நமக்குப் பொல்லாப்பு விளைவிக்கும் என்றிருக்குமாகில், அவர்களைவிட்டு விலகிக்கொள்ளவேண்டும்.

158. நமது சிநேகிதரால் நமக்குத் தீங்கு விளைகிறதென்று கண்டால், உடனே அவர்களுடைய உறவை அறவே நீக்கக் கடமையா?

சந்தேகமில்லாமல், அத்தகைய உறவை அறவே நீக்க வேண்டும்.

" கொம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே—வம்புசெறி
தீங்கினர் தங் கண்ணிற் றெறிபாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி"

ஏனெனில், பாவத்தைமட்டுமன்றி, பாவ சமயத்தையும் விலக்குவது நமது கடமை.

159. பாவச் சமயம் யாது?

பாவம் விளைவதற்கு இலகுவான வழியும், நாம் விலகிக் கொள்ளாவிட்டால், பாவத்தில் சற்றேறக்குறைய நிச்சயமாய் விழுவதற்குக் காரணமாயுமிருக்கக்கூடிய பொருள், ஆள், எதுவும் பாவச்சமயம் எனப்படும். கெட்ட சிநேகிதன் ஒருவன்மேல் நமக்கு எவ்வளவு அதிகமாய்ப் பற்றுதல் இருக்குமோ, அவ்வளவு அதிகமாய் அவன் நமக்குப் பாவச்சமயம் என்று சொல்லத்தகும்.

160. கெட்ட தோழர் நீங்கலாக, வேறு பாவச்சமயம் ஏதாவது பிறரால் நமக்கு நேரிடக்கூடுமா?

ஆம்: சமாச்சாரப்பத்திரிகைகள், புஸ்தகங்கள், கண்காட்சியான வேடிக்கை, நாடகம், படம், சுரூபம் இவைகளில்

வேதத்துக்கு அல்லது நல்லொழுக்கத்துக்கு விரோதமானது இருந்தால் அல்லது அவை நமது ஆசாபாசத்தைக் கிளப்பக் கூடியவையானால், இவை யாவும் பாவச்சமயம் ஆகக்கூடும்.

**161.** நாம் பாவம் செய்யப் பிறரால் கட்டாயம் ஏற்படுவது எவ்வண்ணம்?

ஊழியன் சாதாரணமாய் எஜமானனின் விருப்பத்துக்கு விரோதம் செய்யப் பயப்படுவான் என்பதினால், எஜமானன் தன் ஊழியனைப் பாவத்துக்குக் கட்டாயப்படுத்தக்கூடும்.

மனத் திடகாத்திரமுள்ள ஒருவன், ஏழை நெஞ்சம் படைத்தவனை எளிதில் வலுவந்தப்படுத்தக்கூடும்.

துன்மார்க்கர், நமது நன்னடத்தையைக் குறித்துப் பகடிபரிகாசம் செய்து நம்மை ஏளனம் பண்ணக்கூடும். பாவம் செய்வது ஆண்மைத்தனம் என்று அவர்கள் சொல்லி, நாம் பாவத்துக்கு அஞ்சி விலகுவதால், நம்மைக் கோழைகள் என்றும் மதியீனர் என்றும் நகைக்கக்கூடும்.

**162.** இதற்கு விரோதமாய் எதிர்த்து நிற்பது எவ்விதம்?

புண்ணியம் கோழைத்தனமல்ல, வீரச்செயல் என்பதை சிந்தித்துக்கொள்ளத்தகும். நமது கடமைக்குப் பிரமாணிக்கமாயிருப்பதிலும், சிறந்த ஆண்மைச் செயல் இல்லை என்று நினைக்க வேண்டும். இவ்விதம் சிந்திப்பதால், பிறர் முகத்தாட்சணைக்குச் சம்மதியாமல், நாம் தைரியமாயிருக்கக்கூடும்.

## 4. முகத்தாட்சணியம்

**163.** முகத்தாட்சணியம் யாது?

பிறர் அபிப்பிராயத்துக்கு அஞ்சுவது; அவர்கள் நம்மைப்பற்றி என்ன நினைப்பார்களோ, ஏது செய்வார்களோ என்று பயந்து, நமக்கு நீதியாகத் தோன்றுகிறதையும் செய்யத் துணியாமல் விட்டுவிடுவது முகத்தாட்சணியம் என்னப்படும்.

**குறிப்பு:**— மற்றவர்களுடைய அபிப்பிராயங்களையும் விருப்பங்களையும் நாம் தக்க மேரையாய் ஏற்றுக்கொள்வது, பிறர் சிநேகத்துக்கும் தாழ்ச்சிக்கும் உரிய புண்ணியம். ஆனால் அவர்களின் துர் அபிப்பிராயத்துக்கும் கெட்ட விருப்பத்துக்கும் உடன்படுவது பாவம். அதுதான் முகத்தாட்சணியம் என்னும் குற்றம்.

**164. முகத்தாட்சணியத்தை எதிர்ப்பது எவ்விதம்?**

"எனது கிரிகைகளைப்பற்றி நான் கடவுளுக்கு உத்தரவாதம் சொல்லவேணுமேயன்றி, மற்றவர்களுக்கு நான் அவற்றைப்பற்றி உத்தரவாதியாகமாட்டேன். நான் தப்பிதம் செய்தால் நானே தண்டனை அநுபவிக்கவேண்டியவன், அவர்களல்ல. பிறருடைய பிரீதிக்காக, நான் வீணில் கெட்டுப்போகிறதா? நான் என்ன, அவர்களுக்கு அடிமையா, அவர்கள் ஆசை, விருப்பப் பிரகாரம் நடக்க? எனக்கு மனுஷத்தன்மை இல்லையா, என் மகிமை கீர்த்தியை விற்றுப்போட; கூடாது, நான் சம்மதிக்க மாட்டேன்" என்று நமக்கே நியாயஞ் சொல்லித் தைரியமாய் நடக்கவேணும். "நாம், மனிதருக்கு அதிகமாய் பயப்பட்டால் கடவுளுக்காக அதிகமாய் ஒன்றும் செய்யமாட்டோம்; கடவுளுக்காகச் செய்யும் ஒவ்வொரு கிரிகையும், நெருக்கிடைக்குக் காரணமாகிறது" என்று அர்ச். இஞ்ஞாசியார் சொல்லுகிறார். மனிதரை எதிர்க்க நமககு மனமுண்டா, அவசியம் நேர்ந்தால், நமது அநுதினக் கிரிகைகளில் வேதக் கோட்பாடுகளுக்காக நம்மைத் தாமே பரித்தியாகம்பண்ண நாம் மனதாயிருக்கிறோமா இல்லையா, என்பதுதான் "நாம் கடவுளுக்குப் பிரியப்பட விரும்புகிறோமா, இல்லையா," என்றறிவதற்கான பரிசோதனை.

---

# இரண்டாம் பாகம்

## ஆத்மீகக் கோட்பாடு

## தன்னை ஆளுதல், மானிட தத்துவங்களும், முயற்சிகளும், அவற்றை அடக்குதலும்

## 1-ம் அதிகாரம்

### மனசின் உத்தர தத்துவங்கள்

#### 1. மனிதனும், மிருகங்களும்

*165. ஜீவிய சட்டத்தை அநுசரிப்பதற்கு அவசியமான பிரதம ஒழுங்கு எது?*

நமது தத்துவங்களையெல்லாம், கடவுள் அவற்றை உண்டாக்கும்போது, கொண்டிருந்த நோக்கத்துக்காக உபயோகித்து, அவற்றை அவப்பிரயோகம் செய்யாதிருக்கத்தகும்.

*166. இது எவ்விதமாகும்?*

மானிட தத்துவங்கள் ஒவ்வொன்றையும் அறிந்து, அவற்றை அடக்கி ஆளுவதால் ஆகும்.

*167. மானிட தத்துவங்கள் யாவை?*

அவை இரு வகைப்படும்: முதலாவது, மிருகங்களுக்கும் தாவரங்களுக்கும் நமக்கும் பொதுவாயுள்ள சரீர அதம தத்துவங்கள்; இரண்டாவது, மனசின் சில உத்தர தத்துவங்கள்.

*168. இதைச் சற்றே விவரித்துச் சொல்லு.*

புல், பூண்டு, விருக்ஷம், இவைபோன்ற தாவரம், உணவை அருந்தி வளருகிற ஒரு ஜீவ வர்க்கம். மிருகம், இதுவுமன்றி, பார்க்கக்கூடும், கேட்கக்கூடும், உணரக்கூடும்; பற்பல காரியங்களை ஆசிக்கக்கூடும், வெறுக்கக்கூடும்; இன்பம் தரக் கூடியவற்றைத் தேடவும், துன்பம் வருவிக்கக்கூடியவற்றை விலக்கவும் கூடும். மனிதனுக்கு, இப்போது கூறப்பட்ட சரீர தத்துவங்கள் யாவும் உண்டு; இவைகளுமன்றி புத்தி, மனது என்னும் உத்தர தத்துவங்களும் அவனுக்குண்டு.

## 2. புத்தி

*169.* புத்தி என்பது யாது?

அறியவும், யோசிக்கக்கூடிய தத்துவம் புத்தி என்னப்படும்.

*170.* புத்தியின் அலுவல் என்ன?

சத்தியமும் நன்மையுமானதை அறிந்து, தப்பறையிலிருந்து சத்தியத்தை வேறுப்படுத்துவதும், தின்மையிலிருந்து நன்மையை வேறுபடுத்துவதும் அதன் தொழில்.

*171.* புத்தியால் கிரகிக்கக்கூடிய பிரதானமான சத்தியங்கள் எவை?

1-வது. இதர உலக சிருஷ்டிகளையும், அவற்றின் மத்தியில் மனிதனுடைய பதவியையும் அறியக்கூடும்.

2-வது. உலகம் தன்னாலே ஆனதல்ல, கடவுளால் உண்டாக்கப்பட்டிருக்கவேணுமென்று கண்டுபிடிக்கக்கூடும்.

3-வது. கடவுள் எத்தன்மையானவர், அவர் சர்வ இலட்சணம், சர்வ அதிகாரம், சர்வ நன்மைத்தனமுள்ளவர் என்று அறியலாம்.

4-வது. மனிதன் கடவுளுடைய சிருஷ்டிப் பொருளானதுபற்றி, அவருக்கு ஊழியம் செய்யவும் அவர் சட்டத்துக்குக் கீழ்ப்படியவும் கடமைப்பட்டிருக்கிறான் என்று அறியக்கூடும்.

5-வது. கடவுளுடைய சட்டம் எது, செய்யத்தக்கது என்ன, செய்யத்தகாதன எவை என்று கண்டுபிடிக்கலாம்.

## 3. மனது (அல்லது சித்தம்)

*172.* மனது யாது?

நிர்ணயமாய் யாதொன்றை விரும்பவும், வெறுக்கவும் என்னவிதமாய் நடக்கத்தகும் என்று தீர்மானிக்கும் தத்துவம் மனது என்று சொல்லப்படுகிறது.

*173.* மனதின் தொழில் என்ன?

சத்தியம், நன்மை, இவைகளைத் தேடுவதும், அபத்தமும் தீங்குமானதைத் தவிர்ப்பதும் அதன் தொழில்.

*174.* தன் நடத்தையைத் தீர்மானிப்பது எவ்விதம்?

1-வது. புத்தியின் சிந்தனைகளை அடக்குவதாலும்;

2-வது. (மனது) தன் ஆசைகளை அடக்குவதாலும்,

3-வது. சரீர தத்துவங்களை அடக்குவதாலும், தீர்மானிக்கலாம்.

175. சிந்தனைகளை அடக்குவது எவ்விதம்?

நல்ல சிந்தனைகளை ஆதரித்துத் துர்சிந்தனைகளை தூர அகற்றுவதால் ஆகும்.

176. துர் நினைவுகளை ஏன் அகற்றவேணும்?

அவை தம்மிலே கெட்டவை, மேலும், அவற்றால் துர் இச்சை உண்டாகி துர்க்கிரிகைகளுக்கு வழியாகின்றது.

177. மனது தன்னைத்தானே அடக்குவது எவ்விதம்?

நல்ல ஆசையை அதிகரித்துக் கெட்ட ஆசையை அகற்றுவதால் ஆகும்.

178. துர் ஆசையை அகற்றுவானேன்?

அது தன்னிலே பொல்லாதது; துர்க்கிரிகைகளுக்கு வழியாகிறது.

179. மனது சரீரத்தை அடக்குவது எவ்விதம்?

இந்திரியங்களையும், ஆசாபாசங்களையும், சரீரசேஷ்டைகளையும் அடக்குவதால் ஆகும்.

180. சரீரத்தை மனது அடக்கவேண்டியதெப்போ?

ஏதாவது கெட்ட செய்கை செய்யச் சரீரம் தேடும் போதெல்லாம் மனது அதை அடக்கவேண்டும்.

---

## 2-ம் அதிகாரம்

### சரீரத்தின் அதம தத்துவங்கள்

#### 1. ஆசாபாசங்கள்

181. சரீர தத்துவங்கள் எவை?

இந்திரியங்கள், ஆசாபாசங்கள் அவயவங்களின் சேஷ்டைகள் இவை சரீர தத்துவங்களாகும்.

182. ஆசாபாசங்கள் எவை?

வேகமாய்க் கிளம்பி, கிரிகைக்கு வழியாகிற பலத்த உணர்ச்சிகளாகிய விருப்பு, வெறுப்பு இவை இரண்டும் ஆசாபாசம் என்னப்படும்.

**183.** இவை இரண்டுக்கும் உதாரணங்கள் கூறு.

இன்பகரமான காரியங்களில் பற்றுதல், ஆசை, ஆனந்தம், ஆவல்; துன்பகரமான காரியங்களில் வெறுப்பு; அருவருப்பு, பயம், கோபம்.

**184.** பாவத்துக்கு நம்மை இட்டுக்கொண்டு போகக்கூடிய ஆசாபாசங்கள் எவை?

(1) நமக்குப் பிரியமான காரியங்களில்:—சாப்பிடவும் குடிக்கவும் ஆசை, சிற்றின்பப்பிரியம் அல்லது காமம், பண ஆசை அல்லது பொருளாசை, மகிமை, கீர்த்தி, அதிகாரம், இவைகளின்மேல் பற்றுதல், விநோதப்பிரியம், இன்பசுகபோகப் பிரியம்.

(2) நமக்குப் பிரியமில்லாத காரியங்களில்:—துன்பம், வருத்தம், பிரயாசை இவற்றை வெறுத்தல்; பிறரை அருவருத்தல், பகை, காய்மகாரம், பொறுமை, கோபம், துன்பம், அவசித்தி, நஷ்டம் வருமோவென்ற ஐயுறவு, அல்லது பிறர்மட்டில் பயம்.

**185.** ஆசாபாசம் கிளம்புவதற்குக் காரணம் என்ன?

அதை எழுப்பக்கூடிய காரியங்களைப் பார்ப்பதால் அல்லது அவற்றைப்பற்றி யோசிப்பதால் உண்டாகிறது.

**186.** சில உதாரணங்கள் சொல்லு.

அன்னபானத்தைக் கண்டதும், அல்லது உணவுப் பொருளை முகர்ந்ததும் சாப்பாட்டின்பேரிலும், பானத்தின்பேரிலும் பிரியம்உண்டாகிறது. காமத்துக்குரிய பொருட்களைக் கண்டதும் அல்லது தொட்டதும் சிற்றின்பப்பிரியம் உண்டாகிறது. நமக்குப் பிரியமில்லாத அல்லது அருவருப்பான ஒரு ஆள் அல்லது பொருளைக்கண்டால், கோபம் கிளம்புகிறது.—பொருளைக் காணக்கூடாதேபோனால் அதன் நினைவே போதும்.

**187.** ஆசாபாசம் கிளம்பாதபடி தடுக்கக்கூடுமா?

நமது பஞ்சேந்திரியங்களை (திருஷ்டி, ஸ்பரிசம் முதலானவைகளை) அடக்குவதால் தடுக்கலாம்.

## 2. பஞ்சேந்திரியங்களின் அடக்கம்

**188.** நமது இந்திரியங்களை அடக்குவது எப்படி?

ஆசாபாசத்தை கிளப்பக்கூடிய பொருட்களில் அவை செல்லாமல், வேறு காரியங்களைக் கவனிக்கும்படி செய்வதால் ஆகும்.

**189.** சில உதாரணங்களைக்கொண்டு, இதைத் தெளிவாய் எடுத்துக்காட்டு.

பாவத்துக்கான ஆசை அல்லது கோபம் வருத்துவிக்கக் கூடிய பார்வைகளைக் காணுமல் கண்ணைத்திருப்பிக்கொள். அதே விதமான காரியங்களைக் கேட்காமல், காதை அடைத்துக்கொள். சிற்றின்ப உணர்ச்சியை உண்டாக்கும் பொருட்களைத் தொடாதே. போசனப்பிரியத்தை எழுப்புகின்ற காரியங்களை ருசி பார்க்காதே ............ இப்படியே மற்றும்.

" கடவுள் நமக்கு கண்களும், கண் இமைகளும் கொடுத்திருக்கிருர். இமைகள் என்னத்திற்கு? பார்க்காதபடி. உன் கண்கள், பார்க்கும்படி ; உன் இமைகள், பார்க்காதபடி தடுப்பதற்கு உனக்கு இருக்கின்றன. இவ்வுலகில், பற்பல கெட்ட பொருட்கள் உண்டு. அவைகளைப் பார்க்காதபடி ; கண் இமைகளையும், நல்ல பொருட்களைப் பார்ப்பதற்குக் கண்களையும் கடவுள் தந்திருக்கிருர். கண் இமைகளைப் பிரயோகி ; கெட்ட காரியங்களைப் பார்க்காதே." (*Bernard Vaughan*)

" தன்னைத்தானே அடக்கியாள்வதில் அதிகச் சிறந்த வீரியச் செயல் யாதெனில், ருசிப்பார்த்தும் அருந்தாமலிருப்பது," என்று ஓர் ஞானி வசனித்திருக்கிருர்.

**190.** இதன் அர்த்தம் என்ன?

யாதாமொரு காரியத்தை ருசிபார்த்தறிந்தபின், சாப்பிடாமலிருப்பதிலும், ருசி பார்க்காமலிருப்பது எளிது. இவ்வண்ணம் மற்ற நான்கு இந்திரியங்களைப்பற்றியும் கூறலாம்.

**191.** கெட்ட வஸ்துகளினின்று நமது இந்திரியங்களை அகற்றுவது எப்போதும் சாத்தியப்படக்கூடியதா?

முற்றிலும் கூடுமான காரியமல்ல இது. ஆனுல் ஆசாபாசம் எழும்பத்துவக்கினவுடன், அது எவ்வளவுதான் நமக்கு ஆனந்தமாயிருந்தபோதிலும், நம்மாலியன்றமட்டும், அந்த வஸ்துக்களினின்று விலகவேண்டும்.

## 3. ஆசாபாசத்தை அடக்குதல்

**192.** ஒருக்காலும் ஆசாபாசம் எழும்பாமல் தடுக்க முடியுமா?

அது எழும்பாதபடி தடுப்பது எப்போதும் நம்மாலாகுங் கர்மமல்ல ; ஆனுல், அது எழும்பினவுடன் அதை அடக்கிக் கட்டுப்படுத்திப் பாவத்துக்கு வழியாகாதபடி தடுக்கக்கூடும்.

**193.** ஆசாபாசத்தை அடக்குவது கடினமா ?

அது வேகங்கொள்ள விட்டுவிட்டால், பிறகு நாம் அதை அடக்குவது கடினம்; ஆனால், ஆரம்பத்தில் அது எழும் பினவுடனே அடக்குவது சற்றேறக்குறைய எளிதே.

**194.** ஆரம்பத்தில் ஆசாபாசத்தை அடக்கிப்போடுவது ஏன் எளிது ?

ஏனெனில், சாதாரணமாய் அது அமெரிக்கையாய் ஆரம்பித்து, மெள்ளமெள்ள வேகங்கொண்டு இறுதியில் அடக்குவதற்குக் கடினமாகிவிடுகிறது.

**195.** ஆசாபாசம் எழும்பின பிறகு, அதை அடக்குவது எவ்விதம் ?

முதலாவது: அதற்கு விரோதமாய், மனத்திடனைக் காட்டவேண்டும்.

2-வது: அதைக் கிளப்பும் பொருளினின்று விலக வேண்டும்.

3-வது: வேறு ஏதாவது நல்ல காரியத்தின்மேல் நாம் சிந்தனையாயிருக்கப் பிரயாசப்படவேண்டும்.

4-வது: கெட்ட கிரிகை செய்வதற்குச் சரீரம் முயலாதபடி தடுக்கவேண்டும்.

5-வது நாம் உறுதியாயிருக்கத்தக்கதாக கடவுளைப் பிரார்த்திக்கவேண்டும்.

**196.** கெட்ட கிரிகையில் சரீரம் பிரவேசித்துவிட்டால், என்ன செய்யத்தகும் ?

உடனே அதை அடக்கி, நம்மைத்தாமே திடப்படுத்திக்கொண்டு, அதை நாம் மறந்துபோவதற்கு ஏதுவான வேறு எந்தக்காரியமாகிலும் செய்யத்தகும்.

## 4. பழக்கம்

**197.** ஆசாபாசத்துக்கு இடங்கொடுத்தால் என்ன நேரிடும் ?

நாம் ஓர் தடவை ஆசாபாசத்துக்கு இடம் கொடுத்தால், மறுதடவை அது அதிக வேகமாய் எழும்பும்; இவ்விதமாக அடிக்கடி அதற்கு உடன்படுவதால், அது நமக்கு ஓர் "பழக்கம்" ஆகிவிடும்.

**198.** பழக்கம் என்பது என்ன ?

ஆசாபாசம் அடிக்கடி வேகமாகவும், துரிதமாகவும் எழும்பி, உடனே கிரிகையும் ஏற்படக் காரணமாயிருப்பதுதான் பழக்கம் என்கிறோம்; இதனால் பாவம் ஓர் அப்பியாசமாகிவிடுகிறது.

**199.** ஓர் பழக்கம் ஏற்பட்டபின், அதைத் தள்ளிப்போடக் கூடுமா ?

அரியபெரிய பிரயாசையால் ஆகும் கர்மமேயன்றி, இஃது எளிதல்ல.

**200.** இதிலிருந்து நாம் அறியத்தக்கதென்ன ?

ஆசாபாசத்தை ஆரம்பத்திலேயே அடக்கி, அது முதிர்ந்து பழக்கமாகாதபடி தடுக்க முயலவேண்டும். இவ்விதம் செய்தால், நல்ல வழியில் நடப்பது சுலபமாயிருக்கும் ; இவ்விதம் செய்ய அசட்டையாயிருந்தால், நல்ல வழியில் நடக்க, நாம் சதா போராடித் திரவேண்டும்.

## 5. வாக்கு, சேஷ்டை ரூபிகரம்

**201.** மேலே கூறினவை நீங்கலாக, இன்னும் வேறு எதை யாவது நாம் அடக்கவேண்டியதுண்டா ?

ஆம் ; நமது நாவையும், சேஷ்டைகளையும், ரூபிகரத் தையும் அடக்கத்தகும்.

**202.** நாக்கை ஏன் அடக்கவேண்டும் ?

அது வழுவழுப்பாயிருந்துகொண்டு, வழவழவெனச் சொல்லத்தகாத காரியங்களைச் சொல்லிவிடுகிறது. அது சுழலத் துவக்கினபின் அதை அடக்குவது மகா பிரயாசை ; மீளவும் " நா அசைய நாடு அசையும். "

யாகாவாராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப்பட்டு. (நாயனர்)

**203.** சேஷ்டைகளை அடக்குவதேன் ?

யாதாமொரு ஆசை அல்லது பாசம் தோன்றினவுடன், சரீரம் சுயேச்சையாய்ச் சேஷ்டை ஆரம்பிக்கும் ; அதைத் தடுக்கா விடில், அடாததைச் செய்து தீரும்.

**204.** ரூபிகரம் என்பது யாது ?

ரூபிகரம் மனதின் " கண் " எனலாம் ; நாம் காரியங் களைக் கண்ணுற்று கண்டதுபோல், அது நினைவில் நமக்கு எடுத்துக் காட்டுகின்றது.

**205.** ரூபிகரத்தை அடக்குவதேன் ?

ஏனெனில், பஞ்சேந்திரியங்களைப் பார்க்கிலும், அதி வேகமாய் ரூபிகரம் ஆசாபாசத்தை எழுப்பக்கூடியது.

*206.* ரூபிகரத்தை அடக்கிக் கட்டுப்படுத்துவது கடினமல்லவா?

பஞ்சேந்திரியங்களைக் கட்டுப்படுத்துவதிலும், இது அநேக சமயங்களில் கடினமானதே. ஆகையால், ஆசாபாச நெருப்புக்கு விறகுபோன்ற பொருட்களை உற்றுப்பார்க்காதபடி எச்சரிக்கையாயிருக்கத்தகும். பார்த்தால், பிற்பாடு நமது ரூபிகரத்தில் அவை தோன்றிப் பாவத்துக்கு ஏதுகரமாகும்.

## 6. பாவத்துக்குச் சாக்குச் சொல்லுவது

*207.* ஆசாபாசம் அதிவேகமாயும் அடக்கக் கடினமாயுமிருப்பதைப்பற்றி, அதனால் ஏற்படும் கிரிகை, பாவம் அல்ல என்கலாமா?

அவன் பாவத்தில் விழுந்ததற்குக் காரணம் ஆசாபாசத்தின் வேகம் என்கலாமேயொழிய, அவனுக்குப் பாவம் இல்லை என்கலாகாது; ஏனெனில், ஆசாபாசம் எவ்வளவுதான் வேகங்கொண்டாலும், அவனுக்கு அதை எதிர்க்கும் தத்துவம் உண்டு.

*208.* ஓர் துர்பழக்கம் ஏற்பட்டுப்போனதையிட்டு, நான் என்ன செய்வேன், அது எனக்குப் பாவம் இல்லை என்கலாமா?

நீ பாவத்தில் வெகு சுலபமாய் விழுவதற்குக் காரணம் உன் துர்ப்பழக்கம் என்பது சரியாகுமல்லாது, அதனால் உனக்குப் பாவம் இல்லை என்பது சரியல்ல; ஏனெனில் பழக்கத்தைப் பழக்கத்தால் எதிர்க்கக்கூடும்.

*209.* பாவத்தைத் தடுக்க வெகு பிரயாசையாயிருந்தால், அந்தக்கிரிகை பாவம் அல்ல என்று சொல்லக்கூடாதா?

ஒருக்காலுமில்லை; பிரயாசை பாவத்தை இல்லை என்று ஆக்காது; பிரயாசையாயிருந்தால், அதை அதிகத் தைரியமாய் எதிர்க்கக் கடமை ஏற்படுகிறதல்லாமல் வேறல்ல.

*210.* வேறுவிதமாய்ச் செய்ய நம்மால் இயலவில்லை என்கிற சாக்குச் செல்லுமா?

செல்லாது; நாம் இவ்விதம் சொல்லத்துவக்கினால் வெகு சீக்கிரம் அதை நம்பி, பாவத்தை அற்பமாய் எண்ணி, ஒவ்வொரு தடவைக்கும் அதிக சுலபமாய்ப் பாவத்தில் விழுந்து, கடைசியாக முற்றும் துர்ச்சனராவோம்.

# 3-ம் அதிகாரம்

## சரீரத்துக்கும் மனசுக்குமுள்ள சம்பந்தம்

### 1. பாவ உற்பத்தி

**211.** பாவம் சரீரத்தினின்று ஆரம்பிக்கிறதா, மனசினின்று முதன்முதல் ஆரம்பிக்கிறதா?

இருவிதமாகவும் ஆரம்பிக்கின்றது.

**212.** இது எவ்விதம் நேரிடுகிறதென்று விவரித்துச்சொல்.

சிலவேளைகளில், ஆசாபாசம் சரீரத்தில் கிளர்ச்சி உண்டுபண்ணி, மனசில் பாவநினைவை வருவிக்கின்றது. பிறகு மனது அதை ஏற்றுக்கொண்டு, ஆசாபாசம் தன் இஷ்டபடி நடக்கும்படி, அதை விட்டுவிடுகிறது. வேறு சமயங்களில், மனசு பாவத்தைப்பற்றி நினைத்து அதை விரும்புகிறது. அதன்பின், நினைவானது ஆசாபாசத்தைக் கிளப்புகிறது. கடைசியாக சரீரம் பாவக்கிரிகையைப் புரியும்படி மனது அதை ஏவுகிறது.

**213.** சாதாரணமாய் சரீரத்தினின்று உதிக்கும் பாவங்கள் எவை?

இந்திரியங்களால் உண்டாகும் அதம இச்சைகள்; போசனப்பிரியம், சிற்றின்பம், கோபம், குரோதம், சோம்பல், அசமந்தம், இவை முதலியன.

**214.** சாதாரணமாய் மனசினின்று உற்பத்தியாகும் பாவங்கள் எவை?

நினைவினாலும், ஆசையினாலும் உண்டாகும் ஆங்காரம், பெருமை, பேராசை, லோபித்தனம், காய்மகாரம், பொருமை, பகை, வர்மம், வஞ்சகம், பொய் இவையாவன.

**215.** ஆனால் பாவம் எதில் இருக்கிறது, சரீரத்திலா, மனசிலா?

நினைவு, ஆசையால் விளையும் பாவங்கள் மனசில்மட்டும் இருக்கின்றன, வாக்குக்கிரிகையினாலாகும் பாவங்கள் மனசால் ஏவப்பட்டுச் சரீரத்தால் செய்யப்படுகின்றன.

### 2. மனதின் உத்தரவாதம்

**216.** மனிதனுக்குள்ள அவயவம் தத்துவங்களில், (எந்தப் பாகம்) எது சகலவித பாவத்துக்கும் உத்தரவாதி என்கலாம்?

பாவத்துக்கு உத்தரவாதம் முற்றிலும் மனதே.

"பாவம் மனதைச் சேர்ந்தது; மனதைச் சாராதிருந்தால், அது பாவமல்ல" (அர்ச். அகுஸ்தீன்).

**217.** இதனால் நமக்கு ஏற்படும் கடமை என்ன?

மனதைத் திடப்படுத்துவதற்கான வழியைத் தேட வேண்டும். அது திடமாயிருந்தால், நன்மையை எப்போதும் தெரிந்துகொள்கிற பழக்கம் உண்டாகும்; சரீர தத்துவங்களையும் மனசின் தத்துவங்களையும் திடாரிக்கமாய் அடக்கிக் கட்டுப் படுத்திக்கொண்டுவரும்.

**218.** மனதைத் திடப்படுத்துவதற்காக நாம் என்ன செய்ய வேண்டும்?

(1) "தேவச்சட்டம் இருக்கிறது" என்பதை சதா மனதில் தரித்திருக்கவேண்டும். "தேவகட்டளையின்பிரகாரம் நடப்பது நமது கடமை" என்று எப்போதும் நினைத்துவரவேண்டும். (2) நமது கடமையை அநுசரிக்கும் பழக்கத்தை உண்டு பண்ணவேண்டும் (3) ஒரு காரியம் நமக்கு பிரியமோ, பிரியமில்லையோ அது ஒரு பொருட்டல்ல. அது "தகுந்த" காரியமாயிருந்தால் சரி, அதைப்பற்றியே அதைச்செய்து பழக வேண்டும்.

**219.** பாவச்சோதனைகளை ஜெயிக்கும்போதுமாத்திரம், மனது திடப்படுகிறதா, வேறுவிதத்திலும் அது திடன் அடைகிறதா?

இவ்வுலக வாழ்க்கையில் நேரிடும் நானாவித சாமான்ய காரியங்களிலும், எப்போதும் தைரியமாய், திடமாய்த் தீர்மானம் செய்து, அத்தீர்மானப்படி நடந்து பழகுவதினாலும் நமது மனதைத் திடப்படுத்தலாம்.

குறிப்பு:—இதுவிஷயத்தைப்பற்றி, இப்புஸ்தகம் மூன்றாம் பாகத்தில் அதிக விரிவாய்க் கூறப்பட்டிருக்கிறது.

---

## 4-ம் அதிகாரம்

## ஆசாபாசங்களின் விரித்துரை

### 1. மிருக ஆசாபாசம் மானிட ஆசாபாசம்

**220.** ஆசாபாசத்தின் உண்மையான அர்த்தம் யாது?

நமது அதம சுபாவ உணர்ச்சிகள் ஆசாபாசம் எனப்படும். இவ்வுணர்சிகளையே, மிருகத்தைப்பற்றிப் பேசும்போதும், "சுயநாட்டம்" என்றழைக்கிறோம்.

**221.** சுய நாட்டம் என்றால் என்ன?

ஓர் விசேஷித்த (குறிப்பிட்ட) வகையாய் நடக்கும்படி நம்மை ஏவும் சரீர உணர்ச்சியைச் சுய நாட்டம் என்கிறோம்.

**222.** மிருகங்களினுள்ள சுய நாட்டத்தை திருஷ்டாந்தப் படுத்தும் சில உதாரணங்கள் சொல்லு.

மிருகம், பசி உண்டானால், உணவைத் தேடுகிறது; உணவைக்கண்டு, அதை அடைய முயலுகிறது. தன் பெட்டையின்மீது பாசம் உதிக்கவே, அதனண்டை ஓடுகிறது. கோபம் உண்டாகி, யாதாமொன்றைத் தாக்குகிறது. அல்லது பயந்து ஓடிப்போகிறது.

**223.** மிருகங்களுக்கு ஆசாபாசத்தால் என்ன பிரயோசனம்?

அவை அங்குமிங்கும் ஓடித்திரிந்து தங்களுக்கு நன்மையானவற்றைத் தேடவும்; தின்மையானவற்றை விலக்கவும், ஆசாபாசம் ஏவித் தூண்டுகிறது.

**224.** ஏது காரணத்தால் இவ்விதம் சம்பவிக்கின்றது?

நன்மையானவற்றில் இன்பமும் தின்மையானவற்றில் துன்பமும் இருக்கும்படி கடவுள் செய்திருக்கிறார்; இன்பத்தையும், துன்பத்தையும் கண்டு, தங்கள் சுபாவததுக்கேற்றதைத் தெரிந்துகொள்ளுகின்றன.

**225.** மனிதனுக்கு ஆசாபாசத்தால் பிரயோசனம் உண்டா?

மிருகங்களுக்கு என்ன பிரயோசனமோ அதே பிரயோசனந்தான் மனிதனுக்கும்; அவன், தனது சுபாவத்துக்கும் தகுந்ததைச் செய்ய அவனது ஆசாபாசம் ஏவித் தூண்டுகிறது.

**226.** இதற்கும் சில உதாரணங்கள் கூறு.

பசி தாகத்தால் வருந்தி, உணவை அருந்த ஆசை கிளம்பி, சாப்பிடவும் பானம் பண்ணவும் முயற்சிக்கிறோம். இதனால், நமது திரேக சௌக்கியமும் திரேக பலனும் குன்றாதிருக்க வழியாகிறது.

சிநேகத்திலுள்ள ஆனந்தம் (இன்பம்) விவாகம் செய்யவும், குடும்பங்கள் பலுகவும் காரணமாகிறது.

காயம், ரணங்கள் அல்லது வியாதியால் உண்டாகும் நோயைப்பற்றி, அவற்றை விலக்கவும் அல்லது வியாதி, காயம் பட்டால் அதைச் சொஸ்தப்படுத்தவும், அந்த நோவானது நம்மை ஏவுகிறது.

சாவுக்கு அல்லது பொல்லாப்புக்குப் பயந்து, ஆபத்தை விலக்கப் பிரயத்தனப்படுகிறோம்.

துன்பத்துக்குப் பயந்து அதைத் தவிர்க்கிறோம், தீங்கைப்பற்றிய திகில், அதை நாம் எதிர்க்கச் செய்கிறது.

## 2. முதல் வித்தியாசம்

**227.** மிருகங்களுக்கும் மனிதனுக்குமுள்ள ஆசாபாசங்களில் என்ன வித்தியாசம்?

முதலாவது: மிருகங்கள் இந்திரியங்களாலும் சரீர உணர்ச்சிகளாலும் மாத்திரம் காரியங்களை அறியக்கூடும்; ஆகையால் அவற்றிற்குச் சொற்ப ஆசாபாசமட்டும் இருக்கக்கூடும். மனிதனோ புத்தியால் வேறநேக காரியங்களையும் கண்டுணரக் கூடுமாதலால், அவனுக்கு ஆசாபாசங்கள் அதிகமாய் உண்டு.

**228.** இதை விவரித்துச் சொல்.

மிருகங்கள், உணவைக்கண்டால் உணவையும், சரீர சுகபோகம் இருக்கக்கண்டால், அதையும் மாத்திரம் விரும்பக்கூடும். மனிதரோவெனில், இன்னும் பற்பல விஷயங்களைப் பற்றி நினைக்கக்கூடும். பொருட்களிலுள்ள அழகு, அவலட்சணம் இன்னதென்று உணரக்கூடும். எதிர்காலத்தில் தங்களுக்கு எது நன்மையாயிருக்கும் எது தின்மையாயிருக்குமென்று ஏற்கனவே நிதானித்துக்கொள்ள இயலும். தாங்கள் காணக்கூடாதவற்றையும் ரூபிகரத்தைக்கொண்டு சிந்தித்துக் கொள்ளலாம்; அவைமீது விருப்பமுற்று, அவற்றை அடையத் தேடலாம். பற்பல நூதன காரியங்களைக்கண்டுபிடித்து, நவீனமாய் இயற்றக்கூடும். மற்றவர்களோடு நானுவித சம்பந்தம்உண்டு. புது சம்பந்தங்களும் ஏற்படுத்திக்கொள்ளக்கூடும். தங்கள் ஜீவியம், அலுவல் சமூதியம் இவைகளில் தாங்கள் நடந்துகொள்ள வேண்டிய விதத்தைப்பற்றி முன்னதாகத் திட்டப்படுத்திக்கொள்ளும் வல்லபம் அவர்களுக்குண்டு. பற்பல யோசனைகள் செய்து தாங்கள் விரும்பும் காரியத்தை அடைவதற்கு உசிதமான வழிவகைகளைத் திட்டப்படுத்திக்கொண்டு, அதற்கு இடையூறுனவற்றை விலக்கக்கூடும். இவை முதலான காரியங்களினின்று மிருகம் எவ்வகையிலும் அடையக்கூடாத, பற்பல ஆசைகளும் முயற்சிகளும் உதிக்கின்றன; இவ்விதமான நினைவுகள், யோசனைகள், ஒவ்வொன்றும் மனதில் வெவ்வேறு ஆசாபாசத்தை உற்பத்தியாக்கும்.

ஆகையால், ஆகாரம், சரீர சுகபோகம் இவைமட்டில் மிருகங்களுக்குள்ள சாதாரண ஆசாபாசமும் தவிர, மனிதன்

ஆஸ்தி மகிமை, விநோதம், நூதனம், இவைபேரில் பிரியமும், வேறு பல காரியங்களைப்பற்றி உற்சாகம், ஆவல் காம்மகாரம், கர்வம், விரோதமும் கொள்ளக்கூடும்.

### 3. இரண்டாவது வித்தியாசம்

**229.** மனிதனுக்கும் மிருகத்துக்கும் வேறு ஏதாவது வித்தியாசம் உண்டா?

இன்னும் ஒன்றுண்டு. ஆசாபாசம் ஒன்றே மிருகங்களின் கிரிகைகளுக்கு ஏக காரணம். அவை சுபாவமாய் ஆசாபாசத்தின் பிரகாரம் நடக்கவேண்டும்; அப்படி நடக்கவேண்டும் என்பதே தெய்வசித்தம். மனிதனுக்கு அப்படியல்ல; மனிதன் ஆசாபாசத்தை, அறிவினால் அடக்கி ஆளவேண்டும்.

**230.** இதன் காரணம் என்ன?

ஏனெனில், மிருகங்களுடைய ஏக கதி சரீரப் பிரயோசனம்; மனிதனுடைய ஜீவியம் ஞான முகாந்தரங்களைக் கதியாகக் கொண்டிருக்கிறது.

**231.** இதனால் ஏற்படும் வித்தியாசம் யாது?

மிருகங்கள், இன்பம் அல்லது துன்பம் உண்டாவதற்குத் தகுந்தாற்போல், தங்கள் கிரிகைகளை (நடத்தையை) ஒழுங்குப்படுத்தவேண்டுமேயொழிய வேறல்ல; மனிதன் அப்படியல்ல, அறநெறி மார்க்கக் கடமைகளை அநுசரிக்கும் வண்ணம் தன் கிரிகைகளையெல்லாம் ஒழுங்குப்படுத்த வேண்டியவன்.

**232.** இந்த வித்தியாசத்துக்குக் காரணமென்ன?

மனிதனுக்குப் புத்தியும் (பகுத்தறிவும்) மனச் சுதந்தரமும்.—தக்கது எது, தகாதது எது என்று கண்டுபிடித்துத் தனக்கு இஷ்டமானதைத் தெரிந்துகொள்ளத்தக்க தத்துவமும் இருப்பதனால்தான் இந்த வித்தியாசம் ஏற்படக்காரணம்.

### 4. கடமையும் இன்பமும்

**233.** மேற்சொன்னதிலிருந்து நாம் அறியவேண்டியதென்ன?

சில வேளைகளில் கடமையும் இன்பமும் ஒரு வழிப்படுகிறதில்லை; நமது ஆசாபாசம் ஒரு வழியிலும், கடமை அதற்கு மாறான வழியிலும் நம்மை இட்டுக்கொண்டுபோகும்.

**234.** இதற்கான உதாரணங்கள் சில கூறு.

சில சமயங்களில், நமக்கு நன்மையாயில்லாத அன்ன பானத்தின்மேல் ஆவல் உண்டாகிறது; அடாத சிற்றின்பத்தின்

மேல் பிரியப்படுகிறோம் ; ஒருவனைச்சிநேகிப்பது நமது கடமையாயிருக்க, அவன்மீது அருவருப்பும் பகையும் கொள்கிறோம் ; அல்லது நேர்மையான வகையில் அடையக்கூடாத பணத்தின் மேல் ஆசை வருகிறது.

*235.* நமது ஆசாபாசம் சில சமயம் நல்லது சில சமயம் கெட்டதா ?

ஆம் ; அது கடவுளால் நமக்கருளப்பட்ட சுய நாட்டம் என்ற மேரையில் ஆசாபாசம் தன்னிலே நல்லதுதான்...ஏனெனில், நமக்கு நன்மையான காரியங்களில் இன்பமும், தின்மையான காரியங்களில் துன்பமும் இயல்பிலே கடவுள் நியமித்திருக்கிறார். ஆகையால் ஆசாபாசம் நாம் தகுந்த மேரையாய் நடக்க நம்மை ஏவுகிறது. இதற்குமாருய், கடவுள்மட்டிலும் பிறர் மட்டிலும் நமக்குள்ள சம்பந்தம் சிற்சில கடமைகளை நம்மேல் சுமத்துகிறது ; இதனால் மிருகங்கள் செய்தால் தகுந்தது. சரி என்று சொல்லத்தக்க அதே காரியம், நாம் செய்தால் தப்பிதம், அடாதது என்னப்படக்கூடும். ஆயினும் மனிதனுடைய ஆசாபாசங்களும் தத்தம் சட்டபிரகாரமே நடக்கின்றன. அதாவது, ஆசாபாசத்தை எழுப்பக்கூடிய யாதாமொரு பொருளைக் கண்டவுடன் அது எழும்புகிறது.

### 5. ஆசாபாசம் பரிசோதனை (பரீட்சை நிலை)

*236.* இன்பமும் கடமையும் ஒன்றுக்கொன்று முரண்டும்படி யாவதேன் ?

(இவ்வுலகப்பரீட்சையின் காலத்தில்) நாம் எத்தகையவர்களென்று பரிசோதிப்பதற்கு இதை ஓர் உபகர்ணமாக கடவுள் நியமனம் செய்திருக்கிறார்.

*237.* நம்மைப் பரிசோதிக்க, இது எவ்விதத்தில் உதவும்?

நாம் எத்தகைய மனிதரென்றும், என்னவிதமாய் நடந்துகொள்வது நமது விருப்பம் என்றும் நம்மைப் பரிசோதிக்க உதவுகிறது. இன்பமும் கடமையும் எதிர்ப்படும்போது எதைத் தெரிந்துகொள்வானே அதைக்கொண்டு ஒருவன் நல்லவன் அல்லது துஷ்டன் என்பதாகக் காட்டிக்கொள்ளுகிறான். மீளவும், தன் ஆசாபாசங்களுக்குச் சம்மதிக்கும் ஒவ்வொரு தடவையும், அதிகமதிகமாய்த் துஷ்டனுகிறான். எதிர்க்கும் ஒவ்வொரு தடவையும், அதிக நல்ல மனிதனுகிறான். இவ்விதமாகத் தற்காலம் அவன் எப்பேர்ப்பட்டவனென்றுமட்டுமல்ல, பிற்காலத்தில் எப்பேர்க்கொத்தவனுயிருப்பான் என்றும், நாம் அறிந்துகொள்ளலாம்.

**238.** ஜீவிய சட்டத்தை அநுசரிப்பதற்கு இது எவ்வண்ணம் உதவியாயிருக்கிறது ?

சிலருடைய நடத்தையைக் கவனிக்குங்கால், "இது செய்யத்தக்கது. இது செய்யத்தகாதது" என்று தீர்மானிப்பதற்கு இன்பமும் துன்பமுமே அறிகுறிகள் என்று எண்ணுவதாகத் தோன்றுகிறது. "பிரியம், பிரியமில்லை" என்பதே அவர்கள் நடத்தைக்கு ஏக பிரமாணம். ஆனால் இது முற்றும் தவறுதலானது. "இது தகுந்தது, நல்லது ; ஆகையால், எனக்குப் பிரியமிருந்தாலும் சரி, பிரியமில்லாதபோனாலும் சரி, அதை நான் செய்வேன் ; அல்லது இது தப்பிதம், கெட்டது, ஆகையால் என் பிரியத்தைக்கவனிக்கமாட்டேன், அதைச் செய்யவேமாட்டேன், " என்று நாம் நடக்கவேண்டிய மார்க்கத்தை நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

**239.** இதை நாம் என்றும் மறவாமல், ஞாபகத்தில் தரித்துக் கொள்விதற்கு உதவியாயிருக்கத்தக்க முதுமொழிகள் எவை ?

(1) இயல்பலாதன செயேல்.

(2) நன்மை கடைப்பிடி.

(3) நூன்முறை தெரிந்து சீலத்தொழுகு.

---

# 5-ம் அதிகாரம்

## ஆசாபாசங்களைப்பற்றிய முடிவுரை

### 1. ஆசாபாசங்கள் தங்கள் அலுவலைச் செய்யும் விதம்

**240.** (நமக்கு) மனதின் உடந்தையின்றி ஆசாபாசங்கள் தாமே கிரிகையிற் செல்ல முடியுமா ?

இதுதான் அவற்றின் சுபாவம். மிருகங்களில் நேரிடுவதுபோல், ஆசாபாசங்கள் சரீரத்தைத்தூண்டி எழுப்பி, கிரிகையிற் புகும்படி செய்கின்றன.

**241.** இது எப்படியாகும் ?

விசித்திரமான விதமாய்த்தான் இது சம்பவிக்கிறது. உணர்ச்சிகள் நரம்புகளை ஆட்டுகின்றன ; நரம்புகள் சதையை

ஆட்டுகின்றன ; சதை அவயவங்கள் ஆடும்படி செய்கிறது. உடனே கிரிகை ஏற்படும்படியான சேஷ்டைகளுக்குக் காரணமாகின்றது. இவை யாவும், மனதின் உடந்தை யாதொன்றுமில்லாமலே நடைபெறுகின்றன.

**242.** இதற்குச் சில உதாரணங்கள் கூறு.

சிசுவானது, பிறந்தவுடனே அழவும், பால் குடிக்கவும் ஆரம்பிக்கிறது. தேகத்தில் அரிப்பு உண்டானவுடன், அது தோன்றின இடத்தில் சொரியும்படியாக கைவிரல்கள் செல்கின்றன. தலைக்குமேல் கல் வருகிறதென்று கண்டால் அல்லது அடிக்கும்படி தடியை ஒருவன் உன் தலைக்கு நேராக ஓங்கினால், தக்ஷணமே அந்த அடியைத் தடுக்க உன் கை மேலே போகிறது (கையை உயர்த்துகிறாய்). எவனுக்கும் கோபமூர்க்கம் வந்தால் உடனே அடிக்கும்படி கையை மடக்குகிறான். யாதாமொரு இன்பம் அதி உக்கிரமமாய் சரீரத்தை ஆட்டிவைத்தால், சரீரம் அதை அநுபவிக்க ஆரம்பிக்கும்.

## 2. அவற்றை அடக்கும் விதம்

**243.** இந்த சேஷ்டைகளை மனது எவ்வாறு அடக்கக்கூடும் ?

பாவத்துக்குரிய யாதாமொரு ஆசாபாசம் கிளம்பினதை மனிதன் அறிந்தவுடன், அது சரியல்ல, அதைத் தடுக்கவேண்டும் என்று மனச்சாட்சி அவனுக்குப் பகருகிறது. அதன்பின், அதைத் தடுக்கவோ, தடுக்காமலிருக்கவோ, மனதைப் பொறுத்ததேயொழிய, (துணை இல்லை)

**244.** ஒன்றும் செய்யாமல் மனது அசட்டையாயிருந்தால் என்ன நேரிடும் ?

அவ்விதம் இருந்தால் அசாபாசம் கிரிகையாக முடிவு பெறும். அதை அப்படியே விட்டுவிட்டதற்கும், அதனால் விளைந்த பாவங்களுக்கும் மனதுதான் உத்தரவாதியாகும்.

**245.** மனதைக் குற்றம் சாட்டுவானேன் ?

ஏனென்றால், அதை நிறுத்த மனதால் கூடும். அதை நிறுத்தவும் அதற்குக் கடமையிருக்க, நிறுத்தாமல் விட்டுவிடுகிறது அதன்மேல் குற்றமல்லவா ?

**246.** ஆசாபாசத்தால் ஏவப்பட்ட கிரிகையைத் தொடர்ந்து செய்ய மனது சம்மதித்து இஷ்டப்பட்டால், என்ன ?

மனது கிரிகையை அடக்காமல் விட்டுவிடுவதுமன்றி அதன் துஷ்ட ஆசையும் ஒன்று கூடுவதால், இது முந்தினதிலும் பெரிய குற்றம்.

247. கிரிகையைத் தடுக்க மனது தீர்மானித்தால், கிரிகை நின்றுபோகுமா ?

மனது தெளிவாய், திட்டமாய் " இல்லை " (மாட்டேன்) என்று சொல்லி, கிரிகையைத் தடுக்க முயன்றால், கிரிகை நின்று போவதுமன்றி, ஆசாபாசமும் மெள்ளமெள்ள அமர்ந்துபோகும்.

248. தடுத்தபிறகும், ஆசாபாசம் அடங்காவிடில், மனது அதற்கு உத்தரவாதியா ?

கிரிகையைத் தொடர்பாய் தடுத்துக்கொண்டு, ஆசா பாசத்தில் ஆனந்தம் கொள்ளாமலிருக்குமளவும், மனது அதற்கு உத்தரவாதியல்ல ; என்றாலும் ஆசாபாசத்தில் இன்பத்தைத் தேடினால் கிரிகை நின்றுபோயினும், நினைவினால் பாவம் கட்டிக் கொண்டதாகும்.

249. நினைவின் பாவம் என்பது என்ன ?

பாவமான யாதொரு கிரிகையைப்பற்றி நினைத்து சந்தோஷப்பட்டு, அதைச் செய்யாமற்போனாலும், செய்யப் பிரியப் படுகிறது நினைவின் பாவம்.

250. ஆசாபாசத்தின் நினைவால் சந்தோஷமடைவது ஆபத்தா, பாவமா ?

அது ஆபத்தும் பாவமுமாகும் ; இப்படி சந்தோஷப் படுவதினால், மனது கடைசியாக சம்மதிப்பதற்குக் காரணமாகி, கிரிகை ஏற்பட விட்டுவிடக்கூடும்.

251. மனது யாதொன்றும் செய்துகொள்ள நேரம் தராமலும், நமக்குத் தெரியாமலும் கிரிகை ஆரம்பிக்கக்கூடிய விதமாய், அவ்வளவு சடுதியில் ஆசாபாசம் கிளம்பக்கூடுமா ?

இது சிலசமயம் நேரிடக்கூடும்.

252. துர்க்கிரிகை ஆரம்பித்துவிட்டால், நாம் அதைக் கடைசி மட்டும் முடிக்கலாமா ?

முடிக்கக்கூடாது ; அதை அறிந்தவுடன் அதை நிறுத்த வேண்டும்.

**253.** மனதானது, ஆசாபாசத்தை எதிர்த்தடக்கக் கிஞ்சித்தும் சக்தியற்றுப்போகத்தக்கவிதமாய், அவ்வளவு அதிவேகமாக யாதொரு ஆசாபாசம் உண்டாகக்கூடுமா?

பேதையர்களுக்கும், முரட்டுச்சுபாவமுள்ளவர்களுக்கும்; அரைத்தூக்கம், குடிவெறி, மயக்கம், மனக்கலக்கமான சமயங்களிலும் இது நேரிடக்கூடும்.

**254.** இத்தகைய நிலைமைகளில், ஒருவன் செய்யும் கிரிகைகளுக்கு எம்மட்டு அவனை உத்தரவாதியென்கலாம்?

அத்தகைய நிலைமைகளில் காரியத்தை எவ்வளவு அறிந்து எவ்வளவுக்கு எதிர்க்கக் திராணியுண்டோ, அவ்வளவுக்கு மட்டும் அவன் உத்தரவாதியாவான்.

### 3. ஆசாபாசம் பாவத்துக்கு வழியாவது

**255.** ஆசாபாசம் நம்மைப் பாவத்துக்கு ஆளாக்குவது எவ்விதம்?

நாம் விரும்புகிற பொருளை அடைவதற்கு அல்லது அதை அனுபவிப்பதற்கு வழியாகப் பாவம் செய்யும்படி, இன்பமான காரியங்கள்மட்டில் நமக்குள்ள ஆசை நம்மை ஏவுகிறது; பிறர்மட்டில் நமக்குள்ள வெறுப்பினால் அவர்கள்மட்டில் தவறுதலாய் நடந்துகொள்ளவும் அல்லது நமது கடமையை நிறைவேற்றுவதில் உண்டாகும் கஷ்டத்துக்குப் பயந்து பின்வாங்கி, அதைச் செய்யாமல் விட்டுவிடவும் காரணமாகிறது.

**256.** சில உதாரணங்கள் கூறு.

(1) ஒருவன்மட்டில் நமக்குள்ள மிதமிஞ்சின பற்றுதலினால் அவனையே சதா சிந்தித்து நமது கடமைகளை அலட்சியம் செய்யக்கூடும். அந்த ஆள் துஷ்டனாகில், அவனுடைய துஷ்டதனத்தில் நாமும் பங்கடையக் காரணமாகும். விலக்கப்பட்ட சிற்றின்பத்துக்கும் இது சோதனையாயிருக்கக்கூடும்.

(2) பணத்தின்மேல் அல்லது நல்ல பண்டங்கள், பொருட்கள்மேல் உள்ள மிதமிஞ்சின ஆசையானது, திருட்டு, வஞ்சகம், சூது முதலான பாவங்களுக்குக் காரணமாகும்.

(3) மகிமை, கீர்த்தி அதிகாரம் இவற்றின்மேலுள்ள மிதமிஞ்சின பேராவல், அநியாய வழிவகைகளால் அவற்றை அடையவும் அல்லது நாம் அகங்காரம், கெர்வம்கொள்ளவும் கொடிய குரூரராகவும் காரணமாகும்.

(4) வேடிக்கை விளையாட்டின்மட்டில் உள்ள மிதமிஞ்சின ஆசை, நமது கவனம் குன்றி, பணம் நஷ்டமாகி, நமது கடமையை அலட்சியம் செய்யும்படி வழியாகும்.

(5) சரீர சுகபோகத்தின்மட்டில் உள்ள மிதமிஞ்சின பிரியம், நமது கவனம், பிரயாசை யாவையும் கிரகித்து ஞான விஷயங்களில் நமக்கிருக்கவேண்டிய ஆசையை முற்றும் அழித்துக் கடவுளையே மறந்து, அவரைப்பற்றிய சிந்தனையை அருவருத்து: வேதத்தையும் அறநெறிமார்க்கத்தையும் அசட்டை பண்ணிக் கடைசியாய் மேன்மையும் கண்ணியமும், நன்மையுமான சகல காரியங்களின்மட்டிலும் பிரியமற்றுப்போகச் செய்யக்கூடும்.

**257.** அருவருப்பும் பயமும் பாவத்துக்கு வழியாவது எப்படி?

ஒருவன்மீதுள்ள அருவருப்பு, நாம் அவனைப்பற்றி இழிவாய் நினைத்து அவனை விரோதிக்கச் செய்யும்; அவனுடைய நினைவே, கோபத்தை எழுப்பவும், அவனைப்பற்றிக் காய்மகாரம் பொருமை கொள்ளவும் காரணமாகும்; அவனுக்கு விரோதமாய்ப் பேசவும் அவனுக்கு இடையூருயிருந்து, எவ்விதத்திலும் அவனைத் தொலைத்துப்போடப் பிரயத்தனப்படுவோம். பொருட்களின் மீதுள்ள அருவருப்பினுல் கோபங்கொண்டு, அவற்றைச் சேதப்படுத்த அல்லது முற்றும் அழித்துப்போடக்கூடும். துன்பம், கவலை, பிரயாசை இவற்றின்மீதுள்ள அருவருப்பு, கக்கிஷமான கடமையைச் செய்யாமல் தள்ளிப்போடச் சொல்லும்; வருத்தம் சஞ்சலத்துக்குப் பயந்து, பிறருக்கஞ்சி அல்லது அவர்களுடைய அபிப்பிராயத்துக்குப் பயப்பட்டு, இவ்விதம் கடமையை நிராகரிக்கவும் கூடும்.

## 4. ஆசாபாசத்துக்கு அடிமை

**258.** ஆசாபாசத்துக்கு இணங்குவதால் சாதாரணமாய் ஏற்படுவதென்ன?

ஆசாபாசத்துக்கு இணங்குவதினுல், நாம் சாதாரணமாய் அதற்கு அடிமையாய்ப்போகிருேம்.

**259.** இது எப்படியாகும்?

நாம் யாதாமொரு ஆசாபாசத்துக்கு எவ்வளவு இணங்குகிருேமோ, அவ்வளவு உக்கிரமமாய் அது மென்மேலும் எழும்பி; வெகு சீக்கிரம் கிரிகை ஏற்படும். பழக்கத்தினுல் வழக்கம் உண்டாகிறது. மனது எதிர்க்காமல் விட்டுவிடுகிறது; ஆசாபாசம் நம்மை ஆட்கொண்டு, நமது எஜமானனுகிவிடுகிறது.

**260.** பயங்கரமான இந்த நிலைமையை அடைந்த மனிதன் செய்யத்தக்கதென்ன ?

மனதைத் தட்டி எழுப்பி, ஒவ்வொரு தடவையும் ஆசா பாசத்தை அடக்கி, அந்த நிலைமையினின்று வெளியேறப் பிரயத்தனப்படவேண்டும்.

**261.** இதைச் செய்துகொள்வது எப்படி ?

(1) தெய்வபக்தி, நல்லொழுக்கம் இவற்றை நினைவு கூர்ந்து, அவற்றால் நல்லுணர்வுகளைத் தன்னிடம் எழுப்பித் தான் இருக்கும் நிலைமை மிகவும் தவறுதலானதென்று தானே உணரப் பிரயாசைப்படவேண்டும்.

(2) பாவத்தின்மேலும் விசேஷமாய் இந்தப் பாவத்தின்மேலும் அருவருப்பு உண்டாகக்கூடிய சிந்தனைகளை ஆதரித்து, இந்தப் பாவத்தைவிட்டு முற்றும் விலக உறுதியான தீர்மானம் செய்யவேண்டும்.

(3) தனது நினைவுகளையும் ரூபிகரத்தையும் கட்டுப்படுத்தி அடக்கி, அவற்றைத் தள்ளவேண்டும். இன்னும் சரியாய்ச் சொல்லவேண்டுமாயின், அந்த அடிமைத்தனத்தினின்று தன்னை மீட்டுக்கொள்ளும்வண்ணம் தூக்கத்தை தவிர்த்து, எழுந்து நின்று, மனதையும் சரீரத்தையும் வேறு விஷயங்களில் செலுத்தி வேறு யாதாமொரு தொழிலில் சுறுசுறுப்பாயிருக்க முயலவேண்டும்.

(4) தான் அந்தப் பாவத்தில் விழக்காரணமான ஆள், பொருள், சந்தர்ப்பம், நிலைமை யாவையும் தன்னுலியன்றமட்டும் அறவே நீக்கவேண்டும்.

(5) கடைசியாய், கடவுளையும் அவரது நன்மைத்தனத்தையும், மறுவுலக பாக்கியம் தண்டனைகளையும் நினைவுகூர்ந்து, தின்மையை நாடிச்செல்லும் அவனுடைய புத்தி மனதைக் கடவுள் திடப்படுத்தி நல்வழியில் நிலைநிறுத்த, அவரைப் பார்த்துப் பிரார்த்திக்கவேண்டும். இவ்விதம் செய்தால், கடவுளுக்கு அவனுடைய தைரியத்தைப்பற்றியும் நல்ல மனதைப்பற்றியும் அவன் மட்டில் பிரீதியுண்டாகி, அவனுடைய அடிமைத்தனத்தினின்று அவன் படிப்படியாய் மீட்கப்படும்படி அவனுக்கு உதவிபுரிவார்.

**262.** இது விஷயமாய் நமக்குப் பிரயோசனப்படக்கூடிய மேற்கோள் யாது ?

" உன்னாலே யாவும் ஆகவேண்டுவதுபோல் நடந்து கொள். ஆனால், கடவுளால் மாத்திரம் எல்லாம் ஆகக்கூடியதாக அவரைப் பார்த்து மன்றாடு" (அர்ச். இஞ்ஞாசியார்).

**263.** ஆசாபாசத்தின் அடிமையாயிருப்பவன், எவ்வளவுதான் பிரயாசைப்பட்டும், இன்னும் அதே பாவத்தில் தவறி விழுந்து கொண்டிருந்தால், என்ன செய்வது?

அவ்விதமாயினும் அவன் அதைரியப்படத்தகாது. அவன் அடிக்கடி தவறுவதினால், அவன் அதோடு எதிர்த்து நிற்பது எவ்வளவு அவசியம் என்று வெளியாகும்; ஆகையால், மென்மேலும் அதிகமதிகமாய் பிரயாசப்படவேணுமேயல்லாது, சலிப்புற்று போராடுவதை ஒருக்காலும் விட்டுவிடத்தகாது.

" எறும்பூரக் கற்குழியும்."

" அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரும்."

" முயற்சி திருவினையாக்கும் "—என்பவைபோன்ற முதுமொழிகளை சிந்திக்கத்தகும். இவை அவனுக்குத் தைரியத்தை ஊட்டும்.

**264.** இன்னும் அவனைத் தைரியப்படுத்திப் போராடுவதில் சலிப்புக்கொள்ளாமல் நின்று எதிர்க்கும்படி அவனை உற்சாகப் படுத்தத்தக்க சிந்தனைகள் எவை?

கடந்துபோனதையும், இனி நிகழப்போகிறதையும் நினையாமல், இப்போது அவனை அலைக்கழிக்கும் ஒரே சோதனையின்மேல் தன் கவனம் முழுவதும் செலுத்தக்கடவான். " ஒரு தடவையாகிலும் நான் ஜெயங்கொள்வேன்" என்று சொல்லிக் கொள்ளட்டும். ஒரு தடவை ஜெயித்தால், " ஒரு முறை நான் செய்ததை இன்னும் செய்யக்கூடும்" என்று தனக்குத்தானே தைரியம் சொல்லிக்கொள்ளவேண்டும். தான் அடைந்த ஜெயங்களைக் கணக்கிட்டுப் பார்ப்பானேயாகில், ஒவ்வோர் ஜெயமும் மீண்டும் அதிகமாய் ஜெயங்கொள்ள அவனுக்கு உதவும். தவறுதல்களில் தொகையைச் சிறுகச்சிறுகக் குறைத்துக்கொண்டு வந்தால், இறுதியில் பாவத்தை அறவே நீக்கிப்போடக்கூடும்.

**265.** பாவத்தை அறவே நீக்கக்கூடாவிடில், என்ன செய்வது?

அதைப்பற்றிக் கவையில்லை. பாவம் குறைவுபடுகிற ஒவ்வொரு தடவையும், ஒரு நிச்சயமான வெற்றியாகிறது; ஒவ்

வொரு தடவையும் தைரியம் அதிகரித்து, இன்னும் வெற்றி யடைந்துகொண்டு போகலாம் என்கிற நம்பிக்கைக்கு இடமாகிறது.

66. இந்தப் பயங்கரமான நிலைமைக்கு வந்து சேராதபடி தடுப்பது எவ்விதம்?

முதலாவது :—கடவுளைப்பற்றியும், அவரது சிநேகத் தைப்பற்றியும் அவருக்குக் கீழ்ப்படிந்து ஊழியஞ்செய்ய நமக் குள்ள கடமையைப்பற்றியும் நினைத்துக்கொள்வது.

(2) பாவம் எவ்வளவு பொல்லாப்பானது. அதினால் கடவுளுக்குத் துரோகிகளாகி, அவரது தண்டனைகள் நம்மேல் வரவும், நமது கடைசிக் கதியாகிய நித்திய பாக்கியத்தை இழந்து போகவும் அது காரணமாகிறது என்று உணர்ந்துகொள்வது.

(3) தக்கது எது, தகாதது இன்னது என்று தெளி வாய் அறியப்பழகி, மனச்சாட்சியின் குரலொலியை உற்றுக் கேட்டு, ஒவ்வோர் தடவையும் அதற்குக் கீழ்ப்படிய அப்பிய சிப்பது.

(4) ஆசாபாசங்களின் ஆரம்பத்தில் வெகு ஜாக்கிரதை யாயிருந்து, அவை கிளம்பினவுடனே அடக்கப் பழகுவது.

(5) ஆசாபாசங்களை எழுப்பத்தக்க சகலவித பொருட் களையும் விலக்கி, அவைமீது நம் சிந்தனை செல்லாமலும் இந்திரி யங்கள் அவற்றை உணராமலும் தடுப்பது.

(6) துர் நினைவுகள் கிஞ்சித்தும் மனதில் பிரவேசியா வண்ணம், நன்மையும் பிரயோசனமுமான அலுவல்களை எப்போ தும் செய்துவந்து, சோம்பலைப் தவிர்ப்பது.

(7) இன்பம் துன்பம் இவற்றை ஒரு பொருட்டாய் எண்ணாமலிருப்பது. இவ்விதம் இருந்தால், நமக்குப் பிரியமானா லும் பிரியமில்லாவிட்டாலும், நமது கடமையை அலட்சியம் செய்யமாட்டோம்; இன்பத்துக்கு ஆசைப்பட்டு அல்லது துன்பத்துக்குப் பயந்து, பாவத்துக்குக் காரணமாகமாட்டோம்.

———

# மூன்றாம் பாகம்

## 1-ம் அதிகாரம்

## குணபான்மை அதன் பொருள், அதன் மதிப்பு

### 1. குணபான்மையின் அவசியம்

**267.** ஜீவிய சட்டத்தை அநுசரிப்பதற்கு, ஒவ்வொரு கிரிகையும் சம்பவிக்கும் சமயத்தில், தகுந்ததையே ஒவ்வோர் தடவையும் தெரிந்துகொள்வது போதுமா?

ஒவ்வோர் தடவையும் அவ்விதம் செய்து வருவோமானால் போதும்; ஆனால், இவ்விதம் நடந்து கொள்வதில், நாம் தவறக்கூடும். ஆகையால் வேறு காரியமும் அவசியமாகிறது.

**268.** இதுபோக, இன்னும் என்ன தேவை?

தீர்க்கமாய் நிதானித்துத் தெரிந்துகொண்டு தக்க விதமாய் ஒழுகும் வழக்கத்தோடு கூடிய வலிமை அவசியம்.

**269.** அத்தகைய வழக்கமுள்ள மனிதனை என்னென்றழைப்பது?

அத்தகைய மனிதன் மனவலிமை, திடகாத்திரம், குணபான்மையுள்ளவன் என்போம்.

**270.** குணபான்மையுள்ளவன் யார்?

தான் செய்யும் ஒவ்வொன்றும் யாதாமொரு பிரமாணம் அல்லது மேற்கோளின் ஆதாரத்தைக்கொண்டு செய்து வருகிறவன் குணபான்மையுள்ளவன் எனப்படுவான்.

**271.** பிரமாணங்கள், மேற்கோள்கள் என்பவை எவை?

நமது நடத்தை எப்போதும் சீராயிருக்கும்படி, சில பொதுக்குறிப்புகளை மனதில் ஸ்திரமாய் வேரூன்றச்செய்து, அவற்றின் பிரகாரம் நடந்துவருவது அவசியம். இவ்விதம் வேரூன்றியிருக்கும் குறிப்புகள் பிரமாணம் மேற்கோள் எனப்படுகின்றன.

**272.** இதை விவரித்துக் கூறு.

மேற்கோள்கள் மனதில் ஸ்திரமாய் வேரூன்றியிருக்க வேண்டும். இவ்விதமாயின் அவற்றை நன்றாய்க் கண்டுபிடிக்கவும்

நமக்குத் தேவையானபோதெல்லாம் அவற்றைச் சுலபமாய் ஞாபகப்படுத்திக்கொள்ளவும் கூடும். இது தவிர அவற்றின் பேரில் கவனமாயிருந்து, அவற்றின் பிரகாரம் ஒவ்வோர் தடவையும் தட்டுத்தடையின்றி நடந்து, மனது பழகவேண்டும்.

**273.** இதனால் வரும் பயனென்ன?

இதன் பயனாய், குணபான்மையுள்ளவன் தனது கிரிகைகள் ஒவ்வொன்றிலும் உறுதியாகவும் சீராகவும் இருப்பான்; அவனுடைய ஜீவியம் ஒழுங்காகவும் கிரமமாகவும் இருக்கும்.

**274.** குணபான்மை என்பதே இல்லாதிருந்தால் என்ன?

குணபான்மை இல்லாத மனிதனுக்கு மேற்கோளும் கிடையாது, பிரமாணமுமில்லை, பழக்கமுமிராது. சமயத்துக்குச் சமயம் மாறி மாறி, நிலைபரமின்றி, ஒருவேளை ஒருவிதமாகவும், மறுவேளை வேறுவிதமாகவும் நடப்பான்; அவனுடைய ஜீவியம் ஒழுங்கீனமாகவும், நிலைதவறினதாகவும் இருக்கும்.

## 2. குணபான்மை பலவிதப்படும்

**275.** இவ்வித குணபான்மை இருக்கக்கூடுமா?

ஆம்; குணபான்மை, வலிமையானது, அல்லது திடனற்றதாயிருக்கலாம்; நற்குணபான்மை அல்லது துர்க்குணபான்மையாகலாம்.

**276.** வலிமையான குணபான்மை எத்தகையது?

மேற்கோள்களைத் திர்க்க உணர்ந்து, அவற்றை அச்சம் கலக்கமின்றி உறுதியுடன் பிரயோகம்பண்ணும் குணபான்மை வலிமையானது.

**277.** திடனற்ற குணபான்மை யாது?

மேற்கோள்களை அரையும்குறையுமாக உணர்ந்து அவற்றைச் சந்தேகமாய் அச்சத்துடனும் மனக்கிலேசத்துடனும் பிரயோகம் செய்யும் குணபான்மை திடனற்றது.

**278.** திடனற்ற குணபான்மையால் நேரிடும் தீங்கென்ன?

திடனற்ற குணபான்மையுள்ளவன், எளிதில் தன் ஆசாபாசங்களுக்கு இடம் கொடுப்பான்; சுலபமாய் அவனைத் துர்ச்சனர் தங்கள் வலையில் சிக்கவைக்கலாம். அவனுக்குச் சுலபமாய் கெட்ட பழக்கங்கள் உண்டாகித் துர்க்குணபான்மையுள்ளவனாவான்.

279. நற்குணபான்மை யாது?

நற்குணபான்மையுள்ளவனிடத்தில் மேற்கோள்கள் யாவும் நன்மைதனம் பொருந்தினவைகளாக இருப்பதுமன்றி, அவன் அவற்றின் பிரகாரம் கிரமமாய் நடந்துவருவான்.

280. துர்க்குணப்பான்மையுள்ளவன் யார்?

துஷ்டத்தனமான அல்லது தப்பறைபான மேற்கோள்களையுடையவன், துர்க்குணப்பான்மையுள்ளவன்.

281. எவன் அதிகக் கெட்டவன்.— துர்க்குணபான்மையுள்ளவனு அல்லது குணபான்மையே இல்லாதவனு?

துர்க்குணபான்மையுள்ளவன் அதிகக் கெட்டவன்; ஏனெனில் அவன் வேணுமென்று அக்கிரமமாய்த் துஷ்டத்தனம் செய்கிறுன்.—குணபான்மையற்றவனே, சமயத்துக்கேற்ற சரணம் பண்ணுகிற பரமகோழை (சமய சஞ்சீவி); நல்லுணர்ச்சி தோன்றினல், நல்லவழியில் நடப்பான்; துர் உணர்ச்சி தோன்றினல், துர்வழியில் நடப்பான். ஆகையால் அவனுடைய குற்றம் கோழைத்தனம் என்கலாமேயன்றி, அக்கிரமம் எனப்படாது.

282. துர்க்குணபான்மையுள்ளோன், முற்றும் துஷ்டன் என்பது சரியா?

இல்லை; அவனிடத்தில் அநேக நற்குணங்கள் இருக்கலாம்; ஆனுல் ஒன்றிரண்டு கெட்டகொள்கையினல் அவனுடைய குணபான்மை கெட்டுப்போயிற்று. இதற்குக் காரணம் அவனை ஆட்கொள்ளும் பிரதம ஆசாபாசம்.

283. பிரதம ஆசாபாசம் யாது?

பற்பலவிதமான குற்றங்களுக்கு அடிப்படையான யாதாமொரு துர்நாட்டம் ஆழமாய் வேரூன்றியிருந்தால், அதைப் பிரதம ஆசாபாசம் என்கிறோம்.

284. இதற்குச் சில உதாரணங்கள் கூறு.

பிரதம ஆசாபாசம் ஆங்காரம் (பெருமை, பிறரை மதியாக் குணம்) என்றுல், இது பேராசை, கர்வம், காய்மகாரம், பொருமை, பகை, வர்மம், கோபம் முதலான குற்றங்களுக்கு வழியாகும்.

சிற்றின்பப் பிரியம் பிரதம ஆசாபாசமானுல், அஃதுள்ளவன் போசனப்பிரியம், குடிவெறி, காமாதுரம், சோம்பல், அசமந்தம், கவனமின்மை, இன்ப நாட்டம், போகப்பிரியம், கடமையை அலட்சித்தல் முதலான துர்க்குணங்களுக்கு ஆளாவான்.

**285.** ஒவ்வொருவனுக்கும் ஒரு பிரதம ஆசாபாசம் உண்டா?

சகலரிடத்திலும் இது உண்டென்று திட்டமாய்க் கூறக் காரணமில்லை. ஆனால், ஏறக்குறைய எல்லாரிடமும் ஒரு பிரதம ஆசாபாசம் உண்டென்கலாம். இது இருப்பதாக கண்டவுடன், அதன்மீது வெகு ஜாக்கிரதையாயிருந்து, அதை வேர்ப்பிடுங்காய்ப் பிடுங்கி எறிய முயலவேண்டும். இவ்விதம் செய்தால், மற்றனேக குற்றங்குறைகள் அத்தோடு நீங்கிப்போகும்.

## 3. குணபான்மையின் சிரேஷ்டம்

**286.** குணபான்மையுள்ளவனாயிருப்பது, அதிமுக்கியமான விஷயமா?

ஆம்; மேலும், நற்குணபான்மையுள்ளவனாயிருப்பது வெகு முக்கியமான காரியம். ஏனெனில், இக்குணபான்மையுள்ளோன் தன் ஜீவியத்தை முற்றும் புத்தி, நியாயம் கடமைகளுக்கேற்றவண்ணம் ஒழுங்குபடுத்தக்கூடும். சடுதி உணர்ச்சிகளாலும் புறக் காரணங்களாலும் அலைக்கழிக்கப்படான்; தன் பரம கதியாகிய நித்திய பாக்கியத்தை நாடிச்செவ்வே நடக்கக்கூடும். குணபான்மையில்லாத மனிதனின் ஜீவியமும், அவனது கதியும் காற்றினால் அலைக்கழிக்கப்படும் துரும்புக்குச் சமானமாய் நிச்சயமற்றதும் நிலையற்றதுமாக இருக்கும்.

**287.** குணபான்மையினால், இன்னும் வேறு ஏதாவது பிரயோசனம் உண்டா?

மனிதன் பொதுப்படத் தன் காரியங்களைக் கொண்டு செலுத்துவதில், குணபான்மை பெருத்த உதவியாயிருக்கும். மேற்கோள்களை நன்குணர்வதால், தன் குற்றங்குறைகளைக் கண்டுணர்வான்; அவற்றை வேரோடு பிடுங்கி எறியப் பிரயத்தனப்படுவான். பலவீனத்தாலும், கோழைத்தனத்தாலும் உண்டாகும் பற்பல குற்றங்கள் இவனை அண்டமாட்டா. குணபான்மையுள்ளோன் குறித்த நேரத்தில் யாவும் செய்வான், கொடுத்த வாக்கை மீறான், தன் வேலையைச் சரிவர சுமுத்திரையாய்ச் செய்து முடிப்பான், திட்டமான தீர்மானங்கள் செய்து அவற்றின் பிரகாரம் தவறாது நடப்பான். பிறர் கண்பார்வையில் ஒரு மாதிரியும் அவர்கள் கண்மறைவில் வேறுவிதமாகவும் நடந்துகொள்ளான். சுருங்கச் சொல்லின், எவ்விஷயத்திலும் சகலருக்கும் திருப்திகரமாய் நடந்துகொள்வான்.

திடனற்ற குணபான்மையுள்ளோன், அல்லது குண பான்மையில்லாதான், இதற்கு முற்றுமாருய் நடப்பான். நேரத் துக்குத் தகுந்த தாளம் போட்டுக்கொண்டு, தன் விஷயத்திலென் கிலும், பிறர் விஷயத்திலென்கிலும், ஒழுங்கின்றி, நிலைவரமின்றி சதா (நாணலைப்போல்) துவண்டுகொண்டிருப்பான். ஒருவரும் அவனை நம்பி ஒரு காரியம் செய்யமுடியாது. இத்தகைய மனித ஞேடு புழங்குவது, யாவருக்கும் அதிர்ப்திகரமானது. அவன் தனக்கும், பிறருக்கும் பிரயோசனமற்ற பூண்டு என்பதே சரி.

**288.** குணபான்மைக்கும் ஜீவிய சட்டத்தை அனுசரிப்பதற் கும் யாதாவது சம்பந்தம் உண்டா?

மிகவும் நெருங்கின சம்பந்தம் உண்டு. ஏனெனில் ஜீவிய சட்டம் நற்குணபான்மைக்கு அஸ்திவாரம் என்கலாம். நற்குணபான்மைக்கு மேற்கோள்கள் அவசியம் என்று ஏற்கனவே அறிந்திருக்கிரேும். ஆனுல் சகலவித நற்பிரமாணங்கள் மேற் கோள்கள் எல்லாம், ஜீவிய சட்டத்தின் வியாக்கியானமேயன்றி வேறல்ல. தக்கது எது, தகாதது எது, எனும் இந்தப் பிரதான மேற்கோளை நன்குணர்வதால், குணபான்மையுள்ளோன் அதின் பிரகாரம் நடக்க எப்போதும் ஆயத்தமாயிருப்பான். துர்க்குண பான்மையுள்ளவன் அல்லது குணபான்மையில்லான், சதா அதை மறந்தவனுய், ஏதோ அற்பசொற்பமாய் நினைத்துக்கொண்டா லல்லாது, அதைக் கவனிக்கவேமாட்டான்.

**289.** சோதனையை ஜெயிக்கவும், பாவத்தை விலக்கவும் குண பான்மை உதவுமா?

உதவும்; உள்ளிருந்து உதிக்கும் துர் உணர்ச்சிகளையும் மற்றும் தின்மைக்கான புறக்காரணங்களையும் எதிர்த்து ஜெயிப் பதற்கு அவசியமான மனேவலிமையைக் குணபான்மை மனித னுக்கு அளிக்கிறது.

**290.** இதை சற்றே விவரித்துச் சொல்.

நல்ல மேற்கோள்களையுடைய புத்தியும், அவற்றை அநுசரிக்க எப்போதும் சித்தமாயிருக்கும் மனதும் ஒருவனுக் குண்டானுல், அத்தகைய மனிதன் ஆசாபாசம் ஆரம்பிக்கும் பொழுதே அதைக் கண்டுகொள்வான்; அது எழும்பினவுடனே அதை அடக்கிப்போடுவான். இவ்வாறே, துர்மாதிரிகையும், மற்றப் புறக்காரணங்களும் தன்னைத் தீண்டாதபடி ஜாக்கிரதை யாயிருப்பான்; அவற்ருேடு வீரியமாய் எதிர்த்து நிற்க, அவனுக் குப் போதுமான அளவு தைரியமும் திடகாத்திரமும் இருக்கும்.

## 4. குணபான்மையை அடைதல்

**291.** குணபான்மையை அடைவதற்குச் செய்யத்தக்கதென்ன?

முதன்முதல் அதை அடைய மெய்யான விருப்பம் இருக்கவேண்டும்; இரண்டாவது, நமது புத்தியையும் மனதையும் சில விசேஷ வகைகளில் பயிற்சிப்பது அவசியம்.

**292.** புத்தியை பயிற்சிப்பது எவ்விதம்?

(1) நல்லொழுக்கத்திற்கேற்ற மேற்கோள்களைக் கற்றறிந்து, அவற்றைக் கனமாய் மதித்து அடிக்கடி உபயோகிப்பதால்;

(2) சகலவிதமான துர் நினைவுகளையும், கெட்ட மேற்கோள்களையும் நினைவினின்று அகற்றி, அவற்றை அருவருக்கவும் விலக்கவும் பழகுவதால்;

(3) கடவுளைப்பற்றியும் அவர்மட்டில் நமக்குள்ள கடமையைப்பற்றியும் அடிக்கடி சிந்தித்து, மெய்யாகவே நல்ல மனிதன் ஆவது எவ்வளவோ அவசியமானது என்று உணர்வதால், —புத்தியைப் பயிற்சிக்கலாம்.

**293.** மனதைப் பயிற்சிப்பது எவ்விதம்?

நமது வாழ்நாட்களின் அநுதின சாதாரண கிரிகைகளிலும், ஊக்கமும் திடனும் காட்டி, தகுந்ததையே எப்போதும் கிரமமாய் செய்து; செய்வதையும் கூடுமானமட்டும் நன்றாய்ச் செய்து; இன்ப துன்பம், பிரியம், அருவருப்பு இவற்றால் இடையூறு நேரிடாதபடி நம்மைத்தானே தண்டித்து நடத்திவருவதால் மனதைப் பயிற்சிக்கக்கூடும்.

இவ்விதமான அநுதின சாதாரண கிரிகைகளில், ஊக்கமும், திடனும், ஒழுங்கும் ஏற்படுங்கால், நமது அதிமுக்கியமான அலுவலாகிய வேத விஷயங்களிலும் அறநெறி ஒழுக்கத்திலும் இதே ஊக்கமும் திடனும் ஏற்படுமென்பது திண்ணம்.

காரியம் சித்திபெறவேண்டுமாயின், "கரணம் தப்பினால் மரணம்" என்பதாக நமக்குக் கிடைக்கும் சமயத்தைக் கைநெகிழவிடாமல் ஜாக்கிரதையாயிருக்கத்தகும. "செய்வனத் திருந்தச் செய்" என்பதையும் மறக்கத்தகாது.

**294.** சோதனைகள் வருங்கால், நமது மனதை உபயோகிப்பது எவ்விதம்?

சோதனையை எதிர்த்து நின்று "நான் சம்மதியேன்" என்று திடாரிக்கமாய் உரைக்கலாம். ஆனால், அநேக சமயங்களில் இது எளிதல்ல; சிலவேளை சோதனைக்குச் சம்மதிப்போம்

என்று பயப்படவும் காரணமுண்டு. ஆகையால், வேறொரு உபாயம் செய்ய மனதாயிருக்கவேண்டும்.

**295.** அந்த உபாயம் யாது?

நமது சிந்தனையை (எண்ணத்தை) மாற்றுவது. அதாவது: சோதனையின் நினைவை அகற்றி, இந்திரியங்களும் ரூபிகரமும் அதில் கவனம்கொள்ளாது விலக்கி, சோதனையை மறந்து போகும்வண்ணம் வேறு ஏதாவது காரியஞ் செய்ய முயற்சிக்க வேண்டும்.

**296.** சோதனையோடு எதிர்த்து நின்று மனோவலிமையினால் அதை ஜெயிக்கப்பார்த்தால், நமது குணபான்மைக்கு அதிக வலிமை உண்டாகாதா?

சாதாரணமான விஷயங்களில் எதிர்த்து நிற்பது நன்று. ஆனால், சோதனை அதிவேகங்கொண்டு நம்மைத் தோற்கடிக்கக் கூடுமாயிருந்தால், எதிர்த்து நிற்பதனால் நமக்கு அபாயம் நேரிடும். ஆகையால் சோதனையை விட்டு ஓடி விலகுவதே உத்தமம்.

**297.** இப்படி ஓடி விலக்கவேண்டிய சோதனைகள் எவை?

இத்தகைய சோதனைகளில் முக்கியமானது அசுசியான சிற்றின்பச் சோதனை. இது எப்போதும் ஆபத்துக்குரியது; இது நீடிக்கும் ஒவ்வொரு க்ஷணமும் ஆபத்து அதிகரிக்கிறது. இதர விஷயங்களில், ஒவ்வொருவனும் தன் அநுபவசித்தியால் அறிந்து கொள்ளவேண்டியது. சிலருக்கு போசனப்பிரியம், குடிவெறி அதிக ஆபத்துக்குரியதாயிருக்கலாம்; பந்தய ஆட்டம், சூது விளையாடுதல் வேறு சிலருக்கு ஆபத்தாயிருக்கக்கூடும். திருடத் தேடுவது சிலருக்கு மோசமான சோதனையாயிருக்கலாம்.

"விசுவாசத்துக்கும் கற்புக்கும் விரோதமான சோதனைகளுக்கு ஓடி ஒளிவதே உத்தம உபாயம்"

**298.** ஓடி ஒளிவது கோழைத்தனமல்லவா?

சண்டையில் தோல்வியடைவாய் என்று நிச்சயமாய்த் தெரிந்திருந்தால் அதைவிட்டு விலகுவது கோழைத்தனமல்ல:

"வீரியத்திற் சிறந்தது விமரிசை."

நமது பலவீனத்தை அறிந்து ஜாக்கிரதையாயிருப்பது கோழையின் குணமல்ல, அது விமரிசையாகும்.

**299.** குணபான்மையை அடைவதில், இப்பயிற்சிகள் எவ்விதம் உதவுகின்றன?

இப்பயிற்சிகளால் பழக்கங்கள் உண்டாகின்றன; பழக்கங்களின் கோர்வையே குணபான்மையாம்.

**300.** பழக்கங்கள் உண்டாவதெப்படி?

ஓர் கிரிகையை மீண்டும் மீண்டும் அடிக்கடி செய்வதாலும் அதற்கு நேர்விரோதமானதைத் தவிர்த்துவருவதாலும் பழக்கங்கள் உண்டாகின்றன.

**301.** நற்குணபான்மைக்கான பழக்கங்கள் எவை?

நற்குணபான்மைக்கான பழக்கங்கள் "புண்ணியங்கள்" எனப்படும்.—துர்க்குணபான்மைக்கான பழக்கங்கள் "துர்க்குணங்கள்" எனப்படும்.

**302.** இப்பழக்கங்களைப் படிப்பதற்கேற்ற வரிசைக்கிரமம் யாது?

(1) நற்குணபான்மைக்கு மூலகாரணமான புண்ணியங்களையும், அவற்றிற்கு நேர்விரோதமான பாவங்களையும் விசாரிப்போம்.

(2) நற்குணபான்மையுள்ளோன் விலக்கத்தக்க விசேஷ பாவங்களையும், அதன்பின் அவன் பயிற்சிக்கத்தக்க விசேஷ புண்ணியங்களையும் ஆராய்வோம்.

---

## 2-ம் அதிகாரம்

### குணபான்மையின் தொகுதி அமைப்பு—

### புண்ணியப் பொதுக்கொள்கைகள்

**303.** நற்குணபான்மையின் தொகுதி யாது?

நமது கிரிகைகள் யாவையும் ஒழுங்குபடுத்திக் கட்டுப்படுத்தத்தக்க் கொள்கைகள் ஒன்றுசேர்ந்து, நற்குணபான்மை என்னும் தொகுதியாகிறது.

**304.** அந்த மேற்கோள்களின் பிரகாரம் நடந்தால், என்ன பெயர் ஏற்படுகிறது?

தவருது சுமுத்திரையாய் அவற்றைப் பின்பற்றி நடக்கும்போது அவற்றிற்குப் புண்ணியங்களென்ற பெயர் வழங்குகிறது.

**305.** புண்ணியமென்றால் என்ன?

எளிதாகவும் சுமுத்திரையாகவும் நற்கிரிகைகள் செய்யத்தக்க வீரியம், புண்ணியம் என்னப்படும்.

306. சாதாரண புண்ணியங்களெவை?

விமரிசை, நீதி, தைரியம், மட்டாயிருத்தல் ஆக நான்கு.

307. இப்புண்ணியங்களால் ஆவதென்ன?

விமரிசையால் நமது கிரிகைகள் தம்மிலே தகுந்தவைகளாகின்றன. நீதியானது பிறர்மட்டில் அவை தகுந்தவைகளாகச் செய்கின்றது. தைரியம், மட்டளவு இவ்விரண்டும் நமக்கு வரும் இடையூறுகளை விலக்குகின்றன.

## 1. விமரிசை

308. விமரிசையென்றால் என்ன?

நாம் கருதத்தக்க காரியங்களைப்பற்றியும், அக்காரியங்களை அடையுமாறு செய்யவேண்டிய உபாயங்களைப்பற்றியும், நமது நிதானத்தையும் மனதையும் செவ்வே உபயோகிப்பது விமரிசையாகும்.

309. நாம் கருதத்தகும் அதிமுக்கியமான காரியம் எது?

கடவுளால் நமக்கு நியமகம்பண்ணப்பட்டிருக்கும் பூரண பாக்கியத்தை நாம் அடையும்வண்ணம், இவ்வுலகில் நாம் அவரது விருப்பப்பிரகாரம் ஜீவிப்பதே, நாம் கருதவேண்டிய அதிமுக்கியமான காரியம்.

310. இந்த அதிமுக்கியமான காரியத்தை அடைவதற்கான உபாயங்கள் எவை?

கடவுள் நமக்குக் கட்டளையிட்டிருக்கும் ஜீவிய சட்டத்தை அனுசரிப்பதே ஏக உபாயமாகும்.

311. ஜீவிய சட்டத்தை அநுசரிப்பது எப்படி?

கடவுளுடைய விருப்பப்பிரகாரம் நமது தத்துவங்களை எல்லாம் உபயோகித்து, அவற்றை ஒருக்காலும் துர்ப்பிரயோகம் செய்யாமல், கடவுளுக்கும் நமக்கும் பிறருக்கும் நீதியும் தகுந்ததுமானவைகளை எப்போதும் செய்வதால், ஜீவிய சட்டத்தை அநுசரிக்கலாம்.

312. இந்த ஒழுங்குகளைக் கொண்டுசெலுத்துவது எவ்விதம்?

நமது இந்திரியங்கள், நினைவுகள், உணர்ச்சிகள்மட்டில் ஜாக்கிரதையாயிருந்து, நமது ஆசாபாசங்கள், துர்நாட்டங்களைத் தண்டித்து அடக்குவதாலும்; பாவப் பழக்கம் உண்டாகா வண்ணம் எந்தப்பாவத்திலும் அடிக்கடி விழாமல் தடுப்பதாலும்; கெட்ட வழக்கம் ஏதாவது உண்டானால், அதை அடியோடு

பிடுங்கி எறியப் பிரயத்தனப்படுவதாலும், இந்த ஒழுங்குகளைக் கொண்டுசெலுத்தலாம். கடைசியாக, பாவத்தை விலக்குவதோடு நிற்காமல், பாவத்துக்கான அபாயங்களைத் தவிர்க்க முயலுவதும் விமரிசையைச் சேர்ந்த செயலாகும்.

**313.** *நமது வாழ்நாட்களின் அநுதின சாதாரண காரியங்களிலும் விமரிசை உண்டா?*

"எப்போதும் விமரிசையாய் நடப்பதே தகுதி, கிரமம்" என்றமட்டும் நமது சாதாரண காரியங்களிலும் விமரிசைக்கு இடம் உண்டு என்கலாம். ஆனால் "விமரிசை" ஓர் புண்ணியமானமட்டும் அறநெறி விஷயத்திலும் நமது கடைசிப் பாக்கியத்தை அடையத் தேடுவதிலும் மாத்திரம், இது சரியாய்ச் செல்லும்.

## 2. நீதி

**314.** *நீதி என்பது யாது?*

ஒவ்வொருவனுக்கும், அவனவனுக்குச் செல்லவேண்டியதைக்கொடுப்பது, நீதி என்னப்படும். அதாவது, ஒவ்வொருவனையும் அவனவனுடைய உரிமைகளின் பிரகாரம் நடத்த வேண்டும்.

**315.** *உரிமை என்பது யாது?*

ஒருவன் தன் சொந்தமாகப் பாராட்டக்கூடிய எது காரியமும், உரிமை என்கலாம். அதாவது, பிறரிடமிருந்து நியாயமாய் எதிர்ப்பார்க்கக்கூடிய எந்தக் காரியமும், அவனுக்கு உரிமை.

**316.** *உரிமைகளுக்கும் கடமைகளுக்கும் உள்ள சம்பந்தம் என்ன?*

இரண்டுக்கும் கிட்டின சம்பந்தம் உண்டு; ஓர் திறத்தாருக்கு ஒரு உரிமை உண்டானால், மறு திறத்தாருக்கு அதைப் பற்றிய கடமை உண்டு.

**317.** *யார் யாருக்கு உரிமைகள் உண்டு?*

கடவுளுக்கும், பிறருக்கும், நமக்கும் உரிமைகள் உண்டு.

**318.** *கடவுளுடைய உரிமைகளும், அவர்மட்டில் நமக்குள்ள கடமைகளும் எவை?*

நம்மை உண்டாக்கின சிருஷ்டிகருக்குரிய உரிமையும், நம்மை ஆண்டுவரும் எஜமானனுக்குரிய உரிமையும் கடவுளுடைய உரிமைகள். அவரை அறிந்து அவருடைய நன்மைத்தனத்தையும் இலட்சணங்களையும் ஆராதித்து, வணங்கித் துதித்துக் கொண்டாடி, அவரின்றி நாம் இல்லை என்பதை அங்கீகரித்து, அவருடைய கட்டளைப்பிரகாரம் நடப்பது நமது கடமை.

**319.** பிறருடைய உரிமைகளும், அவர்கள்மட்டில் நமக்குள்ள கடமைகளும் எவை?

தங்கள் உயிர், சரீரம், சுவாதீனம், சொத்து, நன்மதிப்பு இவற்றிற்கு மோசம் நேரிடாதிருக்க, பிறருக்கு உரிமை உண்டு. உண்மையை அறியவும் உரிமை உண்டு. பிறரோடு உறவாடுவதில் நீதி, நேர்மை, உண்மைப்பிரகாரம் நடக்க நமக்குக் கடமை உண்டு. அவர்களை ஏமாற்றாமலும், அவர்களுடைய உயிர், சரீரம், சுவாதீனம், சொத்து, கீர்த்திக்கு தீங்கு விளைவிக்காமலுமிருக்க நாம் கடமைப்பட்டிருக்கிறோம்.

**320.** நமது சொந்த உரிமைகளும், நம்மீது நமக்குள்ள கடமைகளும் எவை?

பிறருக்குள்ள உரிமைகள்தான் நமக்கும் உண்டு. நமது உயிரையும் சௌக்கியத்தையும் கவனிப்பது; நமது தத்துவங்களை யாவும் நற்பிரயோகம் செய்து, துர்ப்பிரயோகம் செய்யாதிருப்பது; பாவத்தால், நமது கடைசிப் பாக்கியத்தை இழந்து போகாமல், அதை அடையப் பிரயாசப்படுவது ;—இவை நம்மீது நமக்குள்ள கடமைகள்.

**321.** நம்மீதும் பிறர்மட்டிலும் நமக்குள்ள கடமைகள் வேறு, கடவுள்மட்டில் நமக்குள்ள கடமைகள் வேறாக, முற்றிலும் வேறுபட்டிருக்கின்றனவா?

இல்லை; சகல உரிமையும், ஈற்றில், கடவுளுக்கே சொந்தம்; ஆகையால், நம்மீதும், பிறர்மட்டிலும், நமக்குள்ள கடமை, கடவுள்மட்டில் உள்ள கடமை என்றே முடிக்க வேண்டும்.

**322.** அவ்வாறாயின் அவற்றைப் பிரித்து வெவ்வேறாகக் கூறுவானேன்?

ஏனெனில், சில உரிமைகள் கடவுளுக்குமாத்திரம் உரித்தானவை; வேறு சில உரிமைகளை அவர் மனிதருக்கு அளித்து, தமக்குத்தாமே உரித்தானதுபோல், நாம் அவற்றைப் பாராட்டி மதித்து வரும்படியாக நமக்குக் கற்பித்திருக்கிறார்.

**323.** நமக்கு அல்லது பிறருக்கு விரோதமான பாவம், கடவுளுக்கும் ஏற்காததா?

அத்தகைய ஒவ்வொரு பாவமும், கடவுளுக்கு ஏற்காத குற்றந்தான்; ஏனெனில், அது அவருடைய கற்பனைகளின் மீறுதலன்றோ?

•

**324.** இவ்விதமாயின், நமக்கு அல்லது பிறருக்கு விரோதமான பாவம் என்பது கிடையாதோ?

தீங்கு நேரிடுகிறது நமக்கு அல்லது பிறருக்கு; ஆனால் பாவம், கடவுளுக்கு விரோதமானதுதான்.

**325.** நாம் நமக்கென்கிலும் பிறருக்கென்கிலும் நற்கிரிகை புரிந்தால், இது கடவுள்மட்டிலும் நற்கிரிகை என்னப்படுமா?

ஆம்; ஏனெனில், அந்த நற்கிரிகைகள் அவருடைய கட்டளையையும் அவர்மட்டில் நமது கடமையையும் அநுசரிப்பதினால் ஆனவையன்றி வேறொன்றுமில்லை.

குறிப்பு:—ஆகையால், நமது பெற்றோர் பெரியோருக்குக் கீழ்ப்படியும்போதும், சர்க்கார் சட்டங்களுக்குக் கீழ்ப்படியும்போதும், சர்வ அதிகாரத்துக்கும் ஊற்றாகிய கடவுளுக்கே கீழ்ப்படிகிறோம்.

## 3. தைரியம்

**326.** தைரியம் என்பது யாது?

நமது கடமையை நிறைவேற்றுவது கக்கிஷமாயிருந்தாலும், கஷ்டத்தைப் பாராமல் கடமையைச் செய்து முடிப்பதற்கான மனோவலிமையைத்தான் தைரியம் என்கிறோம்.

**327.** என்னென்னவிதமாய் நமது கடமை கக்கிஷமாயிருக்கக்கூடும்?

சில சமயம், அதில் சரீரக் கஷ்டம் இருக்கும். சோம்பல் களைப்பு அல்லது அசௌக்கியம் நேரிடும்போது, இது உண்டாகும். மனதுக்குச் சில சமயம் வருத்தமாயிருக்கக்கூடும்; அப்படியே நாம் பிரியப்படுகிற அல்லது செய்ய ஆசிக்கும் எதையாவது, கடமை குறுக்கிட்டு, நம்மைவிட்டு அகற்றினால், இது நேரிடக்கூடும். ஆசாபாசங்கள் அதிவேகமாய் எழும்பினால், அவற்றை எதிர்ப்பதில் கஷ்டம் நேரிட்டுக் கடமையைச் செய்வது கக்கிஷமாயிருக்கக்கூடும். வேறு சில சமயங்களில் கடமையைச் செய்வதால், நாம் வெகு பிரியமுடன் நேசிக்கும் பொருட்களை இழக்க நேரிடலாம், அல்லது நாம் கடமையைச் செய்வதைக் கண்டு பிறர் நம்மைக் கேலிபண்ணி நகைக்கலாம், அல்லது அதைச் செய்யாதபடி விக்கினம் செய்யலாம்.

**328.** தைரியம் வெளிப்படையாய் விளங்கும் ஒரு உதாரணம் சொல்.

கிறீஸ்துவ வேதசாட்சிகள், தங்கள் வேதத்தை மறுதலிப்பதைப் பார்க்க, நிஷ்டுர வாதைகளைப் பட்டநுபவிக்கவும்,

உயிரை முதலாய்ப் பரித்தியாகம் பண்ணவும் சித்தமாயிருந்தார்கள்; இதனுல் அவர்களின் தைரியம் மேலானவிதமாய் வெளியானது.

**329.** தைரியத்தில் பயிற்சி அடைவதெப்படி?

நமது கடமை கக்ஷிஷமாய்த் தோன்றினுலும், அதை நிறைவேற்றுவதில் பிரமாணிக்கமும் திடனும் காட்டி, தைரியமாய் கஷ்ட நிர்ப்பந்தங்களைச் சகித்து, விக்கினங்களின் நிமித்தம் கடமையை விட்டுவிடாதிருப்பதால், தைரியத்தில் பயிற்சி அடையலாம்.

**330.** இதில் நமக்கு உதவியாயிருக்கக்கூடிய சிந்தனைகள் எவை?

"பாவம் சகல பொல்லாப்புகளிலும் பெரிதானது. புண்ணியம் சகலத்திலும் சிறந்த நன்மை; இச்சமயம் எவ்வளவுக்குக் கஷ்டங்களைச் சகிக்கிறேருமோ, அவ்வளவுக் கவ்வளவு பிற்பாடு அவற்றைச் சகிப்பது எளிதாகும்; நாம் கஷ்டப்படுகிற அளவு, நமது சம்பாவனையும் அதிகமாகும்."—என்ற சிந்தனைகள் நமக்கு மிகவும் உதவியாயிருக்கும்.

## 4. மட்டாயிருத்தல்

**331.** மட்டாயிருத்தல் என்பது யாது?

இன்பத்தைச் சுகிப்பதிலுள்ள ஆனந்தத்தைப் பொருட்படுத்தாமல், நமது கடமையை நிறைவேற்றத்தக்க மனுேவலிமை "மட்டாயிருத்தல்" எனப்படும்.

**332.** சகலவித இன்பமும் கெட்டதா?

இல்லை; இன்பம் தெய்வ நன்கொடைகளிலொன்று; நாம் ஆசையோடும் எளிதாகவும், நமது கர்மங்களைச் செய்வதற்கான பெருத்த உதவி அது. இந்தக் கருத்துக்காக அதை உதவிக் கொள்ளுமட்டும், அது நன்மையானதுதான்.

**333.** இன்பம் தின்மையாகிறது எப்படி?

இன்பத்தை அடைவதற்காகத் துர்கிரிகைகள் செய்தால் அல்லது நமது கடமையை அலட்சியம் பண்ணிஞல், இன்பம் தின்மையானதாகிறது.

**334.** இன்பத்துக்காகவென்று செய்யும் துர்க்கிரிகைகளில் சிலவற்றைச் சொல்.

ருசியினுல் அடையும் இன்பத்துக்காக, மிதமிஞ்சி சாப்பிடுதல், மிதமிஞ்சிக் குடித்தல்; தனியே அல்லது பிறரோடு அசுசியான சிற்றின்பக் கிரிகைகள் செய்தல்; கடமையைக் கவனியாமல், விளையாட்டு வேடிக்கையில் பொழுது போக்கு

கிறது; நமது சத்துவத்துக்கு மிஞ்சிப் பந்தயம்போடுதல், சூது விளையாடல் இவை முதலியன.

**335.** எதிலும் மட்டாயிருக்கப் பயிற்சிப்பது எவ்வாறு?

இன்ப சுகங்களில் மட்டுதிட்டமாயிருத்தல்; ஆனந்தம் அதிக வலிமைகொண்டு நம்மை ஆட்கொள்ளுமுன்னதாக, அதை விட்டுவிடுதல்; பிறருடைய நன்மையைக் கருதி, நமது இன்ப சுகத்தைப் பரித்தியாகம் பண்ணுதல்; துன்பத்தைத் தைரியமாய் ஏற்றுக்கொள்ளல், இவைபோன்ற முயற்சிகளினால் மத்திபத் தன்மையைப் பயிற்சிக்கலாம்.

**336.** இறுதியில் கூறினது (துன்பத்தைத் தைரியமாய் ஏற்றுக்கொள்வது) தைரியம் என்னும் புண்ணியத்தைச் சார்ந்த தல்லவா?

ஆம்; தைரியமும் மட்டாயிருத்தலும் இரண்டும் வெகுவாய் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்ட புண்ணியங்கள்.

**337.** இவை இரண்டும் சம்பந்தப்பட்டிருப்பானேன்?

இன்ப சுகத்தை வேண்டாமென்று அகற்றுவது, வெகு சிரமமான காரியம்; தைரியம் இருந்தால்தான், இவ்விதம் செய்ய இயலும். மீளவும், இன்பத்தால், நாம் மனோவலிமை குன்றி அதைரியவான்கள் ஆகிறோம்; வருத்தத்தைச் சகிக்க, சக்தியற்றுப்போகிறோம்; துன்ப வருத்தங்களைச் சகிக்கும் பழக்கம் இருந்தால், இன்பத்தை எதிர்த்துநிற்கப் போதுமான தைரியமும் வலிமையும் அடைவோம்.

## 5. உன்னதமான ஒழுங்கு

**338.** 'மட்டாயிருத்தல்' என்பது "மத்திபத்தன்மை" என்றும் பொருள்படுகிறதில்லையா?

"மத்திபமே, புண்ணியம்" என்றவாறு, மட்டாயிருத்தல் மத்திபமாயிருத்தல் எனவும் அர்த்தங்கொள்ளும்.

**339.** "மத்திபமே, புண்ணியம்" என்பதின் பொருள் என்ன?

அநேக விஷயங்களில், எந்தப் பக்கமென்கிலும் அதிகமாய்ச் சாயாமல் (சார்பில்லாமல்) நடு மையமாய் இருப்பதில்தான் புண்ணியம் அடங்கியுள்ளது; எந்தப்பக்கம் சாய்ந்தாலும், பாவமாகிறது. இதைப்பற்றியே, "மத்திபம், புண்ணியம்" எனும் பழமொழி வழங்கலாயிற்று.

**340.** எந்த இரண்டு காரியங்களுக்கும் மையமாய் இருப்பதால், விமரிசை என்ற புண்ணியம் ஏற்படுகிறது?

நாம் இன்னவிதமாய் நடக்கத்தகும் என்பதைப்பற்றி ஆலோசிக்காமல் அலட்சியமாயிருத்தல் ஒன்று; இதைப்பற்றி

அனுவசியமாய் வெகு நேரமளவு ஆலோசனைசெய்து கடைசியாய் காரியத்தைச் செய்யாமல்போவது வேறொன்று. இந்த இரண்டு விதமான நடத்தைக்கும் மத்திபமானது விவமரிசையாகும்.

**341.** நீதி என்கிற புண்ணியமும் நடுநிலைமையால் உண்டாவதென்று காட்டக்கூடுமா?

பிறருக்கு அதிகமாய்க் (அளவுக்கு மிஞ்சி) கொடுக்காமலும், குறைத்துக்கொடுக்காமலும், அளவுப்பிரகாரம் கொடுக்கிற நடுநிலைமைதான் நீதியல்லவா? குறைத்துக் கொடுத்தால், அவர்களுடைய உரிமையைக் கெடுக்கிறோம். அவர்களுக்கு உரித்தானதிலும் அதிகமாய்க் கொடுப்பது சில சமயங்களில் புண்ணியமாகலாம்; ஆனால் சில சமயங்களில், அது அவர்களுக்கு அல்லது நமக்கே தின்மையாயிருக்கலாம்.

**342.** இதை விளக்கிக்காட்ட சில உதாரணங்கள் கூறு.

பெற்றோர் பிள்ளைகளுக்கு பணம் ஏராளமாய்க் கொடுப்பதால், அல்லது அவர்களுக்கு மிதமிஞ்சின சௌகரியங்களைத் தேடுவதால், அவர்களைக் கெடுக்கிறார்கள்; பிள்ளைகள் செல்லமாய் வளர்ந்து, எப்போதும் இன்பத்தை நாடிப் பின் காலத்தில் ஒரு காசுக்கும் உதவமாட்டார்கள். இது பிள்ளைகளுக்கும் தின்மையல்லவா? காரணமில்லாமல் (நியாயமின்றி) தங்களுக்குரித்தானதாகப் பிறர் கேட்பதெல்லாம் அவர்களுக்குக் கொடுப்பதால் அல்லது அவர்களுடைய தப்பறையான அபிப்பிராயங்களை அங்கீகரிப்பதால், அவர்களுக்கு நாம் தீங்கு செய்யக்கூடும்.

**343.** தைரியமும் நடுநிலைமையால் உண்டாவது எவ்வண்ணம்?

துன்பத்துக்குப் பயந்து கோழைத்தனமாயிருக்கக்கூடும்; அல்லது முரட்டுத்தனமாய் (முன்பின் யோசியாமல்) துன்பதுரிதங்களுக்கு நம்மைத்தாமே ஆளாக்கக்கூடும். கோழைத்தனமாய் நடப்பதற்கும் முரட்டுதனமாய் நடப்பதற்கும் "நடுநிலைமை" யாயுள்ளது தைரியம்.

**344.** மட்டாயிருத்தல், நடுநிலைமையால் ஆகும் என்பது எவ்வாறு?

இன்பம் என்றால் எல்லா இன்பமும் நல்லது அல்லது எல்லாம் கெட்டது என்று சொல்லாமல், இரண்டுக்கும் மத்திபமாய் இருப்பது மட்டாயிருத்தல்.

**345.** இதை விவரித்துச் சொல்.

சிலர் சகலத்தையும் (கோணற் கண்ணால் பார்த்து) தப்பிதமென்று பாவித்து, தங்களுக்கு நன்மை செய்யக்கூடிய

இன்பத்தையும் தவிர்க்கிறார்கள். வேறு சிலர், இதற்கு முற்று மாறாய் இன்பம் என்றால் பூரணமாய் சுகிக்கலாம் என்பதாக தங்கள் கடமையையும் கவனிக்காமல், இன்ப சுகத்தையே நாடி வீணராகக்கூடும்.

**346.** இந்த நான்கு புண்ணியங்களுக்கும் குணபான்மைக்கும் உள்ள தொந்தார்த்தம் என்ன?

இந்நான்கு புண்ணியங்களினின்றும் நான்கு மேற்கோள்கள் உண்டாகின்றன. பிரதம பொது மேற்கோளாகிய ஜீவிய சட்டத்தை (நினைவு, வாக்கு, கிரிகையில் தக்கதைச் செய்து, தகாததைத் தவிர்க்க) அநுசரிப்பதற்கு, இந்நான்கு மேற்கோள்களும் உதவியாய் நிற்கின்றன.

## 6. விரோதமான துர்க்குணங்கள்

**347.** மேற்கூறிய புண்ணியங்களை நாடாமல் அவற்றிற்கு விரோதமாய் ஒருவன் நடந்தால், அவனுடைய நடத்தையைக் குறித்து என்ன சொல்வோம்?

வேளைக்கு வேளை மாத்திரம், புண்ணியங்களுக்கு விரோதமான ஓரோர் கிரிகை செய்தால், அதைப் பாவம் என்போம்; ஆனால், வழக்கமாய் அவ்விதம் நடந்துவந்தால், அதைத் "துர்க்குணம்" என்கிறோம்.

**348.** துர்க்குணங்கள், புண்ணியங்களுக்கு விரோதமாவது எவ்விதம்?

ஒவ்வொரு துர்க்குணமும், "விமரிசைக்கு" விரோதமானது; ஏனெனில், தகுந்த காரியத்தைக் கருதாதிருப்பது அல்லது காரியசித்தி பெறுவதற்கான வழிகளைத் தேடாதிருப்பது பாவத்துக்கு காரணம். ஒவ்வொரு துர்க்குணமும் "நீதிக்கு" விரோதம்; ஏனெனில், கடவுளுக்கு, நமக்கு அல்லது பிறருக்குத் தீங்கு விளைகிறது பாவத்தால்தான். ஒவ்வொரு துர்க்குணமும், "தைரியத்துக்கு" விரோதம்; ஏனெனில், தைரியமின்மையால் துன்பத்துக்குப் பயந்து பாவம் செய்கிறோம்.

ஒவ்வொரு துர்க்குணமும் "மட்டாயிருப்பதற்கு விரோதம்" என்கலாம்; ஏனெனில் ஏறக்குறைய சகல பாவமும், நமது சௌகரியத்தை அல்லது இன்பத்தைத் தேடுவதால்தான் உண்டாகிறது.

---

# 3-ம் அதிகாரம்

## துர்க்குணபான்மை ஏற்படுவது

### 1. விசேஷ துர்க்குணங்கள்

**349.** குணபான்மை அடைவதில் நாம் கவனிக்கத்தக்கதென்ன?

இரண்டு விஷயங்கள் கவனிக்கத்தக்கவை: 1-வது நாம் தவிர்க்கவேண்டிய துர்க்குணங்கள்; 2-வது பயிற்சிக்கவேண்டிய நற்குணங்கள்.

**350.** துர்க்குணம் என்பது யாது?

புத்தியிலும் மனதிலும் ஸ்திரமாய் வேரூன்றிப் பாவப் பழக்கத்தை உண்டுபண்ணும் துர்நாட்டம், துர்க்குணம் என்னப்படும்.

**351.** நாம் விசேஷமாய் கவனிக்கத்தக்க துர்க்குணங்கள் எவை?

ஆங்காரம், பேராசை, காய்மகாரம், கோபம், மோகம், போசனப்பிரியம், சோம்பல், ஆக ஏழு துர்க்குணங்கள்.

**352.** எல்லாத் துர்க்கிரிகைகளையும் "துர்க்குணம்" என்று ஏன் சொல்லக்கூடாது?

சில துர்க்கிரிகைகள் பாவப்பழக்கத்தால் ஆகிறவையல்ல. ஏதோ ஒரு விசேஷ சோதனை அல்லது கிளர்ச்சியால் நேரிடுகின்றன; இவை எப்போதும் அல்ல, சமயாசமயம் விளைகின்ற பாவங்கள். உதாரணமாக: கொலை, கொள்ளை, பொய், பெரியோருக்குக் கீழ்ப்படியாமை, பொய்ப்பத்திரம் உண்டு பண்ணுதல் முதலியன. துர்க்குணம் இவ்விதமானதல்ல; ஒருவனின் "குணபான்மையை" அதாவது அவனுடைய தன்மையைக் காட்டுவது. இன்ன சமயந்தான், அது பாவம் ஆகும் என்று வரையறுக்கமுடியாது. எந்த சமயத்திலும் அது பாவத்துக்கு வழியாகக்கூடும்.

### 2. ஆங்காரம் அல்லது தற்பெருமை

**353.** ஆங்காரம் என்றால் என்ன?

ஆங்காரம் (அகம் + காரம்; தான் என்னும் ஆணவம்): நமக்கு மேற்பட்டவர்களையும், கீழ்ப்பட்டவர்களையும் அவமதிக்கும்படியான விதமாய்த் தன்னைத்தானே பெருமையாக எண்ணுதல்; ஆங்காரம் என்னப்படும்.

**354.** நமக்கு மேற்பட்டவர்கள்மட்டில் நமது ஆங்காரத்தைக் காட்டுவது எவ்விதம்?

தான் வைத்ததே சட்டம் என்ருற்போல், பிறர் சொல்வதைக் கவனியாமல், தன் இஷ்டம்போல் நடக்கத்தேடுவதினுலும்; கடவுளையும், உலக அதிகாரிகளையும் அவமதித்து, அவர்களுக்கு விரோதமாய்க் கிளம்புவதாலும், நமது ஆங்காரத்தைக் காட்டிக்கொள்கிருேம்.

**355.** நமக்கு கீழ்ப்பட்டவர்கள்மட்டில், நமது ஆங்காரம் எப்படி வெளியாகிறது.

அவர்களை நிந்தித்துக் குரூரமாய் நடத்துவதால் வெளியாகிறது.

**356.** ஆங்காரத்தோடு சம்பந்தப்பட்ட, வேறு துர்க்குணங்கள் எவை?

தற்பெருமை அதாவது: தனக்குள்ள குணங்களுக்கு (சாமர்த்தியம், திறமை) மேலாகத் தன்னைத்தானே உயர்த்தி மேலாக எண்ணுவது; தொட்டாற்சிணுங்கித்தனம் அதாவது: அற்பசொற்ப காரியத்துக்கும் கோபபட்டுக்கொள்வது; வீண்டம்பம் அல்லது தான் செய்த சொற்ப காரியமும் தனக்குக் கீர்த்தி என்பதாக நினைத்து, அதைப்பற்றிச் சந்தோஷம் கொண்டாடுவது; தனது உரிமைகளையும், தத்துவங்கள், சக்தியையும்பற்றிய தப்பறையான எண்ணத்தால் ஏற்படும் மேட்டிமை, ஆணவம், தனது வல்லமையைப்பற்றியும், தனது செயல்களைப்பற்றியும் யாவரும் அறிய பறைசாற்றிப் பெருமை பாராட்டல்; பிறரை அவமதித்தல்; பிறரைத் தன்னோடு ஒப்பிட்டுப்பார்த்து, அவர்களை இழிவுபடுத்துதல்; தன்னுடைய வல்லமையைக் காட்டும்படி, அதிகாரம் மகிமைக்கு ஆசைப்படுதல், கொடுங்கோன்மை அல்லது பிறரைத் தன் அடிமைகளாகப் பாவித்தல், இவைபோன்ற மற்றவைகளுமாம்.

"சாதாரணமாய் சகல பெரும் தப்பிதங்களுக்கும் மூல காரணம் ஆங்காரம். மற்றச் சகல ஆசாபாசங்களாலும், சமயத்துக்குச்சமயம் நன்மை விளைவதுண்டு; ஆனால் ஆங்காரம் எங்கே தலையைக் காட்டுமோ, அங்கே, எல்லாம் பாழ். அமரிக்கையாய்க் குற்றமறச் செய்யக்கூடியதையெல்லாம், ஆங்காரமாய்ச் செய்வது, ஆபத்துக்கு இடம் தரும்." (Ruskin).

**357.** ஆங்காரத்திலும், நல்வகையான ஆங்காரம் உண்டா?

யாவற்றிலும், சிறந்ததைச் செய்யத்தேடும் மேன்மையான குணம் ஒன்றுண்டு, இந்தக் குணமுள்ளவனுக்கு மகத்தான நற்கிரிகைகளைச் செய்வதே இன்பம்; அவன் ஒருக்காலும் இழி

வானதை அல்லது தவறுதலானதைச் செய்யான். ஒருவன், "நேர்மையானவன், உண்மையுள்ளவன், மேன்மையுள்ளவன், பெருந்தன்மையானவன், தைரியவான், பராக்கிரமசாலி, மாசறத் தன் மதிப்பைக் காப்பாற்றுகிறவன்" என்று அவனைப் புகழும் போது, இந்த அர்த்தத்தில்தான் சொல்லுகிறோம். இது ஆங்காரம் என்னும் துர்க்குணமல்ல; நன்மைத்தனத்தின் மட்டிலும் புண்ணியத்தின் மட்டிலுமுள்ள சிறந்த ஆசை எனலாம்.

*358. தன் அந்தஸ்து, சாமர்த்தியம், திறமையைப்பற்றிப் பெருமைகொள்ளுவது சரியா?*

நாம் இருப்பதற்கு மேலாக நம்மை உயர்வாய் எண்ணுத மட்டும், இவற்றைப்பற்றிச் சந்தோஷப்படுவது குற்றமல்ல. ஆங்காரத்துக்கும், அதோடு சம்பந்தப்பட்ட இதர குற்றங்களுக்கும், இந்த ஆநந்தம் வழியாகும்போதுதான் இது துர்க்குணமாகிறது.

### 3. பேராசை அல்லது பொருளாசை

*359. பேராசை என்பது யாது?*

அநேக பொருட்களை அடைய நமக்கு மிதமிஞ்சின ஆசை இருக்கிறது. இவைகளைப் பாவமின்றி இப்போது நாம் அடைய முடியாதென்றாலும் அவற்றின்மீது மிதமிஞ்சின ஆவல் கொண்டால், இது பேராசையாகும் (பொருளாசை என்பது அதுவே.)

*360. இதனால் உண்டாகும் தின்மைகள் எவை?*

திருட்டு, வஞ்சகம், நேர்மையற்றதனம் இவை முதலியன. மேலும், மிதமிஞ்சின இந்த ஆசை மனக்கலக்கத்தை உண்டுபண்ணி, அதிர்ப்தியையும் கஸ்தியையும் விளைவிக்கின்றது; நல்விஷயங்களில் கவனம் செல்லாமல் தடைசெய்கிறது.

### 4. காய்மகாரம் அல்லது பொறாமை

*361. காய்மகாரம் என்றால் என்ன?*

மற்றவர்களுக்கிருக்கும் நற்குணங்கள், பொருள், திரவியம், நமக்கில்லையே என்று ஏக்கங்கொண்டு, இவை பிறரிடத்தில் இருப்பதைப்பற்றிக் கஸ்திப்படுவது காய்மகாரம் என்று சொல்லுகிறோம்.

*362. காய்மகாரத்தால் வரும் கேடுகள் எவை?*

பிறர்மீது பகை வர்மம், அருவருப்புக்கொள்ளல்; அவர்களிடத்திலுள்ள நன்மையைக் கெடுத்து, எவ்விதமாகிலும் அவர்களுக்குத் தீங்குபுரியத் தேடுதல், இவை இரண்டும காய்மகாரத்தால் விளையும் கேடுகள். மனவெறுப்பையும் இது உண்டு பண்ணுகிறது.

## 5. கோபம் அல்லது வெகுளி

**363.** கோபம் என்பது யாது?

நமக்குப் பிரியமில்லாத அல்லது அருவருப்பாயிருக்கிற யாதாமொரு ஆள் அல்லது பொருளுக்கு விரோதமாய் உள்ளத்தில் எழும்பும் ஓர்வித காட்டமான உணர்ச்சி, கோபம் என்று சொல்கிறது; இந்த உணர்ச்சியினால், நமக்குப் பிரியமற்றதைத் தாக்கி, நஷ்டப்படுத்தவும் நாசம் செய்யவும் விரும்புகிறோம்.

**364.** கோபம் விளைவிக்கிற கேடுகள் எவை?

சண்டை, சச்சரவு, குரோதம், குரூரம், கொலையும் நேரிடக்கூடும்; பகை, பழி, அவதூறு, மூர்க்கம் இவைகளும் கோபத்தால் உண்டாகின்றன.

## 6. மோகம் அல்லது சிற்றின்பம்

**365.** மோகம் என்றால் என்ன?

சிற்றின்பத்தின்மீதுள்ள (சரீர இச்சை) மிருகத்துக்குள்ள ஆசை மோகம் எனப்படும்; அனுபவிக்கத் தகாதபோதும், சிற்றின்ப (சரீர போகம்) த்தை அனுபவிக்க இந்த ஆசை நம்மை ஏவுகிறது.

**366.** இதனால் விளையும் கேடுகள் எவை?

அசுசியான நினைவுகள், ரூபிகரங்களும், தனித்து அல்லது பிறரோடு செய்யும் அசுசியான கிரிகைகளுமாம். பிறர் அதே பாவத்தைச்செய்யவும், அத்தால் அவர்களுக்கும் நமக்குமே சரீரத்திலும் ஆன்மாவிலும் தீங்கு உண்டாகக் காரணமாகிறது. புத்தியை ஈனப்படுத்தி, மேன்மையான விஷயங்களின்மீது நமக்கிருக்கத்தகும் நாட்டத்தை இது கெடுக்கிறது.

## 7. போசனப்பிரியம்

**367.** போசனப்பிரியம் என்பது யாது?

அன்னபானத்தில் அளவுக்குமிஞ்சி இன்பத்தைத் தேடுவது போசனப்பிரியமாகும்.

**368.** இதனால் என்ன பொல்லாப்பு?

அளவுக்குமிஞ்சின சாப்பாடு, அசௌக்கியம், அசமந்தம், காமம் இவற்றிற்குக் காரணமாகும். அதிகமாய் (மட்டுத் தவறி) குடிப்பதால் புத்தி மயங்கி, அறிவை இழந்து, சுகத்தைக் கெடுத்து, மோகம், கோபம், சண்டை முதலான பொல்லாப்புகளுக்கு ஆளாகிறோம்.

## 8. சோம்பல் அல்லது அசமந்தம்

**369.** *அசமந்தம் என்றால் என்ன ?*

பிரயாசையைக் கண்டு விலகவும், வேலையைக்கண்டு அஞ்சவும், ஒன்றும் செய்யாமல் சும்மா இருக்கவும், காரணமாயுள்ள சரீர அல்லது புத்தியின் மந்தக்குணம், அசமந்தம் என்கிறோம்.

**370.** *இதனால் உண்டாகும் பொல்லாப்புகள் எவை ?*

கடமையை நிறைவேற்ற ஏதாவது பிரயாசை வேண்டியதிருந்தால், கடமையை அலட்சியம் செய்யவும், கஷ்டமான அல்லது இன்பகரமற்ற யாவையும் தள்ளிவிடவும் இது காரணமாகிறது. சோம்பித்திரிவதால், துஷ்ட நினைவுகளும், ஆசைகளும் எளிதில் உண்டாகும்; போசனப்பிரியம், சிற்றின்பம் இவற்றிற்குரிய சோதனைகள் இலகுவாய்க் கிளம்பும்.

## 9. வேறு சில பழக்கங்கள்

**371.** *பந்தயம், சூதாட்டம் துர்க்குணமா ?*

தன்னிலே அது குற்றமற்ற விளையாட்டுத்தானன்றி துர்க்குணமல்ல; ஆனால், வெகு சுலபமாய் துர்க்குணமாக முற்றக்கூடும்.

**372.** *பந்தயம் சூதாட்டம் எப்படித் துர்க்குணமாகக்கூடும் ?*

முதலாவது: மனதில் வேகமான கிளர்ச்சியை உண்டுபண்ணி, இன்னும் அதிகமதிகமாய் மனக்கிளர்ச்சியை நாடச்செய்கின்றது. இவ்விதமாக, அஃதோர் ஆசாபாசமாகிறது. அதாவது, இன்பத்தின்மீது கிரமமற்ற ஆவல் அல்லது லாபமடைய (கெலிக்க) மிதமிஞ்சின ஆசைப்படும் பேராசை என்னும் துர்க்குணமாகலாம்.

2-வது: தனக்கும், தன் குடும்ப சவரட்சணைக்கும் அவசரமான பணத்தை இழக்கும் ஆபத்துக்குள்ளாக்குகிறது. இது அவனுக்கும் அவன் குடும்பத்துக்கும் பெரும் பொல்லாப்பன்றோ ?

3-வது: பந்தயம், சூது எவ்வளவுக்கு ஆடுகிறானோ, அவ்வளவுக்கதிகமாய் இன்னும் விளையாட ஆசை அதிகரித்துக் கடைசியாய் அதன்மேல் ஓர்விதமான பித்துக்கொண்டவன்போல் ஆகிறான். இவ்வண்ணமாக, அம்மனிதனுக்கு வேதானுஷ்டானம், புண்ணியம் சம்பாதித்தல் முதலான மகத்தான எந்தத் தொழிலிலும் பிரியமில்லாமற்போகும்.

**373.** *சுருட்டுக்குடிப்பதும், லாகிரி பதார்த்தங்களை உபயோகிப்பதும் துர்க்குணமா ?*

சரீர சவுக்கியத்துக்கு யாதொரு இடையூறு நேராமலும், வெறிமயக்கம் கொள்ளாமலும் இருக்குமட்டும் சுருட்டுக்

குடிப்பதும் லாகிரி பதார்த்தங்களை (போதையைத் தரும் பானங்களை) உபயோகிப்பதும் குற்றமல்ல. இவற்றால், தன் ஜீவேசுக்கு மிஞ்சின செலவும் நேரிடக்கூடாது.

**374.** போதையை உண்டாக்கும் குடிவகைகளைப்பற்றி உத்தமமான ஒழுங்கு (புத்திமதி) யாது?

முதன்முதல்: இதுகாறும், அதை உபயோகித்ததில்லையென்றால், புதிதாய் அந்த வழக்கத்தை, ஆரம்பிக்காதே; அத்தால், வீண் பணச்செலவும் பாவச்சோதனையுந்தான் உண்டாகும். இரண்டாவது: அதில் கொஞ்சகாலம் பழக்கப்பட்டுப்போய், மிதமிஞ்சி குடிக்க ஆசை எழும்புகிறதாகக் கண்டால், உடனே அந்த வழக்கத்தை நிறுத்திவிடு; பிற்பாடு அதை நிறுத்துவது கடினமாயிருக்கலாம்.

**375.** நாடகம், கூத்து, (கண்காட்சி) பார்க்கப்போவது துர்க்குணமா?

உல்லாசத்தின்மீதுள்ள ஆவல் ஆசாபாசமாகி அல்லது, அதன் காரணத்தால் முக்கியமான விஷயங்களில் நோக்கமும் கருத்தும் குறைந்து, மனவேகம் குன்றிக் கடமைக்கு அலட்சியம் நேரிடுகிறதாயிருந்தால், நாடகம் கூத்துப் பார்ப்பது துர்க்குணமாகும்.

குறிப்பு:—வேதத்துக்கு அல்லது நல்லொழுக்கத்துக்கு விரோதமான அல்லது பாவச்சோதனைக்கான பாவனைகள் அந்நாடகங்களில் நடிக்கப்படுமானால், அவற்றை ஒருக்காலும் பார்க்கத்தகாது என்பது வெளிப்படை.

**376.** விளையாடவும், பந்தடிக்கவும் (இவைபோன்றவைகள் செய்யவும்) பிரியப்படுவது துர்க்குணமா?

இல்லை; தேகத்துக்குச் சௌக்கியத்தையும் புத்திக்குத் தெளிவையும் தரத்தக்க நல்விஷயம் அது. தைரியம் தன்னடக்கம் முதலான நற்குணங்கள் வர்த்திப்பதற்கு இது வெகு பிரயோசனமானது. ஆனால், சகலத்திலும் மட்டுத்திட்டம் அவசியம்; அதிகக் களைப்புக்கும் சோர்வுக்கும் இடங்கொடுத்து, நமது சரீர சௌக்கியத்துக்குத் தீங்கு நேரிடாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும். அதில் அதிக நேரம் போக்கிக் கடமையான காரியங்களை அசட்டைபண்ணத்தகாது.

**377.** கல்வி, சாமர்த்தியம், நற்பதவி (உயர்ந்த உத்தியோகம்) அடைய ஆசைப்பட்டால், அது துர்க்குணமென்கலாமா?

இந்த ஆசை எல்லாம் நல்லதுதான். ஆனால் ஆங்காரம், பேராசை, கடமையை அலட்சியம் செய்தல் முதலான துர்க்குணங்கள், இவற்றால் உண்டாகாதபடி ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்.

# 4-ம் அதிகாரம்

## நற்குணபான்மையின் வளர்ச்சி

### விசேஷ புண்ணியங்கள்

**378.** இப்போது எடுத்துக்காட்டின துர்க்குணங்களுக்கு விரோதமான புண்ணியங்கள் எவை?

தாழ்ச்சி, மனஅமைதி, பிறர்சிநேகம், சாந்தம், கற்பு, மட்டசனம், சுறுசுறுப்பு.

**379.** தாழ்ச்சி என்பது யாது?

நமக்கு மேற்பட்டவர்கள் மட்டிலும், கீழ்ப்பட்டவர்கள் மட்டிலும் தகுந்த மேரையாய் நடந்துகொள்வதற்காக, நம்மைத் தாமே நாம் உள்ளபடி நிதானித்துக்கொள்ளல் தாழ்ச்சியாகும். இது ஆங்காரத்துக்கு எதிரிடை.

**380.** இதை விவரமாய் எடுத்துக்காட்டு.

நாம் கடவுளுடைய சட்டத்துக்கும் சித்தத்துக்கும் கீழ்ப்பட்ட அவரது சிருஷ்டிகளென்றும் நமது நற்குணங்கள் முதலாய்ப் பற்பல குறைகளால் பழுதுபடுகின்றனவென்றும் நம்மிலும் உத்தமர், திறமையுள்ளோர் அநேகர் உண்டென்றும், நம்மிடமுள்ள நற்குணங்கள் நாம் சம்பாதிப்பவைகளல்ல, கடவுளால் அருளப்பட்ட நன்கொடைகள் என்பதே தகுதியென்றும், நாமே அங்கீகரிக்கச்செய்வது தாழ்ச்சியின் இயல்பு. ஆகையால், மெய்யான தாழ்ச்சியுள்ளவர்கள் தங்களுக்கு மேலானவர்களை அவமதியார், தங்களுக்குக் கீழானவர்களைப் புறக்கணியார்; சகலரையும் மேரை மரியாதையுடன் நடத்துவார்கள்.

**381.** அமைதி என்றால் என்ன?

நம்மிடம் உள்ளதையும், நேர்மை நியாயமாய் நாம் அடையக்கூடியதையுங்கொண்டு மனதிர்ப்தி அடைவதே அமைதி என்னப்படும். நாம் அடையக்கூடாத பிறர் பொருளின்மேல் இச்சைப்படாவண்ணம், இந்தப் புண்ணியம் நம்மைத் தடுக்கிறது. இது பேராசைக்கு எதிரிடையானது.

**382.** உதாரகுணமும் பேராசைக்கு எதிரிடையானது என்கலாமா?

நம்மிடம் இருப்பதிலும் அதிகமாய் அடைய விரும்புவதற்குப் பதிலாக, நம்மிடம் உள்ளதையுமே பிறருக்கு ஈயவும், நாம்

மனதாயிருக்கிருேமென்று உதாரம் பொருள்படுமாதலால் பேராசைக்கு இது எதிரிடை என்பது வெளிப்படை.

383. பிறர் சிநேகம் யாது ?

பிறரிடமுள்ள நன்மையைப்பற்றி அழுக்காறுகொள்ளாமல், அவர்களுக்குண்டாகும் லாபம் அதிர்ஷடத்தைப்பற்றிச் சந்தோஷித்து, அவர்களுக்கு நன்மை செய்யத் தேடுவது பிறர் சிநேகக் குணம். இது காய்மகாரத்துக்கு எதிரானது.

384. சாந்தம் என்பது என்ன ?

சாந்தம் (தயாளம், பொறுமை) என்பது, கோபம் கொடுமைக்கு இடங்கொடாமலும், பிறரோடு முரட்டுத்தனமாயிராமலும், நமக்குப் பிரியமற்றதைப் பொறுமையுடன் சகித்துக் கொள்ளல் என்றர்த்தமாகும்.

385. கற்பு என்பது யாது ?

நினைவு, வாக்கு, கிரிகையில், சிற்றின்ப சம்பந்தமான ஆசை கடவுளுடைய சித்தத்துக்கும் கருத்துக்கும் விபரீதமாய்ச் செல்லாமல், அதைத் தடுத்து அடக்குவதே கற்பெனப்படும்.

(விவாகத்தைப்பற்றிய கடமைகள் 5-ம் பாகம் காண்க.)

386. மட்டசனம் யாது ?

நமக்கு நன்மைசெய்யக்கூடிய அளவுக்கு மிஞ்சி அன்னபானம் அருந்தாமல் தேக சௌக்கியத்துக்கு அவசரமானமட்டும் அருந்துவது மட்டசனம் என்கிருேம்.

387. சுறுசுறுப்பு என்ருல் என்ன ?

சுறுசுறுப்பு முயற்சி, (ஊக்கம் என்பதும் ஒன்றே) என்ருல், நமது பிழைப்புக்கானவற்றை தேடிக்கொள்ளவும், பிறருக்கு உதவிபுரியவும், நமது கடமையைச் சுமுத்திரையாய் நிறைவேற்றவும் அவசரமான வேலை செய்து உழைக்க மனதாயிருக்கிருேமென்றும், சோம்பல், அசதி, அசமந்தத்தால் எந்த நற்கிரிகையையும் அலட்சியம் செய்யமாட்டோமென்றும் அர்த்தப்படும்.

388. இவை தவிர, வேறு புண்ணியங்கள் உண்டா ?

இதர புண்ணியங்கள் யாவும், மேற்கூறியவைகளில் அடங்கியுள்ளன.

# 5-ம் அதிகாரம்

## சாங்கோபாங்கத்தையடைய வருந்தியுழைத்தல்

### 1. நல்லது. மேலானது. உத்தமமானது

**389.** நாம் வருந்தி அடையக்கூடியதில் நற்குணபான்மையிலும் சிறந்தது ஏதாவது உண்டா?

உண்டு: நற்குணபான்மையில் மேலானது, உத்தமமானது என்ற சிறந்த நற்குணபான்மைகளும் உண்டு.

**390.** உத்தமமான மனிதன் எத்தகையவனுயிருக்கத்தகும்? மனிதரில் உத்தமமானவன் எப்பேர்ப்பட்டவனுகும்?

சகல பாவங்களையும் விலக்கிக் கடவுளுடைய கற்பனைகளையெல்லாம் அனுசரிப்பதுமன்றி, தனது தத்துவங்களையெல்லாம் உத்தமமானவிதமாய் உபயோகித்து, அற்ப சொற்ப குற்றங்குறைகளையும் தவிர்த்து, மனிதனுல் சாத்தியப்படும் உன்னத நற்கிரிகை செய்துவருபவன் உத்தமன் எனப்படுவான்.

**391.** எவனுகிலும் உத்தமனுவது சாத்தியப்படுமா?

எவனும் தனக்குள்ள சத்துவத்தைக்கொண்டு உத்தமனுக முடியாதென்பது திண்ணம். ஆகிலும் அதற்காக வருந்தி உழைத்து மென்மேலும் புண்ணியத்தில் வர்த்திக்க யாவராலும் கூடும்.

**392.** சாங்கோபாங்க (உத்தம) த்தை அடைய எவ்விதம் முயல்வது?

உத்தம மனிதன் தன்மையை ரூபிகரத்தின் வழியாய்ச் சிந்தித்து, அத்தன்மையை அடைய விரும்புவதினுல் ஆகும்.

**393.** இதை இன்னும் அதிகத் தெளிவாய்க் கூறு.

நாம் ஏதாவது ஒரு புண்ணியத்தில் தேர்ச்சி அடைய விரும்பினுல், அப்புண்ணியத்தில் சிறந்திலங்கிய ஓர் மகானை நாம் மாதிரிகையாக வைத்துக்கொண்டு, அதன் பிரகாரம் எப்போதும் நடக்கப் பிரயாசைப்படத்தகும்.

**394.** உத்தம புருஷர் ஆவதற்கு இயல்பில் நமக்கு ஆசை உண்டா?

உண்டு: "உற்றவிடத்து உன்னதமேற் சிந்தைகொள்ளவாம்" என்பது ஒரு மேற்கோள்.

**395.** இதன் பொருள் என்ன?

நமது இனத்தார் மகத்தான புண்ணியங்களும் நற்குணங்களும் உள்ளோரென்று கண்டால், அவர்களுடைய புண்ணியத்தை மெச்சிப்புகழ்ந்து, அவர்களைப்போல் நாமும் ஆகும்படி ஆசைகொள்ளுகிறோம்.

396. இந்த ஆசை உண்டாவதற்குக் காரணம் என்ன?

கடவுளே, இதை நமது மனதில் பதித்திருக்கிறார்.

397. இதற்கு என்ன காரணம்?

கடவுள் • உத்தம நன்மைத்தனமுள்ளவர்; கூடின மட்டும் (நம்மால் இயன்றமட்டும்) அவரைப்போல் நாம் இருக்க வேணுமென்பது, அவருடைய விருப்பம். நம்மை உத்தமராய் உண்டாக்கவில்லை; ஆனால், நாம் அதற்காக வருந்தி உழைக்க வேண்டுமென்று நம்மை இவ்வுலகில் வைத்திருக்கிறார், நமக்குச் சாங்கோபாங்கத்தின்மேல் விருப்பம் உண்டாகும்படி, நம்மிலும் சிறந்ததை நேசித்தாசிக்கும்படியான தேட்டத்தை நமது ஆன்மாவில் அமைத்திருக்கிறார்.

398. சாதாரணமாய் ஒருவன் செய்யத்தக்கதென்ன?

(1) தன்னிடம் ஏதாவது குற்றங்குறை இருப்பதாகக் கண்டால், அது பாவம் இல்லாவிடினும், அதைத் தவிர்க்கத் தன்னாலியன்றமட்டும் பிரயாசைப்படவேண்டும்; (2) ஓர் நற்கிரிகை செய்யச் சமயம் வாய்க்கும்போது, அதைச் செய்யத் தனக்குக் கடமை இல்லாவிடினும், அதைச் செய்யத்தகும்; (3) எது விஷயத்திலும் மேலானதையே செய்து பழகக்கடவான்.

399. சில உதாரணங்கள் கூறி, இதை விளக்கிக்காட்டு.

(1) நாகரீகமின்மை, மூர்க்கம், முரட்டுத்தனம், கயமை, சுயநலம் பாராட்டல், அசமந்தம், அஜாக்கிரதை இவற்றை விலக்குதல்.

(2) பிறர் நம்மை கேட்காமுன் அவர்களுக்கு உதவி சகாயம் செய்தல்; பிறர்பொருட்டு நமது சொந்த சவுகரியத்தையும் கைவிடுதல்; பரோபகரமான எந்தத் தொழிலும் செய்ய ஏற்படுவது; பலவீனரையும் சத்தியற்றோரையும் ஆதரித்தல்; பொறுமையுடன் சகல துன்ப துயரங்களையும் சகித்துக்கொள்வது நம்மால் இயன்றளவு கடவுளைத் துதித்து ஆராதித்தல்... முதலியன.

(3) குற்றம் செய்த பிள்ளையை நீதிப்பிரகாரம் தண்டிப்பது ஒருக்கால் நலமாயிருக்கும்; வேறு சமயம், இரக்கப்பட்டு மன்னிப்பது தகுந்ததாயிருக்கும்...வியாதிக்காரரைக் கவனிக்கும்படியாக, ஒருவனுக்குச் சம்பளம் கொடுத்து உதவுவதிலும், தானே அந்த வியாதிக்காரரைப் பேணி, மருந்து கொடுத்துப் போஷிப்பது சில சமயங்களில் சிறந்த பிறர்சிநேகக் கிரிகையாகலாம். பிறர் சொல்வதைப் பொருட்படுத்தாமல், தன் தீர்மானப்படியே நடப்பது சில வேளைகளில் நலம், வேறு சில வேளைகளில், பிறர் சொல்வதைக் கேட்டு நடப்பது அதிக நலமாயிருக்கலாம். ஆகையால், சமயத்துக்கேற்றவாறு, எது அதிக சிறந்ததோ, அதைச் செய்.

## 2. பிரயாசைப்படுவதினுல் வரும் பலன்

**400.** உத்தமனுவது அசாத்தியமாயின் அதற்காகப் பிரயாசைப்பட்டு என்ன பிரயோசனம்?

வெகு பிரயோசனமுண்டு; உத்தமனுகாவிட்டாலும் நாளுக்குநாள் அதிக நல்லவனுகலாம், அதிக பாக்கியமாயிருக்கலாம்.

மானிடச் சிறப்பெல்லாம் சிறந்ததை நோக்கிச் செல்வதே; சித்திபெருவிடினும், அஃதோர் முயற்சி; முயற்சியுடையோர் இகழ்ச்சியடையார். அந்தியநாள்மட்டும் முயற்சிப்பதே நமது தொழில்.

**401.** சிறந்ததை நோக்கிச் செல்வதால், கடவுளுடைய கட்டளையை அநுசரிப்பது எளிதாகிறதா?

ஆம்; ஏனெனில், முதலாவது: நன்மையின்மீதுள்ள சிநேகம் அதிகரிக்குமாகில், தின்மையை நேசியான், தின்மைக்கு இடம் கொடான். இரண்டாவது: புண்ணியம் வீரியமல்லவா; ஆகையால் புண்ணியத்தில் பயிற்சி அடைகிற அளவு ஒருவன் சோதனையை ஜெயிப்பதற்கான தைரியமுள்ளவனுவான்.

**402.** உத்தம சாங்கோபாங்கத்தை நாடிப் பிரயாசைப்படுகிறவனும் பாவத்தில் தவறிவிடக்கூடுமா?

கூடும்; உத்தம சாங்கோபாங்கத்தை நாடி நடக்கும் போதுதானே, மெத்த அவலட்சணமான பாவத்தில் தவறி விழக் கூடும்.

**403.** இது என்ன ஆச்சரியம்?

ஆச்சரியமானதொன்றுமில்லை; உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகுமா? அதுபோல், மனிதன் எவ்வளவுதான் உன்னதமான கதியை நோக்கிச் சென்றாலும், மனிதசுபாவம் அவனைவிட்டு நீங்காது; அவனுடைய ஆசாபாசங்களும் அவனுடன் எப்போதும் இருக்கின்றன. ஆகையால், திடீரென்று அதி உக்கிரமமான சோதனை வந்து அவனைத் தாக்கினுல், அவன் அதற்குச் சம்மதிக்கக்கூடும்.

**404.** இதற்கு வேறு ஏதாவது காரணம் உண்டா?

சிலர், மெய்யான புண்ணியத்தில் நிலைநிற்கும் சாங்கோபாங்கத்தை நாடாமல், ஏதோ ஒன்றைத் தங்கள் மனேரூபிகரத்தில் விசித்திரமாய் நினைத்துக்கொண்டு அதின் பிரகாரம் நடக்கப் பார்க்கிருர்கள். இப்படி மனோராச்சியம் செய்துகொண்டு, முக்கியமான விஷயத்தை மறந்துபோகிருர்கள்.

**405.** முக்கியமான விஷயம் எது?

கடவுளுடைய சட்டத்துக்குமாருக, மனேகற்பிதமான ஏதோ சிறந்த நிலையை உனக்கு மாதிரிகையாகப் பாவித்துக்கொள்ளாது, கடவுளின் சட்டத்தை அநுசரிப்பதில் முதன்முதல்

ஜாக்கிரதையாயிருந்து, அதன்பின் சிறந்த புண்ணியங்களைத் தேடலாகும்.

**406.** நாம் மாதிரிகையாகப் பாவித்துக்கொள்வது, உண்மையானது (வீண் மனோராச்சியம் அல்ல) என்றறிவதெப்படி ?

இவ்வித புண்ணியங்களைப் படித்தறிந்து, அவற்றைக் கொண்டு நமக்கு முன்மாதிரிகையை அமைத்துக்கொள்ள வேண்டும்.

### 3. நிலைகொள்வதின் அவசியம்

**407.** உத்தம மாதிரிகையைப் பின்பற்றி நடக்கும்போது பாவத்தில் தவறி விழுந்தால், உத்தம சாங்கோபாங்கம் தனக்கல்லவென்று விட்டுவிடலாமா ?

ஒருக்காலும் அவ்விதம் விட்டுவிடக்கூடாது. தனது பலவீனத்தை இதனால் கண்டறிந்து, இன்னும் அதிகமாய் பிரயாசப்பட வேண்டும்.

**408.** நாம் அடைந்த புண்ணியத்துக்குத்தான் சம்பாவனையா ? அல்லது நாம் பட்ட பிரயாசைக்கும் சம்பாவனை கடவுள் கொடுப்பாரா ?

புண்ணியத்துக்கும், அதைச் சம்பாதிப்பதற்காக நாம் செய்கிற பிரயத்தனத்துக்கும் ஏற்றவாறு சம்பாவனை அளிப்பார்.

**409.** சாங்கோபாங்கத்தை அடையப் பிரயாசைப்படுவது எல்லாருக்கும் ஒரே (சீராக) விதமாய்க் கடினமாய்த் தோன்றுமா ?

சிலருக்குக் கொஞ்சம் எளிதாகவும், வேறு சிலருக்கு அதிகக் கடினமாகவுமிருக்கும்.

**410.** சாங்கோபாங்கத்தை அடையப் பிரயாசைப்படுவது ஒருவனுக்கு இலகுவாயிருந்ததினால் அவன் சற்றேறக்குறைய உத்தமனாகிவிட்டான். வேறொருவனுக்கு வெகுகடுமையாயிருந்ததால், அவ்வளவு புண்ணியத்தேர்ச்சி அடையவில்லை. இவர்கள் இரண்டுபேரில், யாருக்கு அதிக சம்பாவனை கிடைக்கும் ?

இதற்குத் தகுந்த மறுமொழி பகர்வது எளிதல்ல. எப்படியாகிலும் பிரயாசைக்குத் தகுந்த சம்பாவனை இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

**411.** கடவுள் சம்பாவனை அளிப்பதில், நாம் அடைந்த புண்ணிய தேர்ச்சியையல்ல நாம் அதற்காகப் பட்ட பிரயாசையைத்தான் பிரமாணமாகக்கொள்கிறார் என்று சொல்லலாமா ?

அவ்விதம் சொல்வதுதான் நியாயமாகத் தோன்றுகிறது.

**412.** இந்த நினைவு, நம்மைத் தைரியப்படுத்தக்கூடுமா ?

சந்தேகமில்லாமல், இது நமக்குத் தைரியம் கொடுக்கத்தக்கது.

---

# நான்காம் பாகம்

## கடவுள்மீதும், நம்மட்டிலும் பிறர்மட்டிலுமுள்ள கடமைகள்

**413.** நம்முடைய தத்துவங்கள் யாவும் செவ்வே உபயோகிப்பது நீங்கலாக, தேவசட்டத்தை (ஜீவியசட்டத்தை) அநுசரிப்பதற்கான வேறு எந்த ஒழுங்காவது உண்டா?

கடவுளுக்கும், நமக்கும், பிறருக்கும் தகுந்ததும், நியாயமுமானதைச் செய்துவருவதே வேறொரு ஒழுங்காகும்.

## 1-ம் அதிகாரம்

### கடவுள்மீது நமக்குள்ள கடமைகள்

**414.** கடவுள்மீது நமக்குள்ள கடமைகள் எவை?

அவரை அறிதல், சிநேகித்தல், ஆராதித்தல் அவருக்குக் கீழ்ப்படிதல், என நான்கு வகைப்படும்.

#### 1. அவரை அறிந்து சிநேகித்தல்

**415.** கடவுளைப்பற்றி நாம் அறியவேண்டியதென்ன?

ஏற்கனவே அவரைப்பற்றிச் சிற்சில விஷயங்கள் நமக்குத் தெரியும்; ஆனால், நம்மாலியன்றமட்டும் இன்னும் அதிகமாய் அறியப் பிரயாசைப்படவேண்டும்.

**416.** கடவுளைப்பற்றிய அறிவை விர்த்திபண்ணுவது எப்படி?

அவரைப்பற்றி அறிந்தவர்களோடு புழங்குவதாலும், அவரைப்பற்றி எழுதப்பட்ட புஸ்தகங்களை வாசிப்பதாலும்; நாம் படித்தவற்றின்மேல் தியானிப்பதாலும் நமது அறிவை விசாலிக்கலாம்.

**417.** கடவுளை அறிவது நமக்குக் கடமையாயிருப்பதேன்?

*1-வது:* உண்மையையும் நன்மைத்தனத்தையும் அறிவதே நமது புத்தியின் கதி; உன்னத உண்மையும் நன்மைத்தனமும் பொருந்தியவர் கடவுள் ஒருவரே; ஆகையால் அவரை அறிவது அவசியம்.

*2-வது:* கடவுள் நம்மை உண்டாக்கிக் காப்பாற்றி நம்மீது மிகுந்த பற்றுதல் கொண்டிருக்கிற நமது எஜமானன்;

ஆகையால், நாமும் அவர்மீது பற்றுதலுள்ளவர்களாயிருப்பது ஙியாயம்; இதற்காக முதன்முதல் அவரை அறிவது அவசியம்.

3-வது: நாம் கடவுளது சித்தப்பிரகாரம் நடக்க வேண்டியவர்கள். ஆகையால், அவர் சித்தம் என்னவென்றறிய, அவரை அறியவேண்டும்.

4-வது: நமது பூரணபாக்கியமாகிய கடைசிக் கதியை அடைவதற்கு அவரை அறிவது அவசியம்; ஏனெனில், அவரை அறிந்து அவரைச் சிநேகிப்பதே நமது பூரண பாக்கியமாகும்.

**418.** அவரை ஏன் நேசிக்கவேண்டும்?

நன்மையானதைத் தேடி, அதை நேசிப்பதே நமது மனதின் தொழில்; கடவுள் சர்வ நன்மையிலும் சிறந்தவர். அவரே நன்மைத்தனம் என்றிருப்பதால், அவரை நேசிக்க வேண்டும்.

**419.** கடவுளை நாம் எப்படி நேசிக்கக்கூடும்?

அவரையும், அவருடைய இலட்சணங்களையும் அறிந்து அவற்றைத் தியானித்து, அவர் தம்மிலே எவ்வளவோ நன்மைத் தனமுள்ளவரென்றும் நம்மீது எவ்வளவு கருணையுள்ளவரென் றும் கண்டுகொள்வதால், அவர்மட்டில் நமக்கு இயல்பாகவே சிநேகம் ஏற்படும்.

**420.** கடவுளை நாம் எவ்வளவு நேசிக்கவேண்டும்?

அவர் சகலத்திலும் உத்தமமானவரானதுபற்றி மற் றெந்த வஸ்துவையும்விட அவரை அதிகமாய் நேசிக்கவேண்டும்.

**421.** கடவுளைச் சிநேகிப்பதைப் பார்க்க, இதர வஸ்துக் களைச் சிநேகிப்பது எளிதல்லவா?

இதர வஸ்துக்கள் நமதருகே இருக்கின்றன; அவற்றை நாம் காணவும் தொடவும், அவை நமது அன்பைக் கவர்ந்துகொள்கின்றன என்று, நாம் உணரவும் கூடுமாதலால் அவற்றை நேசிப்பது சந்தேகமில்லாமல் வெகு எளிதுதான்; கடவுளை நாம் பார்க்கவும் முடியாது, தொடவும் முடியாது; ஆகையால் அவரைச் சிநேகிப்பது அவ்வளவு எளிதல்ல.

**422** கடவுள் நமது அன்பைக் கவர்ந்துகொள்கிறார் என்று நாம் உணராதிருக்க, மற்ற வஸ்துக்களைவிட அவரை அதிகமாய் சிநேகிப்பது கூடாத காரியமல்லவா?

இல்லை; நமது உணர்ச்சிகளால் அவரைச் சிநேகிக்க வேணுமென்று கடமையல்ல. நமது புத்தியையும் மனதையும் கொண்டு மற்றெந்த வஸ்துக்களையும்விட அவரை அதிகமாய் சிநேகிக்கவேண்டும். அதெப்படியெனில்: மற்ற வஸ்துக்களின் மட்டில் நமக்குள்ள சிநேகம் கெட்ட சிநேகமாயின், கடவுளுக்காக

அதை விட்டுவிடவேண்டும்; ஒன்றில் கடவுளை அல்லது வேறெதையாவது கைவிடவேண்டியதாயின், மற்ற யாவையும் விட்டுவிட்டுக் கடவுளையே நாம் கைக்கொள்ளவேண்டும்.

## 2. ஆராதனை, வணக்கம்

**423.** வழக்கமாய், கடவுளைச் சிநேகிப்பதற்கு, நாம் செய்ய வேண்டியதென்ன?

குறிப்பிட்ட வேளைகளில் அவரை ஆராதித்து வணங்கி (ஆராதனை செலுத்தி) எப்போதும் அவருடைய கட்டளைகளை அநுசரிப்பதே, அவரைச் சிநேகிப்பதற்கான வழி.

**424** அவரை ஆராதிப்பதெப்படி?

அவரை வியப்புடன் சிந்தித்து, நமஸ்கரித்து, துதித்துக் கொண்டாடி அவர் நமக்குச் செய்துவரும் நன்மைகளுக்காக அவருக்கு நன்றிசெலுத்தி, நமக்கு அவசரமான உதவி சகாயங்களை அவரிடமிருந்து மன்றாடுதலாகும்.

**425.** இவ்விதம் நாம் எப்போது செய்யத்தகும்?

பிறரோடு சேர்ந்து சில சமயங்களில் பகிரங்கமாகவும் வேறு சமயங்களில், தனித்து நாமாகவே செய்வதுண்டு.

**426.** பகிரங்கமான ஆராதனை எவ்வகைப்பட்டதாயிருக்க வேண்டும்?

எந்த வகை தகுந்ததும் உண்மையானதும் கடவுளுக்குப் பிரியமானதுமென்று, நாம் நம்புகிறோமோ, அதை உபயோகிக்கத் தகும்.

**427.** தனி ஆராதனை செய்யவேண்டியதெப்போ?

நாம் நித்திரையைவிட்டெழுந்திருக்கும்போதும், படுக்கப் போகும்போதும், துன்பம் சோதனை நேரிடும் சமயங்களிலும் ஜெபிக்கத்தகும்.

**428.** நாம் நெடுநேரம் ஜெபம் செய்வது அவசியமா?

அவசியம் இல்லை; அஜாக்கிரதையாகவும், பழக்கத்தை முன்னிட்டும் நெடுநேரம் ஜெபிப்பதைவிட, கவனத்தோடும், ஜாக்கிரதையாகவும், சிநேகபற்றுதலுடனும், சிறிதுநேரம் கடவுளைப்பற்றித் தியானிப்பது சிறந்த ஜெபமாகும்.

**429.** நமது ஜெபங்களில், நாம் சொல்லத்தக்கதென்ன?

பின்வருமாறு சொல்லத்தகும்:—

(1) ஓ; என் கடவுளே, நீர் சர்வ நன்மைத்தனமுள்ளவரும், எனக்கு நன்மைபுரிகிறவருமாயிருக்கிறதினால், உம்மை

நான் விசுவசித்து, நம்பி, சகலத்தையும்விட உம்மையே நேசிக்கிறேன்.

(2) ஆ! என் கடவுளே, நான் உம்மை ஆராதித்து வணங்கி நமஸ்கரிக்கிறேன். எனக்கு அவசியமான காரியங்களை எனக்குத் தந்தருளும்.

(3) "காலையில், விசேஷமாய் இந்த நாளில் நான் என் கடமையைச் செய்து, சகல சோதனைகளையும் ஜெயித்துப் பாவத்தை விலக்கும்படி எனக்கு ஒத்தாசையாயிரும்" என்று சொல்லத்தகும்.

இரவில் சொல்லத்தக்கது: "இன்று எனக்குச் செய்த உபகாரங்களுக்கு நன்றியறிந்திருக்கிறேன்."

பாவத்தில் தவறி விழுந்திருப்பாயாகில், "என் பாவங்களுக்காகத் துக்கப்படுகிறேன், இனிமேல் அவற்றைச் செய்வதில்லையென்று பிரதிக்கினை பண்ணுகிறேன். நான் செய்த பாவங்களை மன்னித்து, இனிமேலாக அவற்றைச் செய்யாதபடி எனக்கு உதவிபுரிந்தருளும்" என்பதைச் சேர்த்துச் சொல்வாயாக.

(4) பாவச் சோதனை நேரிடும்போது, "நான் உமக்கு உகந்த பிள்ளையாயிருக்க உதவிபுரியும்; இப்பாவத்தில் விழாதபடி என்னைத் தற்காத்தருளும்" என்று மன்றாடி, உன் மனதை உறுதிப்படுத்திப் பாவத்துக்குக் காரணமானதைவிட்டு விலகி, வேறெதாவது செய்யப் பார்.

நித்திரை போகுமுன், உள்ளப் பரிசோதனை செய்வது மிகவும் பிரயோசனமானது. நம்மிடமுள்ள துர்நாட்டங்களின் மேல் ஜெயங்கொள்ளவும், துர்வழக்கங்களை நீக்கவும், புண்ணியம் சம்பாதிக்கவும், நமது அநுதினக் கிரிகைகளைக் கிரமமாய்ச் செய்துவரவும், இந்த அப்பியாசம் வெகு உத்தமமான வழி. ஆகிலும், நாம் செய்த குற்றங்குறைகளைக் கண்டுபிடிப்பது மாத்திரம் போதாது. உள்ளப் பரிசோதனையால் மெய்யான பலன் அடையவேணுமாகில், நம்மிடம் இருப்பதாக நாம் கண்டுணர்ந்த குற்றங்களை அருவருத்து, அவற்றை இனிமேல் செய்வதில்லை என்கிற உறுதியான தீர்மானம் செய்துகொள்ளவேண்டும். (Father Avila).

[சில விசேஷித்த ஜெபங்களின் தொகுதியை இப்புத்தக அநுபந்தத்தில் காண்க.]

**430. கடவுளுக்குக் கீழ்ப்படிந்து ஊழியஞ் செய்யவேண்டும் என்கிற கடமை எதில் அடங்கியுள்ளது?**

சகல பாவங்களையும் விலக்கிக் கடவுளுக்கும், பிறருக்கும், நமக்கும் உரித்தானதைச் செய்வதில் இந்தக் கடமை அடங்கியிருக்கிறது.

---

# 2-ம் அதிகாரம்

## நம்மீது நமக்குள்ள கடமைகள்

### சுய ஆளுகை (அடக்கம்), சுயபரிபாலனம்

**431.** நம்மீது நமது கடமைகள் எவை?

நமது தத்துவங்களை எல்லாம் கிரமமாய் உபயோகித்து, துர்ப்பிரயோகம்பண்ணுமல் கடவுள் நமக்கருளிய சுபாவத்துக்கு மாறுனதொன்றும் செய்யாமல், நமது ஆன்மாவுக்கும் சரீரத்துக்கும் யாதொரு மோசமின்றித் தற்காத்தல் நமது கடமை.

**432.** நமது தத்துவங்களைப்பற்றிய கடமை யாது?

புத்தி, நினைவு, ஆசை, இந்திரிய சேஷ்டை, நாக்கு முதலான அவயவங்களின் சேஷ்டைகள், ஆசாபாசங்கள் யாவையும், அவற்றுல் பாவத்துக்குக் காரணம் உண்டாகாமலும் நமது கடமைகளை அலட்சியம் செய்ய நேரிடாவண்ணமும், கட்டுப்படுத்தி அடக்கி ஆளுவது நமது கடமை.

**433.** நமது உயிர் சரீர சுகம் இவற்றின்மீது ஏற்பட்டுள்ள கடமை யாது?

உயிருக்கும் சரீர சௌக்கியத்துக்கும் ஆபத்து விளைவிக்கக்கூடிய அல்லது உயிரையே மாய்க்கக்கூடிய எதையும் செய்யாமல், உயிரையும் சௌக்கியத்தையும் காப்பாற்றும்வண்ணம், தகுந்த ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்.

**434.** சில உதாரணங்களால் இந்தக் கடமையை விளக்கிக் காட்டு.

(1) எது காரணம்பற்றியும் தற்கொலைபுரிவது தகாது; ஏனெனில், கடவுள் விரும்புமளவு, நாம் அவருக்கு ஊழியஞ் செய்வதற்காக, நமக்கு உயிரைத் தந்தார். நம் இஷ்டம்போல், அந்த உயிரை மாய்க்க உத்திரவளிக்கமாட்டார்.

(2) நமது உயிரை அல்லது சரீர சௌக்கியத்தைக் காப்பாற்றுவதற்கு அவசரமானுலன்றி, நமது சரீரத்தின் எந்தப் பாகத்தையும் அவயவத்தையும் துண்டிக்கக்கூடாது.

(3) தேவசிநேகத்தால் அல்லது பிறர்சிநேகத்தால் ஏவப்பட்டுப் புண்ணியமாயிருக்கக்கூடிய சமயம் தவிர, வேறு விதமாய் உயிருக்கு மோசம் வருவிக்கத்தக்க ஆபத்துக்கு நாம் இடம் கொடுக்கத்தகாது.

(4) சரீர சௌக்கியத்தைக் கெடுக்கக்கூடுமானவற்றை விலக்கவேண்டும். நமது சக்திக்கு மிஞ்சின சரீரப் பிரயாசை, வேலை செய்யத்தகாது; அவசியமான சாப்பாட்டையும், தேகாப்பியாசத்தையும் அலட்சியம் செய்யலாகாது. மோசகரமான இன்ப போகங்களைத் தவிர்க்கவேண்டும். 'அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு' என்பதையுணர்ந்து, மிதமிஞ்சின அன்னபானம் அருந்தலாகாது. ஆபத்துக்குரிய லாகிரி பதார்த்தங்களை உபயோகிக்கலாகாது.

**435.** அளவுக்கு மிஞ்சி தேகாப்பியாசம் செய்வதும், வேட்டையாடுதல், குதிரைச் சவாரிசெய்தல், நீந்தி விளையாடல் இவை முதலான அப்பியாசங்களாலும் ஆபத்துக்குள்ளாவதும், வியாதி பலப்பட்டு உயிர் மோசத்துக்கு வருமட்டும், அதைக் கவனியாது அலட்சியம் செய்வதும், தன் திரேகக்கூறுபாட்டுக்கு ஒத்துப்போகாத உணவை அருந்துவதும் இவை யாவும் பாவமா?

இவை ஆபத்துக்குரியன; பொல்லாப்பு நேரிடும் என்று தெளிவாய் ஒருவன் முன்னதாக அறிந்திருப்பானாகில், இவற்றால் பாவம் விளையக்கூடும், ஆனால், சாதாரணமாய் ஜனங்கள் ஆபத்து, மோசத்தைப்பற்றி நினைப்பதே இல்லை; ஆகையால் அநேக சமயங்களில் மடமை அல்லது அறியாமை ஆகுமொழிய பாவமாகாது. யாதொரு காரியம் பாவம் ஆகவேணுமானால், அதைச் செய்யுமுன் அல்லது செய்யும்பொழுதாகிலும், அது பாவம் என்று அறிந்திருப்பது அவசியம்; அல்லாவிடில், பாவமாகாது.

**436.** ஒருவனுக்கு நல்ல உத்தியோகம் கிடைத்திருக்கிறது; ஆனால், அது அவனுடைய சுகத்துக்குக் கெடுதியாயிருக்கிறது, அதற்காக அந்த தொழிலை (உத்தியோகத்தை) விட்டுவிடக் கடமையா? அல்லது தனது உயிரையும், சௌக்கியத்தையும் காப்பாற்றுவதற்காகத் தேர்ந்த வைத்தியர்களை வெகு திரவியம் செலவழித்து வரவழைக்கவும், மிகுந்த வேதனைக்கும் பணச் செலவுக்கும் வழியான சத்திரம் வைக்கவும் கடமையா?

அசாதாரணமான உபாயங்களை உபயோகிக்கவும் மிகுந்த பணச்செலவுகொள்ளும் வழிகளைத் தேடிக்கொள்ளவும், ஒருவனுக்கும் கடமையில்லை. இலகுவாய்த் தேடிக்கொள்ளக் கூடுமான சாதாரண உபாயங்களை உபயோகிக்கத்தான் கடமையுண்டு.

**437.** நமது பிழைப்புக்காக வேலை செய்யக் கடமையா?

நமக்கும் நமது குடும்பத்துக்கும் சவரட்சணைக்குப் போதுமான திரவியம் பொருளைத் தேடிக்கொள்ளவும், இன்னும் வயோதிப காலத்துக்கும் வியாதி சமயங்களில் உதவுவதற்கும்

ஆனமட்டும் சம்பாதிக்க வேலை செய்து உழைப்பது நமது கடமை தான். ஏனெனில், இதைச் செய்யத் தவறினால், பிறருக்கு நஷ்டம் உண்டுபண்ணி அனுவசியமாகவும் அநியாயமாகவும் பிறர் உதவியை நாட நாம் இடம் பண்ணிக்கொள்வோம்.

438. விவாகம் செய்யக் கடமையா?

விவாகமின்றிப் பாவ வழியைத் தவிர்க்க இயலாதவர்கள் கூடியசீக்கிரம் விவாகம் செய்யக் கடமைப்பட்டிருக்கிறார்கள். பாவம் விளையும் என்கிற பயமில்லையாகில், தங்கள் இஷ்டப்பிரகாரம் எப்போதாவது செய்துகொள்ளலாம். அல்லது ஒருக்காலும் செய்யாமலே இருந்துவிடலாம்.

[விவாக விஷயமாயுள்ள கடமைகள் 5-ம் பாகம் காண்க.]

439. நம்மாலியன்றமட்டும் நமது தத்துவங்கள் யாவையும் நற்பிரயோகம் செய்யக் கடமையா?

கடவுளுக்கும், பிறருக்கும், நம்மட்டிலுமுள்ள கடமைகளை நிறைவேற்றவும், பாவத்தை விலக்கவும் போதுமான அளவு, அவைகளை உபயோகிக்கக் கடமையுண்டு. இதற்குமேல், நமக்குக் கடமை இல்லை என்கிலும், நம்மாலியன்றமட்டும் பூரணமாய் நமது தத்துவங்களைப் பிரயோகம் செய்வது நலம்.

440. நமது நடை உடை பாவனையில், சுத்தமாகவும் நாகரீகமாகவும், மேரை மரியாதையாகவும் இருக்கவேணுமென்று கடமையா?

சரீர சுகத்துக்கும், பிறருடைய சௌகரியத்துக்கும் அவசரமான அளவு இவைகளை அநுசரிப்பது ஓர் கடமைதான். இது சுயமதிப்பு, சுய அடக்கம், குணபான்மை இவற்றிற்கும் உதவியாயிருக்கும். இத்தகைய விஷயங்களில் அஜாக்கிரதையாயிருத்தல், மெள்ள மெள்ளச் சகல காரியங்களிலும் அஜாக்கிரதையை விளைவித்து நமது குணபான்மையை இழிவுபடுத்திவிடும்.

குறிப்பு:—இதே பொருள்பட, "சுத்தம் தெய்வத் தன்மைக்கு அடுத்த படியில் இருக்கிறது" என்ற ஆங்கிலேய பழமொழி வழங்குகிறது. (Cleanliness is next to Godliness.)

அசுத்தமாய், நாகரீகமின்றித் துப்புக்கெட்டவன் துஷ்டனல்ல; புல்லத்தனமான கீழ்குலத்தான் எனப்படுவான். சுத்தமாகவும் நாகரீகமாகவும் இருக்கத் தகுந்த வழி தெரிந்திருந்தும், சோம்பல், அல்லது துஷ்டத்தனத்தால், அதை அலட்சியம் செய்வது குற்றமாகும்.

---

## 3-ம் அதிகாரம்

## பிறர்மட்டில் நீதியாயிருப்பது

**441.** *பிறர்மீது நமது கடமைகள் எவை?*

அவை இருவகைப்படும்; நீதி, பிறர்சிநேகம்.

**442.** *நீதியினால் என்ன கடமைகள் ஏற்படுகின்றன?*

பிறர் உரிமை சுதந்தரங்களை ஆதரிக்கவும். அவற்றிற்கு இடையூறு விளைவியாதிருக்கவும் கடமை.

**443.** *பிறருக்குள்ள சுதந்தரங்கள் எவை?*

தங்கள் உயிர், சரீரம், சௌக்கியம், ஆஸ்திபாஸ்தி, சுவாதீனம், நன்மதிப்பு இவற்றின்மட்டில் சுதந்தரம் உண்டு. ஆகையால், இவற்றில் யாதொன்றையும் மோசப்படுத்தக்கூடாது.

### 1. உயிர் பிழைத்திருக்கவும், ஆபத்தின்றி இருக்கவும் பிறருக்குள்ள சுதந்தரம்

**444.** *அவர்களுக்குத் தங்கள் உயிர்மட்டிலுள்ள சுதந்தரத்தைப்பற்றி நமது கடமை யாது?*

அநியாயமாய்த் தன் உயிரைக் கொலை செய்ய வருபவன் கையினின்று தன்னைத் தப்பித்துக்கொள்ளவும், பொதுஜன நன்மையை ஆதரிப்பதற்கும், நமது தேசத்தைக் காப்பாற்றுவதற்கும், அவசரமானாலன்றிப் பிறர் உயிரைக் கொலை செய்யக்கூடாது.

**445.** *நம்மை எதிர்த்துத் தாக்குகிறவனை நாம் காயப்படுத்தலாமா அல்லது கொன்றுபோடலாமா?*

ஒருவன் நம்மேல் விழுந்து தாக்கினால், அவன் கையினின்று நம்மை விடுவிக்கவும் அவனை மேற்கொள்ளவும் அவசரமான அளவு பலாத்காரம் செய்யலாம். அவன் நம்மைக் கொல்லத் தேடுகிறானென்று தெரிகிறது; நம் உயிரைத் தப்புவிக்க வேறு வழி இல்லை. அத்தகைய சந்தர்ப்பத்தில் மாத்திரம், அவனைக் கொன்றுபோடலாம். நாகரீகமுள்ள தேசங்களில் இச்சம்பவம் வெகு அபூர்வம்.

**446.** *ஒருவன், நான் அவனைத் தடுத்தும், கேட்காமல், என்னை நிந்தையாகப் பேசிக்கொண்டிருந்தால், அவனைக் கீழே தள்ளி அடிக்கலாமா?*

இதுபோன்ற விஷயங்களில், போலீஸார் உதவியைத் தேடுவதே ஏற்ற காரியம். போலீஸாரைத் தருவிப்பது கூடாத

காரியமானுல், அவனுடைய இழிமொழிகளை அடக்கி அவனுக்குப் புத்தி புகட்டுவதற்குப் போதுமான அளவு அவனைத் தண்டிப்பது குற்றமல்ல. ஆயினும், தன் பகையைத் தீர்த்துக்கொள்ளும் படியாக இவ்விதம் செய்யக்கூடாது. (அவன்மீதுள்ள விரோதத்தினுல் இப்படிச் செய்யலாகாது) நியாயமாய்த் தன் அபிமானத்தைக் காப்பாற்றவும், இத்தகைய போக்கிரிப்பயல்களால் ஒழுங்கீனங்கள் உண்டாகாதவண்ணமும், இவ்விதம் செய்யலாம்.

447. சிறு பையன்கள் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொள்ளலாமா?

நியாயமாய்த் தன்னைக் காப்பாற்றிக்கொள்வதற்கு அவசியமானமட்டும், அல்லது "அடி உதவுகிறதுபோல் அண்ணன் தம்பி உதவார்கள்" என்றவாறு, வேறெதற்கும் அஞ்சாத சில துஷ்டப்பயல்களை அடக்கிக் குணப்படுத்தும்வண்ணம், இது செய்யலாமன்றி, வேறெந்தக் காரணமும்பற்றிச் சண்டையிட்டுக்கொள்ளக்கூடாது.

448. என்னுடைய பொருட்களை ஒருவன் திருடிக்கொண்டு போனுல், அவனைத் தாக்கிப் பலாத்காரம் செய்யலாமா?

உன் பொருட்களை விடுவித்து காப்பாற்றுவதற்கு அவசியமான அளவுக்குமிஞ்சிப் பலாத்காரம் செய்யலாகாது.

449. ஒரு தடிப்பயல், வேருெரு மனிதனைப் பலவந்தம் பண்ணித் துன்பப்படுத்திக்கொண்டிருப்பதைக் கண்டால், நான் போய்த்தடுக்கலாமா?

சந்தேகமில்லாமல் தடுக்கலாம்; அதுவும் ஓர் புண்ணியமாகும்.

450. பிரசித்தமான குற்றவாளியை (கொலைபாதகனை) யாரேனும் கொன்றுபோடலாமா?

அவனைப் பிடித்துக்கொடுக்க உதவிபுரியலாமேயல்லாது, நீ அவனைக் கொல்லக்கூடாது. சர்க்காருக்குத்தான் அந்தச் சுதந்தரம் உண்டு.

451. தேசத்துரோகியை கொன்றுபோடலாமா?

நீ போர்ச்சேவகனுயிருந்து, சர்க்காருடைய கட்டளையின்மேல் அல்லது உனது தளபதியிடமிருந்துவந்த கட்டளையின் பேரால், அவ்விதம் செய்யலாமேயன்றி வேறல்ல.

452. எத்தகைய யுத்தம் நியாயமானது?

தன் சொந்த தேச பாதுகாப்பின்பொருட்டு, அல்லது பிறர் தேசத்தின்மீது அநியாயமாய்ப் படையெடுத்துவரும் விரோ

தியை அடக்கும்பொருட்டு, யுத்தம் தொடுப்பது நியாயமான யுத்தம் எனப்படும். விரோதி தோல்வியடைந்து பிறருக்கு அவனால் பொல்லாப்பு வராது என்கிற நிலைமைக்கு, அவன் வந்து சேருமட்டும் யுத்தத்தைத் தொடர்ந்து நடத்தலாம். பிறதேசங்களைத் தன் கைவசப்படுத்திக்கொள்வதற்காக அல்லது தன் தேசத்தை விசாலிப்பதற்காக, யுத்தம் தொடுக்கக்கூடாது. போர் புரிவதற்குத் தகுந்த நியாயம் இருக்கவேண்டும்; அஃதின்றிப் போர் புரிவது தேசத்துரோகமும் பெரும் பாதகமுமாகும்.

**453. சரீர சவுக்கிய சம்பந்தமான உரிமைகளைப்பற்றிக் கடமைகள் எவை?**

அநியாயமாய் பிறர் நம்மை எதிர்த்து வலுவந்தம் பண்ணுவதினின்று நம்மை விடுவிப்பதற்கன்றி, பிறர் சரீரத்துக்கு யாதொரு இடையூறும் வருவிக்கக்கூடாது. அவர்களுடைய சவுக்கியத்துக்கும், மனதார, யாதொரு கெடுதியும் செய்யத்தகாது. நமது கண்காணிப்பிலுள்ளவர்களை நாம் தகுந்த ஜாக்கிரதையுடன் பராமரித்து வரவேண்டும்.

**454. இதற்குச் சில உதாரணங்கள் கூறு.**

நமது சவரட்சணைக்குட்பட்டவர்களுக்குச் சரியான சாப்பாடு கொடுக்கவேண்டும். அவர்களுக்கு மிதமிஞ்சின வேலை இடக்கூடாது. மனைவி, மக்கள் விஷயத்தில், அவர்களுடைய சவுக்கியத்துக்கேற்ற உணவு, மருந்து, வஸ்திரம், இருப்பிடம் இவற்றைத் தேடிக் கொடுக்கவேண்டும். பிள்ளைகள் தங்களுக்குத் தீங்கான எந்தக் காரியத்தையும் செய்யாதபடி, அவர்களைத் தடுக்கவேண்டும். நாம் பிறரை அடிக்கவாவது, துன்பப்படுத்தவாவது, எவ்வித நஷ்டமும் அவர்களுக்கு வருவிக்கவாவது கூடாது.

## 2. உடமையின் மேலுள்ள சுதந்தரம்

**455. பிறர் உடமையைப்பற்றி நமக்குள்ள கடமைகள் எவை?**

பிறருக்குச் சொந்தமான பணம், பொருட்களை அபகரிக்கலாகாது; அவர்கள் உடமையைச் சேதப்படுத்தக்கூடாது. நியாயமாய் அவர்கள் பணம், பொருள், சம்பாதிப்பதில் நாம் விக்கினம் செய்வது தகாது. பிறர் உடமை ஏதாவது நம்மிடம் இருந்தால், அவர்களுக்கு அது தேவையாயிருக்கும்போது, நாம் வைத்துக்கொள்ளக்கூடாது. இரவலாக வாங்கினதை மோசப்படுத்தாமல், வாங்கினபிரகாரம் திரும்பக்கொடுத்துவிடவேண்டும். நாம் கொடுத்த வாக்கை மீறலாகாது. ஒப்பந்தத்தில் குறிக்கப்பட்ட காலம் வந்ததும், நமது கடனைத் தீர்த்துப்போட

வேண்டும். வேலைக்காரருக்குத் தகுந்த காலத்தில், சம்பளம் கொடுக்கவேண்டும். சுருங்கச் சொல்லின், நாம் யாவர்மட்டும் நேர்மையாகவும் நாணயமாகவும் நடந்துகொள்ளத்தகும்; எவர்க்கும் அற்ப நஷ்டமும் வருவிக்கக்கூடாது.

**456.** நாம் பிறர் உடமையை அபகரித்திருந்தால், அல்லது அவர்களை ஏமாற்றி அதை நஷ்டப்படுத்தியிருந்தால், திரும்ப அவர்களுக்கு அதைக் கொடுத்துவிடவேண்டுமா?

நாம் எடுத்ததைக் கொடுத்துவிடவேண்டும்; நஷ்டத்துக்குப் பரிகாரம் செய்யவேண்டும்.

**457.** நாம் அபகரித்த பொருள் தவறிப்போயிற்று அல்லது நஷ்டப்பட்ட பொருளுக்கு ஈடுபண்ணமுடியாது, அல்லது ஏற்பட்ட நஷ்டத்துக்குப் பரிகாரம் செய்ய நம்மால் இயலாது; இச் சந்தர்ப்பங்களில், நாம் செய்யத்தக்கதென்ன?

ஈடுபண்ண இயலாதமட்டும், நாம் ஒன்றும் செய்யக் கடமை இல்லை; கூடுமானால் வேறு எந்த விதத்திலாவது பரிகாரம் செய்ய முயலவேண்டும்.

**458.** எவனிடமிருந்தும் நாம் ஒன்றும் அபகரிக்கவில்லை, ஆனால், ஒருவனுக்குக் கிடைக்க இருந்த லாபம் அவனைச் சேராதபடி அல்லது அவனுக்குக் கிடைக்கக்கூடிய பொருள் கிட்டாதபடி அடாதவிதமாய் விக்கினம் செய்திருந்தால், அவனுக்கு நான் அதைக் கொடுக்கக் கடமையா?

அந்தப் பொருள், அல்லது லாபத்தின்மேல் அவனுக்கு மெய்யான உரிமை ஏற்பட்டிருந்து, அவனுக்கு அது கிடையாவண்ணம் நாம் மனதார தடை செய்திருந்தால், நஷ்டத்துக்குப் பரிகாரம் பண்ணவேண்டும். ஆனால் பொருளின்மீது சுதந்தரமின்றி, அதை அடையப் பிரயாசைப்படமாத்திரம் உரிமை இருந்தால், நஷ்டத்துக்கு ஈடுபண்ண நீதிப்பிரகாரம் நமக்குக் கடமை இல்லை. என்றாலும், நம்மால் கூடினமட்டும், வேறு எந்த வகையிலாவது அவனுக்கு நன்மைசெய்வது பிறர்சிநேகத்துக்குரிய கடமையாகும்.

**459.** ஓர் வேலைக்காரன் வீண் நேரம் போக்கித் தன் கடமையை அரைகுறையாய் நிறைவேற்றினால், இது அநியாயம் என்கலாமா?

அநியாயம்தான்; ஏனெனில், எஜமானன் கொடுக்கிற சம்பளத்துக்கு ஈடாக வேலைக்காரனுடைய ஊழியத்தின்மேல் அவனுக்குச் சுதந்தரம் உண்டு. ஆகையால் அவ்விதம் அரைகுறையாய் வேலைசெய்த ஊழியக்காரன், இனிமேலாகவாவது

கடினமாய் உழைத்து, முன்செய்ததைவிட அதிக ஜாக்கிரதையாய் வேலை செய்து, முந்தின அஜாக்கிரதையால் ஏற்பட்ட நஷ்டத்தை ஒருவாறு பரிகரிக்கக் கடமைப்பட்டிருக்கிறான்.

*460.* பிறர் பொருளைத் திருடவுமில்லை, அவர்களை வஞ்சிக்கவுமில்லை; ஆனால் அஜாக்கிரதையால் அல்லது ஏதோ அசந்தர்ப்பத்தால் அவர்களுடைய பொருளுக்கு மோசம் நேரிட்டது:—உதாரணமாக, என்னிடம் கொடுத்துவைத்திருந்த பணத்தைப் போக்கடித்துவிட்டேன் என்று வைத்துக்கொள்வோம். இந்த நஷ்டத்துக்கு நான் உத்தரவாதியா?

நீ மனதார அஜாக்கிரதையாயிருந்திருந்தால் நேரிட்ட நஷ்டத்துக்குப் பரிகாரம் செய்துதான் தீரவேண்டும். ஏதோ அசந்தர்ப்ப நஷ்டம் நேரிட்டிருந்தால், நீ அதற்கு உத்தரவாதியல்ல. ஆயினும், பெரும் நஷ்டமின்றிப் பரிகாரம் செய்ய உன்னால் இயலுமாகில், அவ்விதம் செய்வதே தகுதி.

*461.* பிறனை நான் எச்சரியாததினிமித்தம் அவனுக்கு யாதொரு நஷ்டம் ஏற்பட்டால், அதற்கு நான் உத்தரவாதியா?

அவனை எச்சரிப்பது உனது கடமையாயிருந்து, நீ எச்சரிக்கத் தவறினால், ஏற்பட்ட நஷ்டத்துக்கு ஈடு செய்ய வேண்டியதுதான். அவனை எச்சரிக்க உனக்கு யாதொரு கடமையும் இல்லையானால், நேரிட்ட நஷ்டத்துக்கு நீ உத்தரவாதியல்ல.

### 3. உண்மையை அறியப் பிறருக்குள்ள சுதந்தரம் உரிமை

*462.* நாம் உண்மை பேசக் கடமையா?

நாம் பேசும்பொழுதெல்லாம், உண்மையென்று உணர்வதையே உரைக்கக் கடமை; அபத்தம் என்று நமக்குத் தெரிந்திருந்தும், அதை உண்மைபோல் கூறுவது தப்பிதம்.

*463.* இந்தக் கடமை ஏற்படுவானேன்?

முதலாவது: பொய் பேசுதல், நமது தத்துவங்களின் துர்ப்பிரயோகம். 2-வது. பிறருக்கு அதினால் அநியாயம் செய்கிறோம்.

*464.* பொய் பேசுதல், நமது தத்துவங்களின் துர்ப்பிரயோகம் என்பானேன்?

நாம் உண்மையை அறியவும், அபத்தமானதைத் தவிர்க்கவும், நமக்குப் புத்தி என்னும் தத்துவத்தைக் கடவுள் அருளியிருக்கிறார். நமது மனதிலுள்ளதைப் பிறருக்கு வெளிப்படுத்துவ

தற்காகவே, பேசும் திறமை நமக்குக் கொடுக்கப்பட்டது. ஆகையால் மனதிலுள்ளதை, உள்ளதுபோல் வெளிப்படுத்துவது உண்மை அல்லது மெய் பேசுதல் என்னப்படும். அபத்தத்தைச் சிந்திப்பது, புத்தியை துர்ப்பிரயோகம் பண்ணுதலாகும்; அது போல், பொய் பேசுதல், பேசும் திறமையை துர்ப்பிரயோகம் செய்தலாகும்.

465. *பொய் பேசுதல், பிறருக்கு அநியாயம் செய்தல் என்பானேன்?*

ஏனெனில், நாம் பேசும்போது, உண்மையைச் சொல்வோமென்றுதான் பிறர் எதிர்பார்க்கிறார்கள்; நாம் பொய் சொல்வோம் என்கிற சந்தேகம் அவர்களுக்கில்லை. ஆகையால், நாம் பொய் சொன்னால், அவர்களை ஏமாற்றுகிறோம். இது அவர்களுக்குத் தீங்கு புரிவதல்லவா?

466. *ஒருவர் சொல்லுகிறதை ஒருவர் நம்பவேண்டியதில்லை என்று எல்லோருமே ஒப்பந்தம் செய்துகொண்டால் பொல்லாப் பென்ன?*

அவ்விதமானால், ஜனங்களுக்குள் பெருங்குழப்பமும், எல்லாம் தாறுமாறுமாயிருக்கும்; பிறரோடு பேசிப் புழங்குவது பெருத்த இம்சையாயிருக்கும். வாயை மூடிக்கொண்டிருப்பதே உத்தமமாகும்; பிறருடன் புழங்குவதற்காக நமக்குக் கொடுக்கப்பட்ட பேசும் திறமை வீணாய்ப்போகும்.

467. *சகலவிதமான பொய்மொழிகளும், யாதொரு வித்தியாசமின்றி கெட்டவை என்கலாமா?*

பொய் சொல்வதினால், நமக்கு லாபம் வந்தாலும் சரி, பிறருக்கு நன்மை உண்டானாலும் சரியே, பொய் என்றால் எல்லாப் பொய்யும் கெட்டதுதான். ஆனால், பிறருக்குத் தீங்கு விளைவிக்கிற பொய் அதிக கெட்டது. பொய் மொழியால் உண்டான தீங்கு எவ்வளவு கனமானதோ, அதற்குத் தகுந்தாப்போல் சொன்ன பொய்யின் கனமும் அதிகரிக்கிறது.

468. *சகலத்தையும்விட, அதிகக் கனமான பொய் எது?*

யாருக்காவது கனமான சரீரபொல்லாப்பு அல்லது ஆத்துமக்கேடு, உடைமை அல்லது நன்மதிப்புக்குக் கனமான தீங்கு வருவிக்கிற பொய், சகலவிதமான பொய்களிலும் அதிகக் கனமானது.

469. *இதை விளக்கிக்காட்டத்தக்க சில உதாரணங்கள் கூறு.*

நாம் பொய் சொல்வதினால், ஒருவனுக்கு யாதாமொரு அபாயம் தீங்கு நேரிட்டால்; அவனுடைய உடைமை அல்லது உத்தியோகத்தைப் போக்கடிக்கக் காரணமானால்; அவன் பிறரை

விரோதிக்கவும், அவர்கள்மேல் அவிசுவாசம்கொள்ளவும் அல்லது அவனுக்கும் மற்றொருவனுக்குமுள்ள சிநேகம் விட்டுப்போகக் காரணமானால்; அல்லது நாம் சொன்ன பொய்யினால், ஒருவனுக்கிருந்த மதிப்பைக்கெடுத்துக் குற்றமில்லாதவன் தண்டனை அநுபவிக்க காரணமானால், இத்தகைய பொய்களெல்லாம் மகா கனமானதாகும்.

*470.* தன்னைத் தற்காக்கும்பொருட்டுப் பொய் சொல்லக் கூடாதா?

அநியாயமான வில்லங்கத்தினின்று நம்மை விடுவிக்கவும் முதலாய் பொய் சொல்லவே கூடாது.

*471.* நாம் வெளியிடக்கூடாத அதிமுக்கியமான இரகசியம் ஒன்று இருக்கிறது; அப்போது என்ன செய்வது?

அதைப்பற்றிக் கேட்கிற கேள்விக்குப் பதில்சொல்ல மாட்டோம் என்று மறுத்துவிடலாம். அல்லது அதை விட்டு விட்டு இதர சங்கதிகளைப்பற்றி சம்பாஷிக்கலாம். அல்லது "உனக்கென்ன அதைப்பற்றி உன் ஜோலியைப் பார்" என்று உன்னைக் கேட்கிறவனை நோக்கிக் கூறலாம்.

*472.* நாம் மறுமொழி சொல்ல மறுப்பதினாலேயே, இரகசியம் வெளியாகிவிடுகிறதாயிருந்தால், என்ன செய்வது?

அத்தகைய சந்தர்ப்பத்தில், அந்த இரகசியம் உனக்குத் தெரியாததுபோல், பதில் உரைக்கவேண்டும்.

*473.* ஆனால் வாஸ்தவமாகவே அந்த இரகசியம் எனக்குத் தெரிந்திருக்க, இவ்விதம் பதில் உரைப்பது பொய்யல்லவா?

அது பொய்யல்ல; சற்று விமரிசையுள்ள எவனும், அது விஷயம் கேட்கத் தகாதென்றும், பதில் உரைக்கத் தகாதென்றும் கண்டுகொள்வான். அப்பேர்ப்பட்ட விஷயத்தில், கட்டாயமாய் ஒருவன் பதில் சொல்லவேண்டியிருந்தால், அவன் சொல்லும் மறுமொழி "நழுவலான பேச்சு" என்று மற்றவன் கண்டுகொள்வான்.

குறிப்பு :—குற்றவாளி, தான் குற்றம் செய்திருந்தாலும், குற்றமற்றவனாக வழக்காடலாம். அவனுடைய கருத்து யாதெனில்: "நான் என் குற்றத்தை ஒப்புக்கொள்ளமாட்டேன்; நான் குற்றம் செய்ததாகக் கோர்ட்டில் ருசுப்படுத்தட்டும்" என்பதாகும்.

இரகசியமான ஒரு விஷயத்தைப்பற்றிக் கட்டாயமாய் பதில் சொல்ல நேரிடும்போது, "இல்லை, எனக்குத் தெரியாது" என்கிற மொழிகள் "நான் பிறருக்கு வெளிப்படுத்தக்கூடிய விதமாய் அதை அறியவில்லை" என்று பொருள்படும்.

474. இரகசியத்தை வெளியிட நமக்கு 'இஷ்டமில்லாத போதெல்லாம், இந்தவிதமாய்ப் பதில் உரைக்கலாமா?

கூடாது; மிகவும் கனமான பெருத்த விஷயங்களில், இரகசியத்தை வெளியிட்டால் கடவுளுக்கும், பிறருக்கும் அல்லது நமக்கும் அநியாயம் நேரிடக்கூடுமான சமயங்களில், ஏதாவது பதில் சொல்லித்தான் தீரவேண்டியதானுல் மாத்திரம், மேற்கூறியவிதம் பதில் உரைக்கலாம்.

475. தாங்கள் அறிந்த இரகசியங்களை வெளியிடாதிருக்கக் கடமைப்பட்டவர்கள் யார்?

(1) கத்தோலிக்கு குருவானவர், பாவசங்கீர்த்தனத்தில் அறிந்தவைகளை வெளியிடக்கூடாது.

(2) வக்கீல் அல்லது வைத்தியன், தன் தொழிலின் மூலமாய் அறிந்த விஷயங்களை வெளியிடலாகாது.

(3) சர்க்கார் வேலைக்காரன், தன் ஆபீஸின் இரகசியங்களை வெளிப்படுத்தக்கூடாது.

(4) வெகு இரகசியமாய் வைத்துக்கொள்ளும்படியாக உனக்குச் சொன்ன கனமான விஷயங்களை எவனுக்கும் வெளியிடக்கூடாது.

(5) ஒவ்வொருவனும் தனது அந்தரங்க ஜீவியத்தைச் சார்ந்த விஷயங்களை வெளியிடாதிருக்கக் கடமையல்ல, ஆனுல், அவற்றை இரகசியமாய் வைத்திருக்கலாம்.

476. நாம் கொடுத்த வாக்கை மீருதிருக்கக் கடமையா? (கொடுத்த வாக்கின்பிரகாரம் நடக்கக் கடமையா?)

நாம் உறுதியாய்ச் சொன்ன வாக்கின்பிரகாரம் நடக்கக் கடமைதான். ஆனுல் நாம் வாக்களித்த காரியம், வேருெருவனுக்குப் பொல்லாப்பு அல்லது பாவத்துக்குக் காரணமாகிற தாகப் பிற்பாடு தெரியவந்தால், அந்த வாக்குப்பிரகாரம் நடக்கக் கடமையல்ல; அதற்குமாருய், வாக்கை மீறிப்போகக் கடமை உண்டு.

477. சத்தியப் பிரமாணமாய்ச் சொன்ன காரியங்களில் தவறலாமா?

ஒருக்காலும் தவறக்கூடாது, ஏனெனில், சத்தியம் செய்யும்போது, நாம் சொல்வது மெய், முற்றும் மெய்யானது, யாதொரு கலப்புக் கிடையாது என்பதற்கும், அல்லது நாம் செய்வதாக வாக்களிக்கும் காரியங்களைக் கட்டாயம் செய்து முடிப்போம் என்பதற்கும் கடவுளையே சாட்சியாகக் கூறுகிருேம். ஆகையால் சத்தியத்தை மீறுவது கடவுளுக்கு அவசங்கை, அவமதிப்பான பெரும் பாதகமாகும்.

**486.** இது விஷயத்தில் நமது கடமை என்ன?

நமது கடமை இருவகைப்படும்: முதலாவது, பிறருக்கு விரோதமாய்ப் பொய்யான காரியங்களைச் சொல்லவாவது, குற்றமில்லாதவர்களைக் குற்றஞ்சாட்டவாவது தகாது. இரண்டாவது, பிறரிடம் தப்பிதம் இருந்தாலும், அதை எங்கும் பிரஸ்தாபப்படுத்தலாகாது.

"அவதூறு (கோள்) சொல்லுகிறவன் அதிகக் குற்றவாளியா அல்லது அந்தஅவதூரைக் காதுகொடுத்துக் கேட்கிறவன் அதிகக் குற்றவாளியா என்று தீர்ப்பது எளிதல்ல" என்று அர்ச். பெர்நர்து கூறுகிறார்.

**487.** மற்றவருடைய நடத்தை குணகுணங்களில் குற்றம் கண்டுபிடிப்பது தப்பிதமா?

(1) பிறருடைய தவறுதல்கள் பகிரங்கமாய் யாவருக்கும் தெரிந்தவைகளானால், அவற்றைப்பற்றிக் குறைகூறுவது தப்பிதமல்ல. ஆனால், காய்மகாரம், வர்மம் முதலான எண்ணங்களுடன் அல்லது பிறரைத் தூற்றுவதற்காக இவ்விதம் செய்யக்கூடாது.

(2) நல்லவர்கள், தாங்களும் கெட்டவர்களுடைய சகவாசத்தால், கெட்டுப்போகாதபடி சில சமயங்களில் எச்சரிக்க வேண்டியது அவசரமாகும்.

(3) பிறரைக் கண்டித்துத் திருத்தக்கூடியவர்களிடம், அவர்களுடைய அந்தரங்கமான குறைகளைச் சொல்லிக்காட்டுவது சில சமயங்களில் நன்மையாயிருக்கலாம்.

ஆனால், மேற்கூறிய சந்தர்ப்பங்களில் தவிர மற்றச் சமயங்களில், பிறருடைய அந்தரங்கமான குற்றத்தை நாம் பிரஸ்தாபப்படுத்தல் ஆகாது.

**488.** அந்தரங்கமான குற்றங்கள் பிரசித்தம் ஆகாவண்ணம் பிறருக்கு உரிமை இருப்பானேன்?

ஏனெனில் இந்தக் குற்றங்கள் வெளியானால், அவர்களுடைய கீர்த்தி கெட்டுப்போகும். அவர்களுடைய முன்னேற்றத்துக்கு இடையூறு நேரிடும். இவ்விதமான கேடுகள், அவர்களுடைய அந்தரங்கமான குற்றங்களின் காரணத்தால், உண்டாவது சரியல்ல.

**489.** பிறருடைய நல்ல பெயரைக் கெடுப்பதற்கான பேச்சு வெகு சகஜமாய் உள்ள குறையா?

இந்தக் குறைதான், சகலத்திலும் சகஜமானதும், வெகு பொல்லாப்புக்குரியதுமானதென்கலாம். இதிலும் விசனிக்கத்தக்க

விஷயம் யாதெனில், துஷ்டர் மாத்திரமன்று, சாதாரணமாய் நல்லவர்கள், பக்தியுள்ளவர்கள் என்கிறவர்களிடமும், இந்தக் குறையைக் காணலாம்.

**490.** நல்ல பக்திமான்களிடமும், இது சகஜமாயிருப்பதற்குக் காரணமென்ன?

இதற்குக் காரணம், நாவானது சிறிய அவயவமானாலும் வெகு சுறுசுறுப்புள்ளது, சதா ஆடிக்கொண்டேயிருக்கிறது; பிறருடைய துர்நடத்தையைப்பற்றி வழவழத்த பேச்சு, வேறு வேலையில்லாதவர்களுக்கு வெகு இன்பகரமாய்த் தோன்றும்; தங்களுக்கு இன்னின்ன காரியம் அருவருப்பானது என்று காட்டும்படி, யார்மட்டில் அவர்களுக்குப் பிரியமில்லையோ, அவர்களுக்கு விரோதமாய் அந்தந்தக் குற்றங்குறைகளைச் சாட்டிச் சொல்வது ஜனங்களுக்கு வழக்கம். கடைசியாக, பிறருக்கு விரோதமாய்ப் பேசுவதினால், தங்கள் சுயக்கீர்த்தியும் லாபமும் அதிகரிக்கச் செய்கிறார்கள்.

**491.** இவ்விதமாகப் பிறரைப்பற்றி பேசுகிறவர்கள், கனமான பாவம் கட்டிக்கொள்ளுகிறார்களா?

பிறருடைய நல்ல பெயரைக் கெடுக்கவும், மனஸ்தாபம் சண்டை சச்சரவு உண்டாகவும், மற்றவர்கள் இழிவான எண்ணங்கொள்ளவும், இவ்விதமான பேச்சுகள் காரணமானால், விளைந்த பொல்லாப்பின் கனகனத்துக்குத் தகுந்தாப்போல், பாவமும் கனமானதாகும்.

**492.** ஆகவே நல்லவர்கள் என்ற பெயர் வைத்துக்கொண்டு, இவ்விதம் பேசிக்கொண்டுபோவது எப்படியாகும்?

முதலாவது, அவர்களுடைய பக்தி, ஆழ்ந்த மெய்யான பக்தியல்ல; அவர்களுடைய நன்மைதனமும் சிறந்ததல்ல. இரண்டாவது, தாங்கள் செய்யும் பொல்லாப்பு எத்தகையதென்று எள்ளளவும் அவர்கள் உணர்கிறதில்லை. இதற்குக் காரணம் யோசியாமை, மந்தபுத்தி.

**493.** அயலான் பெயருக்கு அவகீர்த்தி உண்டுபண்ணியிருந்தால், அதைச் சரிபடுத்த நமக்கு கடமையா?

நம்மாலியன்றமட்டும் சரிபடுத்தக் கடமைதான்; ஆனால் இது அநேக சமயங்களில் எளிதான காரியமல்ல. ஏனெனில், தீங்கு ஏற்கனவே செய்தானபின், சரிப்படுத்துவது எவ்விதமாகும்? நாம் சொன்னது உண்மையான சங்கதியானால், அதை மறுத்துச் சொல்லமுடியாது, அதை நம்மிடமிருந்து அறிந்தவர்கள் மறந்துபோகும்படி செய்யப் பிரயாசைப்படலாம். அல்லது

நமது அயலானிடமுள்ள சிறந்த குணங்களை எடுத்துக்காட்டி, அந்தக் கெட்ட பெயரை மங்கவைக்கலாம். நாம் சொன்னது அபத்தமான காரியமானல், நாம் எவ்வளவு பகிரங்கமாய், யார் யார் முன்னிலையில் அதைப் பிரஸ்தாபப்படுத்தினேமோ, அவ்வளவு பகிரங்கமாகவும் அவரவர் முன்பாக, அதை மறுத்து நாம் முன் கூறினது பொய் என்று சொல்லவேண்டும்.

---

## 4-ம் அதிகாரம்

## பிறர் சிநேகம்

### 1. சகலரையும் நேசித்தல்

**494.** *பிறர் சிநேகமும் நீதியும் ஒன்றுதானு?*

இல்லை; நீதியின்றிப் பிறர் சிநேகமில்லை என்பது மெய்யானலும், பிறர் சிநேகம் நீதியிலும் அதிகமாய்ப் புண்ணியத் தேர்ச்சியை எடுத்துக்காட்டும்.

**495.** *பிறர் சிநேகம் யாது?*

பிறர்மட்டில் நமக்குப் பிரீதி உண்டு. அதாவது அவர்களை நாம் நேசிக்கிறேம் என்றர்த்தப்படும்.

**496.** *"சகல மனிதரும் சகோதரர்" என்பது இந்தக் கருத்துக்காகத்தானு?*

ஆம்; "சகல மனிதரும் சகோதரர்" என்கும்போது, நாமெல்லோரும் மகத்தான மானிட குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்; அது காரணம்பற்றி ஒருவர் ஒருவரை நேசிக்கத்தகும் என்று பொருள்படும். ஆனல், இதுமாத்திரமன்று, கடவுள் நம்மெல்லோரையும் நேசித்து, நாமும் ஒருவர் ஒருவரை, அவருடைய சிநேகத்தின்பொருட்டு, நேசிக்கவேணுமென்று விரும்புகிறர்.

"நம்மிடம் மெய்யாகவே தேவசிநேகம் (தெய்வபக்தி) உண்டா இல்லையாவென்று கண்டுகொள்வதற்கு நிச்சயமான வழி, நாம் பிறரை நேசிக்கிறேமாவென்று பார்ப்பதுதான்; ஏனெனில், ஒன்றின்றி மற்றென்றில்லை; இரண்டும் இணைபிரிக்க முடியாது. நீ எவ்வளவுக்குப் பிறர்சிநேகத்தில் விர்த்திஅடைவாயோ, அவ்வளவுக்குத் தேவசிநேகமும் உன்னிடம் அதிகரிக்கும் என்பது நிச்சயம்."

**497.** *சிநேகம் என்பது என்ன?*

சிநேகம் என்பது சில சமயங்களில் "ஓர் ஆசாபாசம்" என்றும் வேறுசமயங்களில் "பட்சம்" என்றும் பொருள்படும்.

498. நாம் சகலரையும் உருக்கமாய் நேசிக்கக் கடமையா?

இல்லை. உருக்கமான சிநேகம் ஓர்வித சரீரப்பற்றுத லான சிநேகம்; ஒருவன் மட்டிலுள்ள சுபாவப் பிரியத்தின் மிகுதியால், அது உண்டாகிறது. இது இயல்பாய் வரவேண்டியது, மனது அல்லது புத்தியின் பலவந்தத்தால் உண்டாவதில்லை.

499. சகலர்மட்டிலும் நமக்கு எவ்விதமான சிநேகம் இருக்க வேண்டும்?

ஆன்மாவைச் சேர்ந்த சிநேகம் வேண்டும்; அதாவது, பிறர்மட்டில் பட்சமான எண்ணங்கொண்டு, அவர்கள் நன்றாயிருக்க வேணுமென்று ஆசித்து, நம்மால் கூடுமானபோது அவர்களுக்கு நன்மைசெய்யத் தேடவேண்டும்.

500. சகலரையும் ஒரேவிதமாய் (அளவாக) சிநேகிக்கக் கடமையா?

இல்லை; நமக்கு அதிகமாய் நெருங்கினவர்களாகிய, பெற்றோர், மனைவி, மக்களை விசேஷவிதமாய் சிநேகிக்க வேண்டும்; அடுத்தபடியில் மற்ற உறவினர், சிநேகிதர்களை நேசிக்கத்தகும். ஆனால், ஒவ்வொருவர்மட்டிலும் கொஞ்சமாவது சிநேகம் இருக்கவேண்டும்.

501. இந்தக் கடமையை மீறிப் பாவம் விளைவது எவ்விதம்?

பிறர்மீது அருவருப்பான எண்ணங்கொண்டு, அவர்களைப்பற்றி இழிவாய்ப் பேசுவதினாலும், அவர்களுக்குத் தீங்கு நேரிடவேண்டுமென்று ஆசிப்பதாலும், அல்லது நாமே அவர்களுக்குத் தீங்கு செய்யத் தேடுவதாலும், இந்தக் கடமைக்கு விரோதமான பாவம் உண்டாகக்கூடும்.

## 2. நமது விரோதிகளை நேசித்தல்

502. நமது விரோதிகளைப் பகைக்கக்கூடாத?

நாம் ஒருவரையும் பகைக்கக்கூடாது; அவர்கள் செய்யும் துர்க்காரியங்களைப் பகைக்கலாமொழிய, அவர்களைப் பகைக்கலாகாது.

503. நமது விரோதிகளைச் சிநேகிக்கவேண்டுமென்று கடமையா?

அவர்களையும் சிநேகிக்கக் கடமை. அதாவது, அவர்கள் கெட்டுப்போகவேணும் என்று விரும்பாமல், அவர்கள் நன்றாயிருக்க வேணுமென்று ஆசிக்கவேண்டும். நாம் அவர்களுக்குத் தீங்கு செய்ய ஏற்ற சமயம் வாய்த்தால், தீங்கு புரியாதிருப்பது மன்றி, சமயம் கிடைத்தால், நன்மை செய்யவும் காத்திருக்க வேண்டும்.

504. இவ்வாறு விரோதிகளைச் சிநேகிக்கக் கடமை என்பதற்கு என்ன நியாயம் இருக்கிறது?

கடவுள் பாவத்தைப் பகைக்கிறார்; பாவியைப் பகைக்கிறதில்லை; அவன் மனந்திரும்பவேண்டுமென்று அவர் ஆசிக்கிறார். அவன் பச்சாத்தாபப்பட்டால், மன்னித்துக்கொள்கிறார். இவ்விதமாக அவருடைய விரோதிகளாகிய பாவிகளுக்கு நன்மை உண்டாக ஆசித்து, அவருடைய நீதிக்குப் பங்கமின்றி, எவ்வளவு நன்மை செய்யக்கூடுமோ, அவ்வளவும் செய்கிறார். நாமும் அவ்விதமே, நமது விரோதிகள்மட்டில் நடந்துகொள்ள வேண்டும்.

505. ஆனால், துஷ்டரை நாம் பகைக்கவேண்டாமா?

அவர்களின் துஷ்டத்தனத்தைப்பற்றி நாம் துக்கிக்கத் தகுமேயன்றி அவர்களைப் பகைக்கக்கூடாது. அவர்கள் நல்லவர்களாகும்பொருட்டுக் கடவுளைப்பார்த்து மன்றாடவேண்டும். இவ்விதம் செய்வதினால், அவர்களுக்கு நன்மை உண்டாக ஆசித்து அவர்களைச் சிநேகிக்கிறோமென்று காட்டுவோம்.

506. அனால் சிலருடைய நடத்தையும் குணமும் சகிக்கக்கூடாத விதமாயிருக்கிறதே; அவர்கள்மேல் அருவருப்புக்கொள்ளாமலிருப்பது கூடாத காரியமன்றோ?

அருவருப்புக்குரிய யாவும், நமக்கு வெறுப்பை உண்டுபண்ணுமற்போகாது; ஆனால் அருவருப்பும், பகையும் ஒரே காரியமல்ல.

507. இரண்டிற்கும் என்ன வித்தியாசம்?

அருவருப்புக்கொள்கிறது, நம்மால் அடக்கக்கூடாத ஓர் உணர்ச்சி; பிறர்சிநேகத்துக்கும் உணர்ச்சிக்கும் யாதொரு சம்பந்தமில்லை; பிறர் சிநேகம், பிறருக்கு நன்மையை விரும்ப அல்லது நன்மை செய்யத் தூண்டும். பகையானது தின்மையை விரும்ப அல்லது தின்மைசெய்யத் தூண்டும்; இது ஓர் உணர்ச்சியல்ல, மனதைச் சேர்ந்தது.

508. என்னைப் பகைத்து எனக்குத் தீங்கு செய்யத் தேடுகிறவர்களை, நான் தண்டிக்கக்கூடாதா?

அநியாய பொல்லாப்பினின்று தன்னைத் தற்காக்கும்பொருட்டும், பொது சமாதானத்தின்பொருட்டும், இது செய்யலாமொழிய, பகையைத் தீர்க்கவும், பழிக்குப்பழி வாங்குகிற கருத்தோடும் செய்யக்கூடாது.

509. மற்றவர்களுக்குப் பிறர்சிநேகம் காட்டுவது எப்படி?

1-வது: அவர்களுடைய உரிமைகளைக் காப்பாற்றி, அவர்கள்மட்டில் நியாயமாய் நடந்துகொள்வதாலும்,

2-வது: அவர்களுக்கு அவசரமான வேலைகளில் நம்மால் கூடுமான உதவிபுரிவதாலும்,

3-வது: அவர்களுடன் பட்சமாய்ப் பேசி, அவர்களைத் தக்கபிரகாரமாய் நடத்தி, அவர்கள் சந்தோஷமாகவும், சவுகரியமாகவும் இருப்பதற்கான விதமாய் நடந்துகொள்வதினாலும் பிறர் சிநேகத்தைக் காட்டலாம்.

"யாரும் நமதருகில் வருவது தற்செயலாலல்ல, நாம் அவர்களுக்கு உதவிபுரிந்து, ஆறுதல் சொல்லிச் சந்தோஷப்படுத்த வேணுமென்பது கடவுளுடைய கருத்தானதுபற்றி, நமதருகே வருகிறார்கள் அல்லது குறுக்கிடுகிறார்கள்."

"பிறர் துன்பத்தைக்கண்டு மனதிரங்கி உதவிபுரிய விரைந்துசெல்லும் காருண்ய காட்சியைவிடச் சிறந்ததோர் காட்சி கிடையாது." (Wallace.)

### 3. உதவிபுரியக் கடன்

**510.** நாம் பிறருக்கு எச்சமயங்களில் உதவிபுரியக் கடன்?

அவர்களுக்கு நமது உதவி அகத்தியமாய் வேண்டிய போதும், தங்களால் ஒன்றும் செய்ய இயலாதவர்களாய் நம்மை நாடி வரும்போது உதவிபுரியக் கடன்.

**511.** அத்தகைய சந்தர்ப்பங்களில் சிலவற்றைக் கூறு.

ஓர் ஏழை பட்டினியாய் சாகக்கிடக்கும்போது அல்லது குளிர், பசியால் வருந்தும்போது; பலவீனமுள்ள ஒருவன் தன்னுடைய சக்திக்கு மிஞ்சின பாரத்தைச் சுமந்து தவிக்கும்போது; ஓர் வியாதியஸ்தனுக்கு அல்லது காயம்பட்டவனுக்கு சிகிச்சை, அவுழ்தம், சாப்பாடு முதலியன தேவையானபோது; துன்ப துரிதங்களுக்குட்பட்டு வெகுவாய் அங்கலாய்க்கும் மனிதனுடைய கஷ்டங்களை நிவர்த்திக்க நம்மால் கூடுமானபோது; எவனாகிலுமொருவன் ஆபத்திலிருக்கும்போது அல்லது தனக்குத்தானே தீங்கு செய்யும்பொழுது, நாம் அவனுக்குக் கைகொடுத்து உதவக் கூடுமானால் அல்லது அவனை எச்சரிக்கக்கூடுமானால், இச்சமயங்களிலெல்லாம் உதவிபுரியக் கடன்.

**512.** ஆபத்தான இச்சமயங்களிலெல்லாம், நாம் உதவி செய்யவேணுமென்று எப்போதுமே கடமையா?

நாம் உதவி செய்வதினால், நமக்கே அதேவிதமான அல்லது அதிலும் மிகுந்த கஷ்டம் நேரிடுவதாயிருந்தாலொழிய, நாம் எப்போதும் உதவிபுரியக் கடமைதான்.

**513.** நமக்குக் கண்டிப்பான கடமையில்லாதபோதும், நாம் பிறருக்கு உதவிபுரியவேண்டுமா?

நாம் வெகு சிரமமின்றி பிறருக்கு உதவிபுரியக் கூடுமானபோதெல்லாம் உதவிசெய்யவேண்டும். இவ்விதம் செய்வது சிறந்த புண்ணியம். வெகு சிரமப்பட்டுச் செய்யவேண்டியிருந்தால், அது மகத்தான வீரியச் செயல் என்னும் புண்ணியமாகும்.

**514.** மகத்தான வீரியச்செயல் என்னும் புண்ணியம் யாது?

இது சகலவகை புண்ணியங்களிலும் மகா உன்னதமானது; மகான்களும் மகாத்துமாக்களுமே இதைச் சாதாரணமாய்ப் பயிற்சிப்பார்கள்.

**515.** இதற்குச் சில அத்தாட்சிகள் கூறுக :—

(1) அர்ச். பீற்றர் கிளாவர் அமெரிக்காவில் அடிமைகளாயிருந்த காப்பிரி ஜாதியாரைப் பேணிப் போஷிப்பதில் தமது ஜீவியத்தைப் போக்கினர்.

(2) மோலாக்காய் நாட்டுக் குஷ்டரோகிகளுக்குச் சிகிச்சை செய்வதில், தமியான் என்னும் குருவானவர் தமது உயிரைப் பரித்தியாகம் பண்ணினர்.

(3) அர்ச். பீற்றர் நோலாஸ்கோவின் துணைவர்கள், அடிமைத்தனத்தினின்று இதர கிறீஸ்துவர்களை மீட்பதாகத் தாங்களே அவர்களுக்குப்பதிலாய் அடிமை ஊழியஞ்செய்யக் காத்திருந்தார்கள்.

மற்றநேக உத்தம புருஷர் (புண்ணியவான்கள்) தங்கள் ஆஸ்தியாவும் ஏழைகளுக்குப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு, தாங்கள் எளிமைப்பட்டார்கள்.

### 4. பிறர்சிநேகப் பரிமாணம்

**516.** பிறர்சிநேகத்தைப்பற்றிச் சிறந்த பரிமாணம் (திட்டம், அளவு) யாது?

"உன்னைப்போல பிறனையும் நேசி." "பிறர் உனக்குச் செய்யவேண்டுமென்று நீ விரும்புவதுபோல், நீயும் பிறருக்குச் செய்" என்பதே.

**517.** சில உதாரணங்களைக்கொண்டு இதை விளக்கிக்காட்டு.

(1) மற்றவர்கள் உன்னுடன் நீதியாகவும், எதார்த்தமாகவும், உண்மையாகவும் இருக்கவேணுமென்று விரும்புவாயன்றோ? அவர்கள் மட்டிலும் அப்படி நட

(2) மற்றவர்கள் உன் மட்டில் பட்சமாயிருந்து, உனக்கு அவசரமான வேளைகளில், அவர்களாலியன்ற உதவி செய்யவேணுமென்று விரும்புவாயன்றோ? அப்படியே அவர்களுக்கும் செய்.

**518.** இந்தத் திட்டத்தை அநுஷ்டானத்துக்குக் கொண்டு வருவது எப்படி?

நீ பிறர்மட்டில் தக்கவிதமாய் அல்லது தகாதவிதமாய் நடந்துகொள்ளக்கூடிய சமயம் வாய்க்கும்போதெல்லாம், சிறிது நேரம் தாமதித்து உனக்குள்ளே யோசித்து "இத்தகைய சந்தர்ப்பத்தில் அவர்கள் எனக்கு என்ன செய்தால், எனக்குப் பிரியமாயிருக்கும்" என்று உன்னையே வினவிக்கேள். எதார்த்தமாய் இந்தக் கேள்விக்குப் பதிலுரைத்து, அந்தப் பதிலுக்குகந்த வண்ணம் அவர்களுக்குச் செய்.

**519.** அநுதின அநுஷ்டானத்துக்குரிய சில உதாரணங்கள் கூறு.

இரவு வேளையில், என் வீட்டோரமாய் ஒருவன் தன் வண்டியை (மோட்டார்) ஓட்டிக்கொண்டுபோனால், என் நித்திரையைக் கெடுக்காமல் இயன்ற அளவு நிர்சப்தமாய் அவன் போகவேணுமென்று பிரியப்படுவேன். ஆகையால், நான் இரவில் வண்டி ஓட்டும்போது, அவ்விதமே செய்வேன்.

நான் அசௌக்கியமாய்ப் படுத்துக்கிடக்கும்போது பிறர் சந்தடி செய்யாமலும், தொந்தரவு செய்யாமலும் இருப்பதுமன்றி, எனக்குத் தேவையானவற்றைத் தேடிக்கொடுத்துச் சிற்சில சமயங்களில், என்னைக் காணவந்து தைரியப்படுத்தவேணுமென்று ஆசிப்பேன். ஆகையால், மற்றவர்கள் வியாதியாயிருக்கும்போது, நானும் அவ்விதம் செய்வேன்.

நான் பளுவான பாரத்தைத் தூக்கி உயர்த்தக்கூடாமல் சங்கடப்பட்டுக்கொண்டிருக்கையில், அந்த வழியாய்ப்போகும் எவனுவது ஒரு கைகொடுத்துத் தூக்கிவிடவேண்டுமென்று ஆசிப்பேன். ஆகையால், பாரத்தோடு மல்லுக்கட்டிக்கொண்டு நிற்கும் அந்தந்த ஏழை மனுஷன், மனுஷிக்கு அவ்விதம் நான் செய்யவேண்டாமா?

நான் யாருக்காவது மனத்தாங்கல் வருவித்திருந்து, அதன்பின் அதற்காக மன்னிப்புக் கேட்டால் அவன் நான் செய்த குற்றத்தை மன்னித்து அதை மறந்துவிடப் பிரியப்படுவேனன்றோ? நானும் அப்படியே செய்வேன்,

இவ்வாறு நூற்றுக்கணக்கான உதாரணங்கள் தினந்தோறும் சம்பவிக்கின்றன.

---

# ஐந்தாம் பாகம்

## விவித தொழில்களும், அந்தஸ்துகளும்

**520.** *பற்பல உத்தியோகம், தொழில், நிலைமைக்கு ஏற்ற விசேஷ கடமைகள் உண்டா?*

நூதனமான பிரமாணங்கள் ஒன்றுமில்லை; சாதாரண பிரமாணங்களே, அலுவலுக்கும் அந்தஸ்துக்கும் தகுந்தாப்போல், விசேஷவிதமாய்க் கையாளப்படுகின்றன.

## 1-ம் அதிகாரம்

## இல்லற வாழ்க்கையின் கடமைகள்

### 1. விவாக விஷயம்

**521.** *ஒவ்வொருவரும் விவாகம் செய்யவேண்டுமென்று கடமையா?*

பொதுப்பட, ஜனங்கள் விவாகம் செய்வது, இயல்பான விஷயமே: ஆனால் இஷ்டமுள்ள எவனும் கலியாணமின்றி ஏகாந்தியாயிருக்கலாம். விவாகம் செய்யாமல், பாவத்தை விலக்கக்கூடாதவர்கள் மாத்திரம், விவாகம் செய்துகொள்ளக் கடமைப்பட்டவர்கள். இல்லற (சமுசார) வாழ்க்கைக்கு உரித்தான இன்பபோகங்களை விவாகம் செய்யாத எவரும் சுகிக்கக்கூடாது; இந்த இன்பங்களின்றி வாழக்கூடாதவர்கள், பாவத்தை விலக்கும்படியாகக் கூடினமட்டும் சீக்கிரமாய் கலியாணம் செய்து கொள்ளவேண்டும்.

**522.** *விவாகத்துக்குமுன் கவனிக்கவேண்டிய விஷயம் யாது?*

விவாகம் ஜீவியகால முழுவதும் நீடித்திருக்கிற விஷயமாதலால், இரு திறத்தாருக்கும், குடும்பத்துக்குமே இந்த விவாகம் பாக்கியமும் சந்தோஷமுமான காரியமாயிருக்கும் பொருட்டு, தகுந்த துணைவன், துணைவியைத் தெரிந்துகொள்வது அவசியம்.

**523.** *தகுந்த துணைவன், துணைவிக்கிருக்கவேண்டிய இலட்சணங்கள் எவை?*

தகுந்த துணைவன், துணைவிக்குப் போதுமான அளவு திரேக சௌக்கியமும், திடகாத்திரமும் இருக்கவேண்டும். இரு

பேரும் ஒரே அந்தஸ்துத் தரமாகவும், சமானமான பழக்கப் பயிற்சியுள்ளவர்களாகவுமிருக்கத்தகும். நற்குணபான்மையும், காரிய விஷயங்களில் கரிசனையும் இருப்பது அவசியம். சமாதான சந்தோஷமாய்க்கூடி வாழத்தக்க ஆளாயிருக்கவேண்டும். இல்லற வாழ்க்கையின் கடமைகளை உணர்ந்திருக்கவேண்டும்.

**524.** இணக்கமற்ற (ஒவ்வாத) கலியாணம் செய்வது சாதாரணமாக என்ன காரணத்தினுல்?

சில சமயங்களில், புத்தியைக் குழப்பிச் சித்தம் கலங்கச் செய்கிற மதியீனமான சிநேகம் இதற்குக் காரணமாயிருக்கலாம். வேறு சமயங்களில், உறவு சம்பந்தம் அல்லது ஆஸ்தியின் மேலுள்ள ஆவலால் இவ்வித கலியாணம் செய்கிருர்கள்.

**525.** விவாகத்துக்கு ஏற்ற வயதென்ன?

இரு பேருக்கும், இல்லற வாழ்க்கையின் கடமைகளை நிறைவேற்றுவதற்காக மூதறிவும், சௌக்கியமும் திடகாத்திரமுமுள்ள பிள்ளைகளைப் பெற்று வளர்ப்பதற்கான திரேக வலிமையும், இருக்கவேண்டும். ஆகையால், ருதுவாகுமுன்னும், பால்யப் பிராயத்திலும் கல்யாணம் செய்வது அனர்த்தமான வழக்கம்.

**526.** சம்ரட்சணைக்கான சம்பத்தைப்பற்றி சொல்ல வேண்டியதென்ன?

மனைவி, மக்களைப் போஷித்து ஆதரிப்பதற்கான வழி வகை நிச்சயமில்லாமல் விவாகம் செய்வது மட்டித்தனம் என்கவேணும்.

**527.** விவாகத்துக்கு முன்னதாக, (விவாகம் செய்வதற்கு முன்) அநுசரிக்கவேண்டிய கடமைகள் உண்டா?

கலியாணம் செய்யாமுன், 'தனிக்கிரிகை' செய்யாமல் தன்னை அடக்கி ஆளவேண்டும். கற்புக்கு விரோதமான சேஷ்டைகள் ஒன்றும் செய்யத்தகாது. இல்லற வாழ்க்கையின்போது மாத்திரம் செய்வதற்குச் சுதந்தரமுள்ள கிரிகைகளை ஏற்கனவே செய்யாதிருக்கவேண்டும்.

**528.** விவாகத்துக்குப்பிறகு அனுசரிக்கவேண்டிய கடமைகள் எவை?

இவை பிரதானமாய் மூன்று வகைப்படும்.

(1) சமுசார வாழ்க்கையின் உரிமைகளைத் தக்கபிரகாரமாய் உபயோகித்தல்; சுபாவத்துக்கு விரோதமாக, முறைகேடானவிதமாய்ச் செய்யத்தகாது. இயற்கை விதியை அநுசரிக்கத்தகும்; கர்ப்பம் தரிக்காதபடி, ஒன்றும் செய்யக்கூடாது.

(2) கணவனும் மனைவியும், ஒருவர் ஒருவரைச் சிநேகித்து, ஒருவருக்கொருவர் பிரியமாய் நடந்து, உற்ற உதவி ஊழியம் செய்யவேண்டும். ஒருவர் ஒருவருடைய குறைகளைச் சகித்து, மூர்க்கத்தைத் தணித்து, சச்சரவை விலக்கவேண்டும். ஒருவருக்கொருவர் ஆறுதல், தைரியம் சொல்லி, பாவ வழியில் பிரவேசியாது, நல்லொழுக்கமாய் நடக்க ஒத்தாசையாயிருக்க வேண்டும்.

(3) ஒருவர் ஒருவருக்குப் பிரமாணிக்கமாயிருந்து, வேறெவரோடும் தகாத சகவாசம் வைத்துக்கொள்ளாமல், ஒருவர் ஒருவர்மீது காய்மகாரம் ஏற்படாதபடி நடந்துகொள்ளவேண்டும்.

**529.** விவாகம் செய்தவர்களுக்குப் பிள்ளைகள் இருக்க வேண்டுமென்ற கடமையுண்டா?

இல்லற உரிமையை உபயோகித்தால் (மேலே கூறினதுபோல் N. 528, 1) பிள்ளைகள் பிறக்காதபடி விக்கினம் செய்யலாகாது. இருக்கிற பிள்ளைகள் போதும், இனி வேண்டாமென்றிருக்குமாகில், கலியாண உரிமையை உபயோகியாமல், எவ்வளவுதான் கடினமாய்த் தோன்றினாலும், தங்கள் ஆசையைக் கட்டுப்படுத்தவேண்டும்.

**530.** இருவருக்குள், ஒருதிறத்தாருக்குப் பிள்ளைகள் அதிகமாய் இருக்கவேண்டுமென்ற விருப்பமும், மறுதிறத்தாருக்குச் சொற்பமாய்ப் போதுமென்றிருந்தால் செய்யத்தக்கதென்ன?

ஒருதிறத்தாருக்குப் பிள்ளைகள் அதிகமாய் வேண்டுமென்ற நோக்கமிருந்தால், மறுதிறத்தாருக்கு அதை மறுத்துத் தடைசெய்ய பாத்தியம் கிடையாது. ஆனால் பிள்ளைகளைத் தக்க பிரகாரமாக வளர்த்து ஆதரிப்பது அசாத்தியம் என்று திட்டமாய்த் தெரிந்தால், அல்லது வேறு ஏதாவது முக்கியமான காரணம் இடையூறாயிருந்தால், அதைச் சொல்லிக்காட்டித் தடைசெய்யலாம்.

**531.** விவாகம் புரிந்த இருவரும் ஒருவரொருவருடைய ஆசையைத் திருப்திசெய்யக் கடமையா?

நியாயமும் யோக்கியமுமான சீராய் இருக்குமட்டும், அது ஓர் கடமைதான். மட்டுத்தப்பி மிதமிஞ்சினவிதமாய், அயோக்கியத்தனமாக இருந்தால் கடமை இல்லை.

**532.** புருஷனுடைய விசேஷ கடமை யாது?

(1) மனைவி மக்களின் சௌக்கியத்துக்கும் சௌகரியத்துக்கும் அவசியமானவைகளெல்லாம் இருக்கின்றனவாவென்று கவனித்துப் பிள்ளைகளை அந்தஸ்துக்குக் தகுந்த பிரகாரம் கல்வி

யில் பயிற்றுவித்தல்; (2) குடும்பத்தலைவனுக்குரிய அதிகாரம் செலுத்துவது, இவை புருஷனுடைய விசேஷ கடமைகள்.

**533.** மனைவியுடைய விசேஷ கடமை யாது?

வீட்டார், பிள்ளைகள்மட்டிலுள்ள *பொறுப்பேற்று, வீட்டுக்காரியாதிகளைச் சிக்கனமாகவும் கவனமாகவும் கொண்டு நடத்தி, வீட்டில் எல்லாம் ஒழுங்காகவும் சவுகரியமாகவும் இருக்கும்படி முயற்சிக்கவேண்டியது மனைவியுடைய கடமை. தவிர, பிள்ளைகளைச் சரியாய் கவனித்து வளர்க்கவேண்டியதும், அவளைச் சேர்ந்த முக்கியமான கடமை.

## 2. பெற்றோரும் பிள்ளைகளும்

**534.** பிள்ளைகள்மட்டில் பெற்றோருடைய கடமைகள் எவை?

சகல விதத்திலும் பிள்ளைகளுக்கு நன்மாதிரிகை காட்டல்; அவர்களுடைய சரீரசவுக்கியம், திடகாத்திரம் தேகாப்பியாசம் இவற்றைக் கவனித்தல்; வேதாநுசார விஷயமாகவும், அறநெறி விஷயமாகவும், சிறுபத்திலேயே நல்ல பழக்கங்கள் உண்டாகும்படி பயிற்றுவித்தல்; அவர்களுக்கு நற்குணபான்மை அமையும்படி செய்தல்; குற்றங்குறைகளைக் கண்டவுடனே ஆரம்பத்திலேயே அவர்களைக் கண்டித்து அடக்கிச் சீர்திருத்தல்; அந்தஸ்துக்கேற்றவண்ணம் கல்வியில் தேர்ச்சியடையுமாறு ஏற்பாடுசெய்து, பிற்காலத்தில் அவர்கள் நல்ல பதவியில் இருக்கும்படியாகவும், தக்க காலத்தில் தகுந்த கலியாணம் செய்துகொள்ளவும், உதவி ஒத்தாசை செய்தல் இவை பெற்றோருடைய கடமைகள்.

**535.** பிள்ளைகளுடைய கடமைகள் எவை?

பிள்ளைகள் தங்கள் பெற்றோரை நேசித்து, சங்கித்து, அவர்களுக்குக் கீழ்ப்படியவேண்டும். பிடிவாதமும் முரட்டுத்தனமும் ஆகாது; முரட்டுத்தனமாய்ப் பெற்றோரை நடத்தவாவது, அவர்களுக்கு விரோதமாய் எழும்பிக் கலகம் செய்யவாவது தகாது; அவர்களுடைய நற்படிப்பினையின் பிரகாரம் கிரமமாய் நடந்து, அவர்களைத் தங்களாலியன்றமட்டும் சந்தோஷப்படுத்தப் பிரயாசப்படவேண்டும்.

**536.** பிள்ளைகள் பெற்றோருக்குக் கீழ்ப்படியவேண்டியது எவ்வளவு காலம்?

அவர்கள் வளர்ந்து, தங்களுக்கு அவசரமானவற்றைத் தாங்களே தேடிக்கொள்ளக்கூடிய பிராயம் வருமட்டும் பெற்றோருக்குத் கீழ்ப்படியவேண்டும். இந்தப் பிராயத்துக்குப் பிறகும்

பெற்ருேர் சவரட்சணையில் இருந்துவந்தால், ஒரே வீட்டில் இருக்குமட்டும் மேற்படியக் கடமை உண்டு.

537. பிராயமான பிள்ளைகள் பெற்ருேர் தங்கள் வீட்டில் பிள்ளைகள் இருக்கவேணுமென்று விரும்புகிற காலமளவும், அதே இல்லத்தில் பெற்ருேருக்குக் கட்டுப்பட்டு இருக்கவேண்டு மென்பது கடமையா ?

இல்லை ; பிராயமாகி, பெற்ருேர் வீட்டைவிட்டு விலகித் தாங்களே சகல விஷயங்களையும் கவனித்துக்கொள்ளக் கூடுமான வுடன், அவ்விதம் பிரிந்துகொள்ளலாம்.

538. இதன்பின் (பிரிந்தபிறகு) பெற்ருேர்மட்டில் வேறு கடமைகள் உண்டா ?

இதற்குப்பிறகு எப்போதுமே பெற்ருேரை நேசித்துச் சங்கித்து, அவர்களுக்கு மரியாதை காட்டவும், பெற்ருேர் தள்ளாத பிராயத்தில் இருக்கும்போது, அல்லது தங்களைப் போஷித்துக்கொள்ளக்கூடாதபோது, அவர்களுக்கு உதவிசெய்து சவரட்சணைபண்ணவும் கடமைப்பட்டிருக்கிருர்கள்.

539. பிள்ளைகளுடைய கலியாணத்தை திட்டப்படுத்தப் பெற்ருேருக்குச் சுதந்தரமுண்டா ?

சில நாடுகளில் பெற்ருேரே தங்கள் பிள்ளைகளுடைய கலியாணத்தைத் திட்டப்படுத்துவது வழக்கமாயிருக்கிறது. இந்த வழக்கத்தில் கெடுதி ஒன்றுமில்லாதபரியந்தம், அந்த வழக்கத்தை அநுசரிப்பதே உசிதம். ஆனுல், பிள்ளைகளுடைய பிரியத்துக்கு விரோதமாய், இது விஷயத்தில் கட்டாயம் செய்யப் பெற்ருேருக்கு யாதொரு சுதந்தரமும் கிடையாது ; விசேஷமாய், பெற்ருேர் திட்டம் செய்யும் பெண் அல்லது மாப்பிள்ளையின் மட்டில், தங்கள் பிள்ளைகளுக்கு யாதொரு பாசமில்லை என்ருவது, வேறு எந்தவிதமாகிலும் சரியொத்ததில்லையென்ருவது தெரிந்தால், இப்படி கட்டாயம்பண்ணுவது பெரும் தப்பிதமாகும். இது காரியத்தில் பெற்ருேருடைய ஆலோசனையைப் பிள்ளைகள் கேட்பது மரியாதை ; ஆனுல், தங்கள் ஜீவியகாலத்துக்கும் பாக்கியமாய் அல்லது நிர்ப்பாக்கியமாய் இருப்பதற்குக் காரணமாகும். இத்தகைய மகத்தான விஷயத்தில், பெற்ருேரின் ஆலோசனையைக் கட்டளையாகப் பாவித்து நடக்கவேண்டியதில்லை.

## 3. உபாத்தியாயரும் மாணுக்கரும்

540. உபாத்தியாயரின் கடமைகள் என்ன ?

பெற்ருேர்கள் ஸ்தானத்தில் உபாத்தியாயர் இருக்கிருர். ஆகையால் பெற்ருேருக்குப் பிள்ளைகள்மீதுள்ள கடமைகள்தான்,

உபாத்தியாருக்குத் தம் மாணுக்கர்மட்டில் உண்டு. தங்களிடம் ஒப்புவிக்கப்பட்ட பிள்ளைகளின் நற்படிப்பினை நல்லொழுக்கத்தைப்பற்றி, உபாத்திமார் பிள்ளைகளின் பெற்ருேருக்கு உத்தரவாதம் சொல்லவேண்டியவர்கள்.

**541.** உபாத்திமார்மட்டில், (தாங்கள் படிக்கும் பள்ளிக்கூடமட்டிலும்) பிள்ளைகளுடைய கடமைகள் எவை?

பெற்ருேர்களின் ஸ்தானத்தை எவ்விஷயங்களில் உபாத்திமார் வகித்திருக்கிருர்களோ, அவ்விஷயங்களில் பெற்ருேர்மட்டில் நடந்துகொள்ளவேண்டிய விதமே உபாத்திமார்மட்டிலும் நடந்துகொள்ளவேண்டும்.

**542.** இவ்விஷயங்களைச் சற்றே விவரித்துச் சொல்.

மாணுக்கர், பள்ளிக்கூடத்து ஒழுங்குகளையும் உபாத்தியாரின் கட்டளைகளையும் அநுசரிக்கவேண்டும். பள்ளிக்கூடநேரத்தில் சொல்வதைக் கவனமாய் கேட்டுப் பாடங்களை நன்ருய்ப் படிக்கவேண்டும். உபாத்திமாரோடும், தங்கள் பள்ளித்தோழர்களோடும், நேர்மையாகவும் யதார்த்தமாகவும் இருக்கக்கடவார்கள். வேலை விளையாட்டு விஷயங்களில் எவரோடும் வஞ்சகமின்றி நடந்துகொள்ளவேண்டும். யாவர்மட்டிலும் பட்சமாகவும் தன்னலங்கருதாது பிறருக்கு உதவிபுரியும் குணமுள்ளவர்களாகவும் இருப்பதுடன், கோபத்தை அடக்கிச் சாந்தமாயிருக்கத்தகும். தங்கள் வேதாநுஷ்டானங்களைத் தவருமல் நிறைவேற்றிப் பிறருக்கு நன்மாதிரிகையாய் ஒழுகவேண்டும். கெட்ட தோழர்களை விலக்கவேண்டும், அல்லது அவர்களை நல்லவர்களாக்கப் பிரயத்தனப்படவேண்டும்.

**543.** பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள், என்னென்ன குற்றங்களில் விழாதபடி விசேஷமாய் ஜாக்கிரதையாயிருக்கத்தகும்?

(1) உண்மைக்கும், நீதிக்கும், பிறர் சிநேகத்துக்கும் விரோதமான குற்றங்கள்.

(2) கீழ்ப்படிதலுக்கும், பள்ளிக்கூடத்து ஒழுங்குக்கும் விரோதமானவை.

(3) விநயம், கற்பு (மனச்சுத்தம்)-க்கு விரோதமானவை.

**544.** உண்மை, நீதி, பிறர் சிநேகத்துக்கு விரோதமான குற்றங்கள் எவை?

வில்லங்கத்தினின்று தங்களை விடுவிக்க அல்லது பிறரை வில்லங்கத்தில் சிக்கவைக்கும்படி பொய்சொல்லல்.

வேலையில் ஏமாற்றல்; பிறர் எழுதின மாறுத்தாரங்களைக் கள்ளத்தனமாய்ப் பார்த்தெழுதல்; விளையாட்டில் செலிப்பதற்காக ஏமாற்றுதல் அல்லது முரட்டுத்தனம் செய்தல். தங்களுக்குப் பிரியமில்லாத பிள்ளைகளைப்பற்றி அபத்தமான கதைகளை இட்டுக்கட்டி அவர்களை அவதூறுப் பேசி, மற்றவர்களுக்கும் அந்தப் பிள்ளைகளுக்கும் சண்டை மூட்டிவைத்தல்; மற்ற பிள்ளைகள் தண்டனையடையும்படி, அவர்களைக் குறும்பு செய்யத் தூண்டிவிட்டு வேடிக்கை பார்ப்பது; தனித்தனி கூட்டம், கும்பல் கட்சி சேர்த்து, தங்கள் தங்கள் கட்சியில் சேராத பிள்ளைகளை இம்சித்து அவர்கள்மேல் அதிகாரம் செலுத்தத் தேடுதல்; தங்களைவிடப் பலக்குறைவானவர்களை நையாண்டிச் செய்து, இடித்துத்தள்ளித் துன்பப்படுத்துதல், காரணமில்லாமல், சண்டை சச்சரவுக்குக் கங்கணம் கட்டி நிற்பது; மற்றவர்களுடைய பொருட்களைத் திருடுவது அல்லது கண்டெடுத்தவைகளைக் கொடுக்காமல் வைத்துக்கொள்வது.

545. அதிகாரத்துக்கும் பள்ளிக்கூடத்து ஒழுங்குக்கும் விரோதமாகச் செய்யப்படும் குற்றங்கள் எவை?

கொடுத்த கட்டளைப்பிரகாரம் நடவாமல் எதிர்ப்பது; முறுமுறுத்துக்கொண்டும், கட்டாயத்துக்காகவும் கீழ்ப்படிதல்; மற்றவர்கள் எதிர்க்கவும், கீழ்ப்படியாதிருக்கவும், கலகஞ்செய்யவும் அவர்களை உற்சாகப்படுத்தித் தூண்டிவிடுவது. பள்ளிக்கூடத்தில், இல்லாத கோரணியெல்லாம் செய்து, அவனை இடித்து, இவனைத் தள்ளி உபாத்தியாயர் பாடத்தைக் கவனமாய் நடத்தாதபடி இடைஞ்சல் பண்ணுவது. உபாத்திமார்களைப் பற்றிப் பகடி பரிகாசம் செய்து நையாண்டிபண்ணி, அவர்கள் மதிப்பைக் குறைப்பது. பள்ளிக்கூடத்தில் அது சரியாயில்லை, இது சரியாயில்லை என்று தங்களுக்குள்தானே முறையிட்டு மற்றப் பிள்ளைகள் மனதில் பள்ளிக்கூடத்து அபிமானத்துக்கு எதிரிடையான எண்ணங்களை உண்டுபண்ணி பள்ளிக்கூடத்துக்குக் கெட்டபேர் கொண்டுவருகிறது. நியாயமாய் வரவேண்டிய தண்டனைக்குத் தப்பித்தோடி ஒளிந்து மறைந்துகொள்ளத் தேடுவது. உபாத்தியாயர்மேல் இல்லாத பொய் பித்தலாட்டமெல்லாம் பெற்றோரிடம் சொல்லி, மனவருத்தமும் சங்கடமும் வருத்துவிப்பது. தங்களுடைய குற்றங்களையும் தாங்கள் அடைந்த தண்டனையையும் பெற்றோர் அறியாதபடி அல்லது கேட்கும்போது இல்லையென்று சொல்லி மறைப்பது. தங்களுடைய படிப்பு அபிவிர்த்தி, நடத்தையை குறித்து அத்தாட்சிப் பத்திரங்கள் தங்களுக்கு அனுகூலமில்லையென்று கண்டு, அவற்றைப் பெற்றோருக்குக் காட்டாமல், அவர்கள் கேட்கும்போது, அவை எங்கேயோ தவறிப்போயினவென்று புகல் சொல்லுவது. சோம்

பேறித்தனமாய்த் திரிந்துவிட்டுப் பள்ளிக்கூடத்துக்கு வராததற்கு இல்லாத சாக்குப்போக்கெல்லாம் சொல்லி, அதற்கு அநுசரணையாகப் பெற்றோர் எழுதிக்கொடுத்ததாகப் பொய் அத்தாட்சிப் பத்திரம் உண்டுபண்ணி அதைக் கொண்டுவந்து காட்டுவது. உபாத்தியாயருக்கு முகஸ்துதி கூறி அல்லது மற்றப் பிள்ளைகள் பேரில் கோள் குண்டணி சொல்லி, உபாத்தியாயருக்குத் தங்கள் மட்டில் பிரீதியும் பற்றுதலும் உண்டாக்கத்தேடுவது இவை முதலியன.

546. விநயம் கற்பு இவைகளுக்கு விரோதமான குற்றங்கள் எவை?

அசுசியான பேச்சுப் பேசுவதும், அயோக்கியமான வார்த்தைகள் சொல்வதும், அவற்றிற்குக் காதுகொடுத்துக் கேட்டுச் சிரித்துச் சந்தோஷப்படுவதும், அனுச்சாரமும் அயோக்கியமுமான அங்கசேஷ்டைகள் செய்வதும், செய்ய இடங் கொடுப்பதும்.

கெட்ட பிள்ளைகளோடு சேர்ந்து, அவர்களிடம் பாவ வழியைக் கற்றுக்கொள்வது.

இவ்விதம் அறியவந்த துர்க்காரியங்களை தாங்கள் தனித்தும் பிறரோடும் செய்வது.

இதிலும் அக்கிரமமானது, மாசற்ற மற்றச் சிறுவர்க்குப் பாவத்தைப் படித்துக் கொடுப்பது.

நல்ல பிள்ளைகள் மத்தியில் கெட்ட பிள்ளைகள் தங்கள் பாவ விதையை விதைத்துப் பரப்பிவருகிறார்களென்று அறிந்திருந்தும், அதைப்பற்றித் தலைமை உபாத்தியாயருக்குத் தெரியப் படுத்தாமல் மவுனம் சாதிப்பது.

குறிப்பு :—அற்பசொற்ப காரியத்துக்கெல்லாம் உபாத்தியாயரிடம் ஓடிப்போய் மற்றப் பிள்ளைகளைப்பற்றிக் கோள், குறைசொல்வது நல்லதல்ல. ஆனால், நல்லொழுக்கத்துக்கு இடையூறான கனமான தவறுதல்கள் நேரிடும்போது, அவற்றை நிறுத்தப் பிரயாசப்படுவதும், அதைப்பற்றி மேலதிகாரிகளிடம் தெரிவித்துக் குற்றவாளி சீர்திருத்தமடையவும், குற்றமற்றவர்களைப் பாதுகாக்கவும், பள்ளிக்கூடத்துப் பெயரைக் காப்பாற்றவும் தேடுவது, ஒவ்வொரு நல்ல பையனையும் சார்ந்த கடமையாகும்.

## 4. எஜமானனும் வேலைக்காரனும்

547. வேலைக்காரர் மட்டில் எஜமானனுடைய கடமை யாது?

எஜமானனுடைய கடமைகள் :—செய்த வேலைக்குத் தகுந்த சம்பளம், தக்க காலத்தில் கொடுப்பது; வேலைக்காரர்,

கூடுமானமட்டும் தங்கள் வேதத்தை அநுசரிக்கும்படி உதவி செய்தல்; அவர்கள் நன்றாய் வேலைசெய்யும்போது, அவர்களை உற்சாகப்படுத்தி, அஜாக்கிரதையாயிருந்தால் அவர்களைக் கண்டித்து, நல்லொழுக்கத்தில் நடக்குமாறு கவனித்து வருதல்; யோக்கியமாகவும் பட்சமாகவும் அவர்களை நடத்தி, விசேஷமாய் வியாதியாயிருக்கும்போது அன்புடன் ஆதரிக்கவேண்டும்; அவர்களை இழிமொழிகள் சொல்லித் தூஷணிக்கலாகாது (தூஷணிப்பது அவர்கள் குணத்தைக் கெடுத்ததுபோலாகும்); ஆனால் இதற்காக அவர்கள் தப்பிதம் செய்யும்போது, கண்டித்துத் திருத்தப் பின்வாங்கலாகாது. அவர்கள் தன்னண்டையில் வேலைக்கு அமர்ந்திருப்பதால், நாளுக்குநாள் நல்ல வேலைக்காரராகும்படி பார்த்துக்கொள்ளவேண்டியது; பணத்தைப் பத்திரப்படுத்தாமல் அங்குமிங்கும், போட்டு, அல்லது ஜாமான் தட்டுமுட்டுத் தானியம் வைத்திருக்கும் களஞ்சியத்தையும் செலவழிவு கணக்கையும் பரிசோதியாமல் அலட்சியம் செய்து, வேலைக்காரருக்கு பாவச்சோதனையை விளைவிக்கக்கூடாது.

548. வேலைக்காரருடைய கடமைகள் எவை?

வேலைக்காரர், தங்கள் வேலையை ஒழுங்காய்ச் செய்யவேண்டும்; எஜமான் இட்ட கட்டளைப்பிரகாரம் நடந்து, அவன் அறியவேண்டிய விஷயங்களைத் தெரிவிக்கவேண்டும்; வீட்டில் நடக்கும் சங்கதிகளைப்பற்றி வெளியாட்களிடம் பேசக்கூடாது; யாதொரு தப்பிதத்துக்காக எஜமான் கண்டித்தால், அமைதியோடு ஏற்றுக்கொண்டு தன் நடத்தையைச் சீர்திருத்தப் பிரயாசைப்படவேண்டும்; ஜாமான் வாங்குவதிலும், அதைப் பத்திரப்படுத்துவதிலும், செலவழிப்பதிலும் யதார்த்தமாயிருக்கத்தகும். அநாவசியமாய் செலவுசெய்து நஷ்டப்படுத்தலாகாது; எஜமானனுடைய குடும்பத்தைச் சேர்ந்த சகலருக்கும் மரியாதை காட்டி, அவர்களைச் சந்தோஷப்படுத்த முயலவேண்டும்.

549. செலவுக்கான ஜாமான் வாங்குவதில், வேலைக்காரன் ஏதாவது லாபம் அடையலாமா?

நாட்டு வழக்கத்தை அநுசரித்து யதார்த்தமாயிருந்தால், அல்லது எஜமானனை ஏமாற்றுதமட்டும், இது செய்ய விக்கினமில்லை. அதாவது: லாபத்தை முன்னிட்டு, கீழ்த்தரமான ஜாமானை அதிகக் கிரயத்துக்கு வாங்காதிருக்கும் பரியந்தம், யாதொரு பொல்லாப்பில்லை. ஆனால், எஜமானனுக்கு எவ்விதத்திலும் நஷ்டம் உண்டுபண்ணுவது தகாது; ஏனெனில் நஷ்டம வருவிப்பதற்கும், திருடுவதற்கும் யாதொரு வித்தியாசமில்லை. [கமிஷன், லஞ்சம் இவற்றைப்பற்றி 571–589 கேள்விகளைக் காண்க.]

550. தொழிற்சாலைகள் அமைத்து நடத்திவருகிறவர்களுக்கும், அவற்றில் வேலைசெய்யும் தொழிலாளருக்கும் ஏற்பட்டுள்ள கடமைகள் எவை?

வேலை வித்தியாசத்துக்குத் தகுந்தாப்போல், வேலைக்காரருக்கும் எஜமானனுக்கும் உள்ள கடமைகள்தான் இவர்களுக்கும்.

---

## 2-ம் அதிகாரம்

## தொழில் விஷயமாயுள்ள கடமைகள்

### 1. வியாபாரிகள், வர்த்தகர்

551. வியாபாரி, வர்த்தகன் இவர்களுடைய கடமை யாது?

வழக்கமாய்த் தங்களிடம் வாங்குகிறவர்களுக்கு, சீரான கிரயத்துக்கு நயமான ஜாமான்களைத் தருவித்துக் கொடுப்பதும், சொன்ன வாக்குப்பிரகாரம் நடப்பதும், வியாபாரி, வர்த்தகருடைய கடமை.

552. நயமான ஜாமான் எது?

மறைவான குறைகளின்றி, வெளிப்பார்வைக்குத் தோன்றுவதுபோல், வாஸ்தவத்திலும் அவ்விதமே நல்ல பொருளாயுள்ளது. இதுதான் வாங்குகிறவன் விரும்புவதும், விற்கிறவன் கொடுப்பதாகப் பிரஸ்தாபப்படுத்துவதும்.

553. சீரான விலை எது?

தன் தொழிலைக்கொண்டு வியாபாரிக்கு சீராய் தன் பிழைப்பு நடக்கும்படியான கிரயம்; வாங்குகிறவனும் விற்கிறவனும் இருவரும் பொதுப்பட "சீரானதாக" அங்கீகரித்திருக்கும் கிரயமே சீரான விலை எனப்படும்.

நமது கடையில் வழக்கமாய் வாங்கிப் போகிறவனுடைய மனதிருப்தியே நமது வியாபாரத்துக்கு உத்தமமான விளம்பரம்—தொழிலில் சித்திபெறுவதற்கு இதுவே ஏற்ற மர்மம். ஒருதடவை மனதிருப்தியோடு வாங்கிப்போகிறவன், எப்போதும் திரும்பிவருவான். யதார்த்தம், உத்தம கொள்கை; அதுவே, அறநெறியின் ஆப்த போதனையுமாகும்.

**554.** கரார் விலை ஏற்படுத்தக் கடமையா?

கரார் விலை ஏற்படுத்தக் கண்டிப்பான அவசியமில்லை. வழக்கத்தை அநுசரித்து, விலையில் சிறிது ஏற்றத்தாழ்வு இருப்பதிலும், ஆரம்பத்தில் ஏற்றிச் சொல்லி, பிறகு மெள்ள மெள்ள விலையைக் குறைப்பதிலும் பொல்லாப்பில்லை. ஆனால், இது பற்பல சங்கடங்களுக்கும் தொந்தரைகளுக்கும் வழியானது. கரார் விலையே, வாங்குகிறவனுக்கும் விற்கிறவனுக்கும் துன்பமில்லாத ஏற்பாடு.

**555.** வாங்குகிறவனுக்கு ஜாமானுடைய மதிப்பும் கிரயமும் தெரியாததைக் கண்டு, கீழ்தரமான ஜாமான்களைக் கொடுக்கலாமா? அல்லது அதிகக் கிரயம் கேட்கலாமா?

கூடாது; இது பிறர்சிநேகத்துக்கு விரோதமானதுமன்றி, அநேக சமயங்களில் அநீதியுமாகக்கூடும்.

**556.** பிறருடைய அவசியத்தைக்கண்டு அதிக லாபம் அடையலாமா?

இதுவும் அதே முகாந்திரத்தினிமித்தம், செய்யத்தகாது. பிறர்சிநேகத்துக்கும் நீதி நியாயத்துக்கும் விரோதமான காரியம் இது.

**557.** பிறருக்கு அவசரமான சமயங்களைக் காட்டும் சில உதாரணங்கள் கூறு.

சாப்பாட்டு ஜாமான் அல்லது ஒரு மருந்து ஒருவனுக்கு வெகு அகத்தியமாய் வேண்டியதிருக்கிறது. வேறு எந்தக் கடையிலும் அது அகப்படாது.

ஒருவனுக்கு வண்டி அவசரம்; ஒரு வண்டி தவிர வேறே கிடையாது.

பணம் அவசரம், கடன் கொடுப்பதற்கு வேறொருவனுமில்லை.

வண்டிச்சக்கரம் அல்லது அச்சு நடுவழியில் பழுதாய்ப் போயிற்று; அதை மராமத்துச் செய்ய வேறு யாரும் சமீபத்தில் இல்லை.

ஒரு இடத்துக்குப்போக உன்னைத்தவிர வழியைக் காட்டக்கூடியவன் ஒருவனுமில்லை.

பாலமில்லாத ஆற்றைக்கடக்க ஒரேயொரு தோணி மாத்திரம் இருக்கிறது.

இப்பேர்ப்பட்ட சந்தர்ப்பங்களில், பிறருடைய அவசர நிலைமையைக் கண்டு, அகாத விலை கேட்பதும், நாம் செய்யும் உதவிக்கு மிஞ்சினவிதமாய்ப் பணம் பிடுங்குவதும், பிறர்சிநேகத்துக்கும் நீதி நியாயத்துக்கும் ஏற்காத அக்கிரமம்.

558. ஜாமான் கிடைப்பது அருமையானதுபற்றி, விலையை உயர்த்தலாமா?

இரண்டு முகாந்தரங்களின் நிமித்தம் மாத்திரம் இது செய்யலாம்:—

முதலாவது: அகவிலை ஏறிக்கிடந்தால், வியாபாரியும் சீராய்ப் பிழைப்பதற்கு, அதிக வருமானம் சம்பாதிக்கவேண்டியவனுகிறுன். இரண்டாவது: ஜாமான்கள் வெகு அருமையாயிருந்தால் விலைப்பொருட்களும் வெகு சொற்பமாகத்தானிருக்கும்; ஆகையால், சீராய் ஜீவிப்பதற்கு வழக்கம்போல் அதே லாபம் மாதாந்தரம் அடையக்கூடாமற்போகும். இச்சந்தர்ப்பங்களில், தன் வருமானம் தன் செலவுக்கு ஒத்துப்போகும்படி, விலையை உயர்த்தவேண்டியதாகும். ஆனுல், மற்ற ஜனங்களின் அவசரத்தைப்பற்றிமாத்திரம் அதிக லாபம் அடைய விரும்பி விலையை உயர்த்துவது, பிறர்சிநேகத்துக்கும் நீதிக்கும் அடாத காரியம்.

559. வியாபாரிகள் யாவரும் ஒன்றுகூடி ஒப்பந்தம் செய்து விலையை உயர்த்தவாகிலும் அல்லது வியாபாரம் முழுவதிலும் தங்கள் கையில் சிக்கும்படியாகிலும் செய்யலாமா?

கூட்டுறவு, ஒப்பந்தங்களில் ஜனங்கள் கட்டாயமாய் அந்த விலைக்குத்தான் வாங்கி ஆகவேணுமென்ற நிர்ப்பந்தம் ஏற்படாமல், சீரான விலைக்குச் சகலமும் அவர்களுக்குக் கிடைக்கிறதாயிருந்தால், யாதொரு பொல்லாப்பில்லை. ஆனுல் ஜனங்களுடைய அவசரம் அல்லது புகலின்மையை, அதிக லாபமடையச் சாதனமாக உபயோகித்தால், விசேஷமாய் பஞ்ச காலங்களில், போஜன பதார்த்தங்களின் விலையை உயர்த்தித் திரண்ட ஆஸ்தி சம்பாதிக்கத் தேடினுல், இந்தவிதமான கூட்டுறவும் ஒப்பந்தமும் அடாத அக்கிரமம் என்றே சொல்லவேண்டும்.

560. இதர கடைகள் அழிந்துபோகிறதாயிருந்தாலும் யதார்த்தமும் நிர்ப்பந்தம் இல்லாததுமான போட்டி வியாபாரம் செய்யலாமா?

(482, 484 கேள்விகளைக் காண்க)

561. வியாபார விளம்பரங்கள் செய்வது நல்லதா, கெட்டதா?

நயமான ஜாமான்கள் சீரான விலைக்கு கிடைக்கும் என்று ஜனங்களுக்குத் தெரியப்படுத்தும்வண்ணம், அறிக்கை செய்வது நல்ல காரியம். ஆனுல் கீழ்த்தரமான ஜாமான்களை ஏறின விலைக்கு ஜனங்கள் வாங்கும்படி, அவர்களை ஏமாற்றுவதற்கு இது வழியாயிருந்தால், அப்பேர்ப்பட்ட விளம்பரம் தகாத காரியமாகும்.

562. பாவ உணர்ச்சியை உண்டாக்குகிற அல்லது பாவம் செய்யத் தூண்டுகிற பொருட்களை வியாபாரிகள் விற்கலாமா?

அவ்விதமான ஜாமான்களை ஒரு வியாபாரியும் விற்கக் கூடாது.

563. அவ்விதமான ஜாமான்கள் எவை என்பதற்குச் சில உதாரணங்கள் சொல்லு.

வேதத்துக்கும், நல்லொழுக்கத்துக்கும் எதிரிடையான புஸ்தகங்கள்; துர்விஷயமான காரியங்களைச் சிங்காரித்து வர்ணிக்கும் கதைகள்; அசுசியான காரியங்களை மனதிற் படும்படி விளக்கிக்காட்டிப் பாவத்துக்கு ஏதுகரமாயிருக்கும் புஸ்தகங்கள்; வீண் சகுண சாஸ்திரம், மாந்திரீகம் இவைகளை விவரிக்கும் புஸ்தகங்கள்; சிற்றின்பம், காமம் முதலான விலக்கப்பட்ட சரீர இச்சைகளுக்கு உபகரணமான அவலட்சண ரூபங்கள், படங்கள் சித்திரங்கள்; துர்விஷயங்களுக்காக உபயோகிக்கும் மருந்து, கருவி முதலானவை............

## 2. கவி காப்பியம் முதலான நூல்களும், சிற்ப சாஸ்திர சம்பந்தமான விஷயங்களும்

564. போதனை பத்திரிகைகள், சமாச்சாரப் பத்திரிகைகள் இவற்றின் ஆசிரியருடைய கடமை யாது?

பத்திராதிபர்கள், வேதத்துக்கும் நல்லொழுக்கத்துக்கும் விரோதமான விஷயங்களைத் தங்கள் பத்திரிகைகளில் பிரசுரிக்கக்கூடாது. பிரயோசனமற்ற, குருட்டாட்டமான அல்லது பாவத்துக்குரிய பொருட்களை விளம்பரப்படுத்தலாகாது. பார்ப்போர் மனதை மயக்கக்கூடிய விகாரமான படங்களை அச்சிடக் கூடாது. சுருங்கச் சொல்லவேணுமென்கில், தங்களுக்குத் தெரிந்தமட்டும் தங்கள் திறமை சாமார்த்தியத்தை, நன்மை பயக்குமாறு உபயோகிக்க வேணுமேயல்லாது, தின்மைக்காகப் பிரயோகம் பண்ணலாகாது. ஜனங்கள் கெட்ட காரியங்களை வாசிக்கப் பிரியப்படுகிறார்கள் என்பது, பத்திராதிபர் அவ்விஷயங்களைப் பிரசுரிப்பதற்கு முகாந்தரமாகமாட்டாது.

565. பிரசுரம் செய்வோர், நூலாசிரியர், சித்திரக்காரர், சிற்பிகள் இவர்களின் கடமை யாது?

பத்திராதிபர்களுடைய கடமைதான் இவர்களுக்கும், வேதத்துக்கும் நல்லொழுக்கத்துக்கும் எதிரிடையான எது விஷயமும் செய்யலாகாது. "அழகை" முகாந்தரமாகக்கூறி, மோசகர

மான உணர்ச்சிகளையும், ஆசைகளையும் ஆசாபாசங்களையும் கிளப்பிவிடுந்தன்மையுள்ள பொருட்களைச் சித்திர சிற்பன்னர் சித்தரிக்கவும் அமைக்கவும் கூடாது.

### 3. துர்நடத்தைக்கான தொழில்கள்

*566. முற்றும் துர்நடத்தைக்கான தொழில் யாதாகிலும் உண்டா?*

யாருக்கென்கிலும் சரீர அல்லது ஆத்துமக்கேடு வருவிக்கும் இயல்புள்ள தொழில் முற்றும் துர்நடத்தைக்குரியது. யாதாமொரு பாவத்துக்குத் தூண்டுதலான, அல்லது குணத்தைக் கெடுக்கும் தன்மையுள்ள, எந்தத் தொழிலும் இத்தகையதே.

*567. இதற்குச் சில திருஷ்டாந்தங்கள் எவை?*

பல ஸ்திரீ அல்லது தாசிகள் வீடுகளை வைத்திருத்தல்; பகிரங்கமாக துர்நடத்தையாக ஜீவித்தல்; சூதாடும் அரண்கள், கஞ்சா குடிக்கும் அரண்கள், அல்லது துர்நடத்தைக்குரிய விளையாட்டு வேடிக்கை நடத்தும் கட்டடங்கள், இடங்களை அமைத்து வைத்திருத்தல்; கெட்ட புஸ்தகங்கள், நாடகங்கள், பாட்டுக்கள், படங்கள், கண்காட்சிப் பொருட்கள் இவைகளைச் செய்தல்; மாந்திரீகம் கைரேகைபார்த்தல், குறி சொல்லுதல் முதலான குருட்டாட்டத் தொழில்கள்; துர்நடத்தைக்குப் பிரயோகமான அல்லது குருட்டாட்டமான பொருட்களைச் செய்வது, மோசடியான மருந்து மாயங்கள் செய்வது—இவை முதலியன.

*568. நன்மையும் தின்மையும் கலந்துள்ள தொழில்களைப் பற்றி என்ன சொல்வது?*

இரண்டும் கலந்துள்ளவை பின்வருபவன:—பொது ஜன சாலை, கள்ளு சாராயம் முதலான குடி வகைகள் விற்கும் இடம், நாடகசாலைகள், வீணைவாத்திய சாலைகள், கண்காட்சி சாலைகள், பந்தய ஓட்டம் முதலியன. இவை யாவும் பிரயோசனகரமான அல்லது நியாயமான முகாந்தரத்தின்பொருட்டு ஏற்பட்டவை. ஆதலால், தம்மிலே அநுஷ்டிக்கக்கூடியவைதான். ஆனால் அநேக கேடுகளுக்கும் அவை காரணமாயிருப்பதால், அவற்றைப் பரிபாலித்துவருபவர்கள், அல்லது அவற்றில் தொழிலாயிருப்பவர்கள் தங்களாலியன்றமட்டும் தின்மையைக் குறைக்கும்படி பிரயாசப்படவேண்டும். தனது தொழிலின் காரணமாக பெருத்த கேடுகள் விளைகின்றனவென்று ஒருவன் கண்டால், அந்தத் தொழிலை மனச்சாட்சிக்குப் பங்கமின்றி தொடர்ந்து நடத்துவது அசாத்தியம். சில சமயம் ஒரு முகாந்

தரம் அவன் சொல்லிக்கொள்ளக்கூடும். அதாவது: "மற்றநேக சாலைகளைவிட எனது சாலை நல்லதானது; நான் என்னுடையதை சாத்திப்போட்டால், இதிலும் கேடுகெட்ட இடங்களுக்கு ஜனங்கள் போவார்கள்; ஆகவே, என் சாலையை நான் சாத்துவதினால் நன்மை உண்டாவதற்குப் பதிலாக அதிக தின்மைதான் உண்டாகும்" என்று ஒருவாறு நியாயமான காரணம் கூறலாம்.

569. பணம் கடனுகக் கொடுத்து வட்டி வாங்குவது தப்பிதமா?

பணம் கடன் கொடுப்பது தன்னிலே பிரயோசனமான காரியம்; ஆகையால் தப்பிதமல்ல. ஆனால் அதிக தின்மைக்கும் அது இடம் தருகிறது. கடன் வாங்கிக்கொள்ளலாம் என்ற திடாரிக்கங்கொண்டு, பணம் செலவழிப்பதிலும், சூதாடுவதிலும் ஜனங்களுக்கு அலட்சியம் அஜாக்கிரதை ஏற்பட்டுவிடுகிறது. வாங்கின கடனை உத்தரிக்க வழியில்லாமல் வெகு சீக்கிரம் நசித்துப்போகிறார்கள். கடன் கொடுக்கிறவர்கள் தங்களிடம் வருகிறவர்களுடைய அவசரத்தைக்கண்டு "கந்தவட்டி"யென்று கடூரமான வட்டி வசூல்பண்ணி, அநியாயமான லாபம் அடையத் தேடி, கடன்காரனை அலட்டி நிர்ப்பந்தம்பண்ணி, அவன் உயிரை வாங்கிப்போடுகிறார்கள். ஆகையால் பிறர்சிநேகத்தையும் நீதியையும் அனுசரித்துமாத்திரம் பணம் கடன் கொடுக்கும் தொழில் செய்யலாம்.

570. கடன் கொடுப்பவன் பிறர்சிநேகத்தையும் நீதியையும் அனுசரிப்பதெப்படி?

தன் பணத்தைக் கொடுப்பதில் தனக்கு நேரிடக்கூடிய மோசத்துக்கு ஈடாகவும், தான் யதார்த்தவழியில் சீராய் பிழைப்பதற்குத் தகுந்த வருமானம் தரக்கூடியதாகவும் சீரான வட்டிமாத்திரம் விதிக்கலாம். பணம் கேட்க வருகிறவர்கள் அறிவிலிகள், படியாதவர்கள் அல்லது பரம ஏழைகள் என்பதைக் கண்டு, இதுதான் சமயம் என்று அகாத வட்டித் திட்டம் செய்யக்கூடாது.

### 4. கமிஷன், கைலஞ்சம் முதலியன

571. வேலைக்காரர், தொழிலாளிகள் என்னென்னவிதமாய்ப் பிரத்தியேகமான லாபம் தேடக்கூடும்?

இது மூன்று விதமாய் நேரிடக்கூடும்; மேல் வருமானம், கமிஷன், கைலஞ்சம்.

572. மேல் வருமானம் என்பது யாது?

யாதாமொரு தொழில் செய்வதில் மீதிப்பட்டதை வேலைக்காரன் எடுத்துக்கொள்ளல்.

573. சில உதாரணங்கள் சொல்லு.

தையல்காரன் துணி வெட்டும்போது விழும் துண்டுகள்; வீட்டிலுள்ளவர்கள் யாவரும் சாப்பிட்டானபிறகு மீதியாயிருக்கும் போஜனம். ஏதோ ஒரு ஜாமான் தட்டுமுட்டு செய்வதற்கு ஏற்பட்ட விகிதத்தில் மீதிப்பட்ட பணம். சீர்மார்த்தியமாய்க் காரியங்களை நடத்தினதினால் செலவாகவேண்டிய தொகையில் மீதிபிடித்தது—இவை முதலியன.

574. இந்தவிதமான மிச்சம் மீதியை வேலைக்காரன், தொழிலாளி தனக்கு வைத்துக்கொள்ளலாமா?

உன்னை வேலைக்கு அமர்த்தியிருக்கிறவனுக்குத் தெரிந்து, இது ஓர் வழக்கமாயிருந்தால், அவ்விதம் வைத்துக் கொள்வது தப்பிதமல்ல. ஆனால் மிச்சம் மீதி பிடிப்பதற்காக வஞ்சகமாய் வேலை செய்யக்கூடாது.

575. கமிஷன் என்றால் என்ன?

ஒரு குத்தகையான வேலை கிடைப்பதற்காக அல்லது ஒரு வேலை அதிசீக்கிரமாய் முடியும்பொருட்டு, இப்படியே யாதாமொரு லாபத்தை முன்னிட்டு, ஒருவனுக்குக் கொடுக்கும் பணம்.

576. கமிஷன் கொடுப்பதும் வாங்குவதும் சரியா?

இந்த வழக்கம் ஆக்ஷேபனைக்குரிய கெட்ட வழக்கம். வழக்கமானதை நிறுத்தமுடியாமல்தான் இது அங்கீகரிக்கப்பட்டு வருகிறது. அது எப்படியானாலும், கமிஷன் வாங்குகிறவன் நீதிக்கும் பிறர்சிநேகத்துக்கும் விரோதமானதொன்றும் செய்யாதபடி வெகு ஜாங்கிரதையாயிருக்கவேண்டும்.

577. கமிஷன் வாங்குகிறவன் என்ன வகையில் நீதியை அநுசரிக்கவேண்டியது?

கமிஷன் கொடுத்தவனுடைய நன்மையைக் கருதி, அவனுக்கு இரண்டகமின்றி அவன் விரும்பும் ஜாமான்கள் நயமானதாகக் கிடைக்கவும் செய்யச்சொன்ன வேலை பழுதற முடிந்திருக்கும்படியாகவும், அவன் கொடுத்த பணத்துக்குத் தகுந்த கைம்மாறு அடையும்படியாகவும், யாதொரு வகையில் அவனுக்கு மோசம் உண்டாகாதபடியும் தன்னிடம் நம்பி ஒப்புவித்த வேலையை வெகு ஜாக்கிரதையாகச் செய்யவேண்டும்.

578. பிறர்சிநேகத்தை எவ்விதம் அநுசரிக்கத்தகும்?

ஒரு குத்தகை விடவேண்டிய விஷயத்தை உதாரணமாய் எடுத்துக்கொள்வோம். அந்தக் குத்தகையை ஒப்புக்

கொள்வதற்காகப் பலபேர் முன்னேறி வருவார்களானால், இவர்கள் யாவரையும் பாரபட்சமின்றி நிதானிக்கவேண்டும். பிறருக்கு நஷ்டம் வருவிக்கக்கூடிய சகல வழி வகையையும் விலக்க வேண்டும்.

579. லஞ்சம் என்பது யாது?

நமக்குச் சகாயமாக, ஒரு அதிகாரி, உத்தியோகஸ்தன் அல்லது வேலைக்காரன் தன் கடமைக்கு விரோதமாய் யாதாமொரு காரியம் செய்யும்படியாக அவனுக்குக் கொடுக்கும் பணம் லஞ்சமென்கிறோம்.

580. சில உதாரணங்கள் கூறி இதை விளக்கிக்காட்டு.

அநியாயத் தீர்ப்புச்சொல்லி, குற்றமற்றவனைத் தண்டிக்கும்படியாக, அல்லது குற்றவாளியை விடுதலையாக்கும்படியாக, நியாயாதிபதிக்குப் பணம் கொடுப்பது.

பொய்யான அத்தாட்சிப்பத்திரம் கொடுக்கும்படியாக அல்லது பொய்யான ரிப்போர்ட் எழுதும்படியாக ஒரு மாஜிஸ்திரேட்டுக்குப் பணம் கொடுப்பது.

உத்தியோகத்தன்மையில் அறிந்த ஓர் இரகசிய சங்கதியை வெளியிடும்படியாக ஒரு உத்தியோகஸ்தனுக்குப் பணம் கொடுப்பது.

போலீசார் தாங்கள் அறிந்த குற்றத்தை அறியாதது போலே விட்டுவிடும்படியாகவும் அல்லது குற்றமில்லாத மனிதன் பேரில் அபாண்டமாய்க் குற்றத்தைச் சுமத்தும்படியாகவும் அவர்களுக்குப் பணம் கொடுப்பது.

ரெயில்வண்டியில் டிக்கட்டில்லாமல் நீ பயணம் செய்தாலும் உன்னை விட்டுவிடும்படியாக ரெயில் வேலைக்காரனுக்குப் பணம் கொடுப்பது.

திருட்டுத்தனமாய் தீர்வை கொடுக்காமல், விலக்கப்பட்ட ஜாமான்களை ஒரு தேசத்திலிருந்து வேறொரு தேசத்துக்குக் கொண்டுபோகும்படியாகத் "தீர்வை இலாகா" அதிகாரிக்குப் பணம் கொடுப்பது.

பத்திராதிபர், அபத்தமான விஷயங்களைப் பத்திரிகையில் பிரிசுரிக்கும்படி, அவருக்குக் கொடுக்கும் பணம்.

தவறுதலான, தப்பறையான அல்லது அடாத எது காரியமும் செய்யும்படி யாதாமொருவனுக்குக் கொடுக்கும் பணம் —இவ்வபோன்ற யாவும் லஞ்சம் எனப்படும்.

581. எப்போதாகிலும் லஞ்சம் கொடுப்பது சரியாகுமா?

ஒருக்காலும் சரியாகாது; லஞ்சம் கொடுப்பதும் வாங்குவதும் எப்போதுமே பாவம்.

582. இதை விரிவாய் விளக்கிக்காட்டு.

லஞ்சம் கொடுப்பது பாவம் ; ஏனெனில் : முதலாவது அது அநியாயமான நோக்கத்துடன் கொடுக்கப்படுகிறது ; இரண்டாவது வேறொருவன் தன்னுடைய கடமையை மீறுவதற்கு அது ஏதுகரமாகிறது. லஞ்சம் வாங்குவது பாவம் ; ஏனெனில் அது அடாத காரியம் செய்வதற்கு உடன்படுவதாகும்.

583. லஞ்சம், கமிஷன் இவை இரண்டுக்குமுள்ள வித்தியாசம் என்ன ?

லஞ்சம் அடைந்துதருகிறது, தப்பிதமான அல்லது அநியாயமான காரியம் ; கமிஷனால் கிடைப்பது, ஓர் சகாயம்.

யாதாவது அநியாயமான நோக்கம் கமிஷன் கொடுப்பதில் ஏற்படுமானால், அது லஞ்சம் எண்ணப்படுமேயல்லாது வேறல்ல.

584. திருட்டுக்கூலி என்பது யாது ?

யாதாமொரு வில்லங்கத்தினின்று ஒருவன் தப்பித்துக் கொள்வதற்காக, அவன் லஞ்சம் அல்லது கமிஷன் கொடுக்கும்படி அவனைக் கட்டாயப்படுத்துவது.

585. இதற்குச் சில உதாரணங்கள் எவை ?

எனக்கு ஒரு இரகசியச் சங்கதி தெரியும். அதை நான் வெளியிட்டால், ஒருவனுக்குப் பொல்லாப்பு வரும். இதையறிந்து, "எனக்கு ரூ. 100 கொடு ; அல்லாவிட்டால், உன் சங்கதியைப் பிரஸ்தாபப்படுத்திவிடுவேன்" என்று அவனைப் பயமுறுத்துவது.

ஒருவனுடைய தொழிலை நாசப்படுத்த எனக்குச் சக்தி இருக்கிறது. ஆகையால், "எனக்குப் பணம் கொடுத்தால் சரி, அல்லாவிட்டால் உன் தொழிலைப் பாழாக்கிப்போடுவேன்" என்று அவனைப் பயமுறுத்துவது.

ஒரு தொழிலாளியை வேலையைவிட்டு நீக்கிப்போட எனக்கு வல்லமை உண்டு. "உன் சம்பளத்திலிருந்து எனக்கு இவ்வளவு கொடுக்காவிட்டால், உன்னை வேலையிலிருந்து தள்ளிப் போடுகிறேன் பார்" என்று அவனுக்குப் பயமுறுத்துகிறது.

பயமுறுத்தாமல், கட்டாயப்படுத்தி வாங்கும் திருட்டுக் கூலிக்குச் சில உதாரணங்கள் பின்வருமாறு :—

ஒரு பார்சல் அல்லது ஜாமான் என் விலாசத்துக்கு ரெயில்வே ஸ்டேஷனில் வந்திருக்கிறது. போய்க்கேட்டவுடனே அதைக் கொடுக்காமல், ஏதாவது கூலி என்னிடமிருந்து பெற்றுக்

கொள்ள விரும்பி, அந்த 'ஸ்டேஷன்மாஸ்டர்' அல்லது 'கிளார்க்' காலதாமதம் செய்கிறார்.

பற்பல வேலைகளை மேல்பார்ப்பதற்காக நியமகம் பெற்ற "இன்ஸ்பெக்டர்", "அதிலே சொத்தை இதிலே சொள்ளை" என்பதாக ஒன்றுமில்லாத காரியத்துக்கெல்லாம் கோபதாபப்படுகிறார். கையில் வெள்ளையை (பணம்) நீட்டின வுடன் குற்றமெல்லாம் பறந்துபோய்விடுகிறது. வெகு சாந்த முடன், எல்லாம் சரி, சரி என்று போய்விடுகிறார்.

பொதுப்பட, "யாதாமொருகாரியம் செய்யக் கடமைப் பட்டவர்கள், அதை உனக்குச் செய்து கொடுக்குமுன் அவர் களுக்கு ஏதாவது பணம் நீட்டவேண்டியிருந்தால்," இதெல்லாம் திருட்டுக்கூலிதான்.

586. மேல்வருமானம், கமிஷன், இவற்றைப்பற்றிப் பொது வாய் நாம் அறியவேண்டியதென்ன?

இந்தவிதமான ஏற்பாடு சகலரும் அருவருக்கத்தக்கது. பற்பல திருட்டுத்தனத்துக்கும், பொய், புரட்டுப் பித்தலாட்டத் துக்கும் இது வழியாகிறதுமன்றி, அநியாயத்துக்கும் வஞ்சகத்துக் கும் காரணமாகிறது. இது தவிர, ஒருவனுடைய குணபான்மை யும் சுயமதிப்பும் கெட்டுப்போகின்றன. "தகுந்ததை மாத்திரம் செய்வது யோக்கியம்" என்கிற எண்ணம் எளிதில் அவனைவிட்டு நீங்கி, வெகு சீக்கிரம் அடாததும் அக்கிரமுமான அப்பியாசங் களில் பழக்கப்பட்டுப்போவான்.

587. "எல்லோரும் அப்படித்தான் செய்கிறார்கள். நான் வேறுவிதமாய்ச் செய்தால், சுற்றுமுற்றும் துன்பமாயிருக்கும். நான் என்ன செய்வது" என்று சில தொழிலாளிகள் சொல்லக் கூடும். அப்படியே, ஒருவன் மற்றவர்களிலும் சொற்பக் கிரயத் துக்கு வேலையை முடித்துக் கொடுத்து அந்த வேலைக்குக் குறைந்த விலை சொல்லுகிறான். இதை பார்த்த மேலதிகாரிகள், அத்தகைய வேலைக்கு ஏற்கனவே ஏற்பட்டிருந்த கூலி விகிதத்தை எல்லாருக்கும் ஒருபடக் குறைத்துப்போடுகிறார்கள். சாமார்த்தியக் குறைவுள்ள தொழிலாளிகள், இந்தக் குறைந்த கூலிக்கு வேலைசெய்ய இயலாது என்று கண்டு, மேற்கூறிய தொழிலாளியை, எல்லாரும் சேர்ந்து, சதிகாரப்பயல் என்பதாகத் தூஷணித்து, அவனோடு யாதொரு பழக்கவழக்கம் வைத்துக் கொள்ளாமல் அவனைத் தனியே விட்டுவிடுவார்கள். அப்போது என்ன செய்வது?

காரியம் இப்படியானால், "ஊருடன் ஒத்துவாழ்" என்பதாக, எல்லோரோடும் இணங்கிப்போகவேண்டியதுதான்.

ஆனால் தன் மதிப்பைக் கெடுத்துக்கொள்ளாதபடி, விசேஷமாய் அடாதது என்று திட்டமாய்த் தெரிகிற விஷயங்களில் கலந்து கொள்ளாதபடி சதா ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்.

**588.** மேல்வருமானம், கமிஷன் என்னும் இந்த ஏற்பாடு நடந்துவருவதற்கு ஏதாவது நியாயமுண்டா?

வேலை இடுகிறவர்களுக்கு, இந்த ஏற்பாடு நடந்து வருகிறதென்று தெரியும். அதிகப் பணச்செலவின்றி அதை நிறுத்தவும் முடியாது என்றறிந்து, தெரிந்தும் தெரியாததுபோல் விட்டுவிடுகிறார்கள். ஆகையால் வேலை இடுகிறவர்களின் பூரண சம்மதத்தின்மேல் இது நடக்காவிட்டாலும், அவர்களுக்குத் தெரிந்திருக்கிறதினால் முழு அநியாயம் என்று சொல்ல வழியில்லை. இது தவிர, வேறு நியாயம் கிடையாது.

**589.** ஒப்பந்த விளக்கம் அல்லது கட்டுப்பாடு யாது?

நம்மால் ஒருவனுக்கு ஆகவேண்டிய அநுகூலம் அல்லது லாபம் கிடைக்காதபடி ஒப்பந்தமாய் விலகிக்கொண்டு, நாம் கேட்கிற காரியத்துக்கு அவன் சம்மதிக்கும்படி கட்டாயப் படுத்துவதாகும். நாம் கேட்கிற காரியம் நீதியும் நியாயமுமான தாகில், இவ்விதம் செய்யலாம்; அநியாயம் அல்லது தப்பிதமானால் இவ்விதம் செய்யத்தகாது.

---

## 3-ம் அதிகாரம்

## உத்தியோகக் கடமைகள்

### 1. நீதி செலுத்துதல்

**590.** மாஜிஸ்திரேட், வக்கீல், போலீஸ் இவர்களுக்குப் பொதுவான கடமை யாது?

சட்டத்தை அறிந்து, சட்டப்பிரகாரம் நீதி செலுத்த வேண்டும், அல்லது நீதி செலுத்தும்படி உதவியாயிருக்க வேண்டும். முகத்தாட்சணியம் உதவாது.

**591.** நியாயாதிபதி அல்லது மாஜிஸ்திரேட்டின் கடமை என்ன?

உத்தியோகத்தை ஒப்புக்கொள்ளுமுன், நியாயாதிபதி அல்லது மாஜிஸ்திரேட் சட்டத்தை நன்றாய் அறிந்திருக்க

வேண்டும். ஜாக்கிரதையோடும் கவனத்தோடும் அதைக் கையாளவேண்டும். அத்தாட்சியைச் சரியாய் சீர்தூக்கிப் பார்த்து, அதற்குத் தகுந்தவண்ணம் தீர்மானம் சொல்லவேண்டும். குற்றவாளியாக ரூபிக்கப்பட்டவனை விடுதலை செய்யவும், குற்றம் ரூபிக்கப்படாதபோது தண்டிக்கவும் தகாது. ஆள், அந்தஸ்து, சிநேகிதன், உறவினன் என்கிற தாரதம்மியம் பார்க்கக்கூடாது. எது காரணம்பற்றியும், லஞ்சம் வாங்கலாகாது.

குறிப்பு :—ஒரு தேசத்தின் சீரும் சிறப்பும், அங்கு நீதி செலுத்துகிறவர்களுடைய நேர்மை எதார்த்தத்தில் அடங்கியுள்ளதென்கலாம். மாஜிஸ்திரேட்டும், போலீசாரும் எதார்த்தமில்லாதவர்களாய், லஞ்சம் வாங்குகிறவர்களானால், அத்தேசத்தில் உயிர் பிழைப்பதும், தன் உடமையைக் காப்பாற்றுவதும், நிர்ப்பந்தமின்றியிருப்பதும், மகா கடினம் ; வஞ்சகமும், கபடு தந்திரமும் சுயராச்சியம் செலுத்தும் ; ஜனசமூகமும் வேருடன் கெடும். "கொடுங்கோன் மன்னன் வாழும் நாட்டிற் கடும்புலி வாழும் காடு நன்றே" என்று அதைப்பற்றிச் சொல்லத்தகும்.

*592.* குற்றவாளியிடம் வக்கலாத்து வாங்கி எந்த வக்கீலும் அவனுக்கு சனுவாகப் பேசலாமா ?

எதார்த்தமாய் இவ்விதம் செய்யலாம். அதாவது : "கோர்ட்டில் கூறப்படும் அத்தாட்சி திருப்தியாயிருந்தால் மாத்திரம் குற்றவாளி தண்டிக்கப்படவேண்டும்" என்பது சட்டம். ஆகையால் குற்றவாளிக்கு விரோதமாய் ஏற்படுகிற அத்தாட்சி போதாது, திருப்தியில்லை என்று காட்ட வக்கீல் பிரயாசப்படலாம். ஆனால், இதற்காக யாதொரு வஞ்சனை செய்யலாகாது ; கள்ளச் சாட்சிகளைக்கொண்டு பொய்ச் சத்தியம் செய்யலாகாது ; சத்தியப்பிரமாணமாய்க் கேட்கிற சங்கதியை மறைக்கக்கூடாது.

*593.* வக்கீல் தன் தொழில் நடந்து தனக்கு வருமானம் அதிகரிக்கும்படி, வியாச்சியங்களையும், விவகாரங்களையும் ஜனங்களுக்குள் கிளப்பிவிடலாமா ?

நீதியும் ஒழுங்கும் நெறிதவறாது நடந்தேறும்வண்ணம், அநியாயம் மேற்கொண்டு போகாதபடி, மெய்யான காரணம் இருக்கும்போது, வியாச்சியம் செய்ய ஆலோசனை சொல்லலாமே யல்லாது, ஜனங்களுடைய கெடுபுத்தியைக் கிளர்ச்சிபண்ணி, அனுவசியமான மனத்தாங்கல்களை விளைவித்து வியாச்சியங்களுக்கு வழி உண்டுபண்ணுவது, நல்லொழுக்கத்துக்கு அடாத விஷயமும், பொதுநன்மைக்கும் குடிகளுக்கும் பொல்லாப்பான அக்கிரமுமாகும்.

594. யாதாமொரு ஒப்பந்தம், உடன்படிக்கையின்மேல் இரு கட்சியும் இணக்கத்திற்கு வரக்கூடுமானபோது, இருதிறத்தாரும் இன்னும் வாதித்துக்கொண்டுபோகும்படி வக்கீல் விட்டு விடலாமா?

இல்லை; வெகுசீக்கிரமாகவும், சொற்பச் செலவோடும் செய்யக்கூடிய முடிவு ஏதோ, அதற்குத் தன்னாலான உதவிபுரிய வக்கீலுக்குப் பிறர்சிநேகக் கடமையுண்டு. தன் சுயலாபத்தைக் கருதி, வியாச்சியத்தைத் தொடர்ந்து நடத்துவது அடாத காரியம்.

595. தன்னிடம் வருகிற பிரியாதுகாரன் அறிவீனன், கபடற்றவன் என்றும், அவனுக்கு, மெத்த நெருக்கடியான காரியம் என்றும் கண்டு, வக்கீல் அதிகச் சம்பளம் கேட்கலாமா?

கேட்கக்கூடாது; எதார்த்தம், பிறர் சிநேகம், நீதி என்னும் புண்ணியங்களுக்கு முற்றும் எதிரிடையான குற்றமாகும் இது.

596. ஒரு கட்சியிடம் வக்கலாத்து பெற்றபிறகு, வக்கீல் தன் சொந்த லாபத்தை முன்னிட்டு, அல்லது வேறெந்த முகாந்தரத்தைப்பற்றியாவது, அந்தரங்கமாய் எதிர் கட்சிக்காரரோடு கலந்து ஏற்பாடு செய்யலாமா?

செய்யத்தகாது; இது வக்கீலுடைய தொழிலினின்று ஏற்படும் ஒப்பந்தத்துக்கு விரோதமானது. யாரிடம் வக்கலாத்து பெற்றிருப்பானோ, அவர்களுடைய காரியம் ஜெயிப்பதற்காகத் தன்னாலியன்றமட்டும் பிரயாசப்படுவது அவன் கடமை.

597. வஞ்சனை அநீதியின்றி யாதாமொரு விவகாரத்தை நடத்தமுடியாதென்று தெரிந்தால், என்ன செய்யவேண்டும்?

இது திட்டமாய் தெரியும்போது, இவன் அந்த விவகாரத்தைவிட்டு விலகிக்கொள்ளவேண்டியது. அதற்குக் காரணம் சொல்லவேண்டிய அவசியமில்லை; சில சமயம் சொல்லாமலிருப்பதே உத்தமம்.

598. தன்னை அண்டிவரும் பிரியாதுகாரனுடைய இரகசியங்களை அந்தரங்கமாய் வைத்திருக்க வக்கீலுக்குக் கடமையா?

சந்தேகமில்லாமல் அத்தகைய இரகசியங்களை வெளியிடலாகாது; யாராவது அவற்றைப்பற்றிக் கேட்டால், பதில் சொல்லக்கூடாது; அல்லது "எனக்குத் தெரியாது" என்று கண்டிப்பாய்ச் சொல்லிப்போடலாம். (இவ்விதம் "தெரியாது" என்பதின் அர்த்தம் யாதெனில், நான் வக்கீல் தொழிலின் மூலியமாக அறிந்தேனேயல்லாமல், வேறுவிதத்தில் உனக்குச் சொல்லு

வதற்குத் தகுந்த வகையில் "எனக்குத் தெரியாது" என்று பொருள்படும்).

*599.* சுருக்கமாய், வக்கீலுடைய கடமைகள் எவை?

நீதி, நேர்மை நிலைக்கும்படி செய்வது. குற்றமற்றோரையும், ஆதரவற்ற ஏழைகளையும் நீதி நியாயத்துடனும், பிறர்சிநேக யதார்த்த குணத்துடனும் பாதுகாத்துக் காப்பாற்ற வேண்டியது.

## 2. வைத்தியத் தொழில்

*600.* (டாக்டர்) வைத்தியனுடைய கடமை என்ன?

மனுஷனுடைய உயிரும் சௌக்கியமும் அவன் கையில் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன; ஆகையால், உயிரையும் சவுக்கியத்தையும் காப்பாற்றத் தனக்குத் தெரிந்தமட்டிலும் பிரயாசப்படக் கடமை உண்டு. சிகிச்சை செய்வதற்காகத் தன்னால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒவ்வொரு நோயாளிமட்டிலும் பூரண கவனம் செலுத்தி, தன்னாலானதை எதார்த்தமாய்ச் செய்து, நோயாளியுடைய அந்தஸ்துத் தரத்துக்குத் தகுந்தாப்போல், தனக்கும் சீரான வருமானம் கிடைக்கத்தக்க அளவு, நியாயமான சம்பளம் மாத்திரம் கேட்கலாம்.

*601.* ஓர் வைத்தியனுக்கு நேரிடக்கூடிய விசேஷ குற்றங்கள் எவை?

கவனமின்மையாலும், அஜாக்கிரதையாலும், உயிர் மோசத்துக்கும், வியாதி முதிர்ந்துபோவதற்கும் காரணமாயிருக்கலாம். துன்மார்க்கமான ஆலோசனை சொல்லிக்கொடுப்பதாலும், துன்மார்க்கமான சத்திரம் சாதனங்களை உபயோகிப்பதாலும் கனமான பாவம் கட்டிக்கொள்ளக்கூடும்.

*602.* சில உதாரணங்கள் கூறு.

இன்னும் பிறவாமல் உதரத்தில் இருக்கும் சிசுக்களைக் கொல்லக்கூடிய சத்திரம் சாதனங்கள் செய்யலாகாது. வியாதியின் உக்கிரமம் தணியும், சுகமுண்டாகும் என்கிற போக்குச் சொல்லி, அதற்காகத் துன்மார்க்கமான கிரிகைகள் செய்யவும், துன்மார்க்கமான வழிவகைகளைப் பிரயோகிக்கவும், நோயாளிக்கு யோசனை சொல்லக்கூடாது. மருந்து மூலிகைகளைக்கொண்டும், விசிறி முதலான கருவிகளைக்கொண்டும், வேறெந்த உபகரணத்தாலும் கெர்ப்பத்தை அழிக்கவாவது, கெர்ப்பம் தரிக்காதபடி தடைசெய்யவாவது, ஜனங்களுக்கு யுக்தி சொல்லிக்கொடுக்கக் கூடாது, உதவி செய்யக்கூடாது.

**603.** வேத அனுசரணை விஷயமாய் வைத்தியன் செய்யத் தக்க உதவி யாது?

மரணத்தறுவாயிலிருக்கும் நோயாளிகளுக்கு மரண சமயம் கிட்டியிருப்பதாகச் சொல்லவேண்டும். நன்மரணத்துக்கு ஆயத்தம் செய்ய இது அவர்களுக்கு உதவியாயிருக்கும். ஆனால் இவ்விதம் சொல்லுவதினால், அனாவசியமாய் நோயாளியினுடைய சிந்தை குழம்பி, பயம் மேலிட்டு, ஆபத்துக்கிடமாகாதபடி விமரிசையாய் நடந்துகொள்ளவேண்டும். நோயாளிகள் தங்கள் தங்கள் வேதக்கோட்பாட்டுப்பிரகாரம் மரண ஆயத்தம் செய்து கொள்ளும்படி தன்னாலான உதவிபுரியத்தகும்.

## 3. இதர பொது உத்தியோகங்கள்

**604.** இதர பொது உத்தியோகங்களிலுள்ள கடமைகள் எவை?

ஒவ்வொரு தொழிலிலும் உத்தியோகத்திலும் அந்தந்தத் தொழிலுக்கேற்ற கடமையையும், எதார்த்தம் நீதி பிறர் சிநேகம் என்னும் பொதுக் குணங்களையும் அனுசரிக்கத்தகும்.

**605.** சில உதாரணங்களைச் சொல்லி, இதை விளக்கிக்காட்டு.

(1) சர்க்கார் வேலைக்காரர் தங்கள் உத்தியோகத்துக்குத் தகுந்தவண்ணம் பொதுநன்மைக்காக உழைக்கவேண்டும். தங்கள் ஆபீஸ் காரியங்களை விசேஷமாய் அந்தரங்கமான இரகசிய விஷயங்களை எவருக்கும் வெளியிடலாகாது. தங்கள் நடத்தையில் பாரபட்சமின்றி எதார்த்தமும் யோக்கியமும் நீதியும் நேர்மையும் விளங்கிப் பிறருக்கு நன்மாதிரிகை காட்டவேண்டும்.

(2) போர்வீரர் (பட்டாளத்தைச் சேர்ந்தவர்கள்) தேசப் பாதுகாப்பு விஷயத்தில் உத்தரவாதமுள்ளவர்கள். சைன்னிய உத்தியோகஸ்தர் சமயோஜிதமான யுக்தியும் திட்டமும் செய்வதாலும், சாதாரணப் போர்வீரன் உயிரைப் பரித்தியாகம் பண்ண அவசியம் நேரிடினும், பொருட்படுத்தாமல், மேலதிகாரிகள் இட்ட கட்டளைப்பிரகாரம் அஞ்சாமல் நடந்துகொள்வதாலும், தேசத்தைப் பாதுகாத்து இரட்சிக்கக் கடமைப்பட்டவர்கள்.

(3) ரெயில்வே வேலைக்காரரும், கப்பல் வேலைக்காரரும் பிரயாணிகளின் உயிருக்கும் பொருள்களுக்கும் ஆபத்து நேரிடாதபடி தற்காக்கக் கடமைப்பட்டவர்கள்.

(4) தீர்வை, சுங்கம் வரி வசூலிக்கும் உத்தியோகஸ்தர் நீதிக்கும் புத்திக்கும் ஒத்தவண்ணம் தங்கள் கடமைகளைப் பிரமாணிக்கமாய் அநுசரிக்கவேண்டும்.

(5) சிற்பாசிரியர், இஞ்சினியர் முதலான கட்டட வேலைப் பொறுப்பேற்றவர்கள், தாங்கள் அமைக்கும் வீடுகள், பாலங்கள், கட்டடங்கள் முதலியவை உறுதியாகவும் நீடித்திருக்கத்தக்கவைகளாகவும் இருக்கும்படி ஜாக்கிரதையாயிருக்கக் கடமைப்பட்டவர்கள்.

(6) மருந்துசாலை வைத்திருப்போர், சுத்த நயமான மருந்துகள் தருவித்துக் கொடுப்பதுமன்றி, வைத்தியர் விதித்த விகிதப்பிரகாரம் அளவு கூடாமலும் குறையாமலும் தக்க விதமாய் மருந்து சேர்த்துக் கொடுப்பதில் வெகு ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்.

(7) நாடகம், கண்காட்சி, விநோத வேடிக்கை நடத்துபவர்கள், தங்கள் சாலையில் வந்து கூடும் ஜனங்களுக்கு எவ்விதத்திலும் அபாயகரமில்லாது கவனித்துக்கொள்வதுடன், வேதம் விசுவாசம் சன்மார்க்கத்துக்கு எதிரிடையான நடவம், கண்காட்சி நடைபெறுதபடியும், மரியாதை யோக்கியதைக்குப் பங்கம் நேரிடாதபடியும், விசேஷமாய் சிறுவர் மனதைக் கலக்கிக் கெடுக்கக்கூடிய எது விஷயமும் சம்பவிக்காதபடியும் தகுந்த முயற்சி செய்யக் கடமைப்பட்டவர்கள்.

## 4. பிரஜைகளின் கடமைகள்

606. பிரஜைகள் பொதுவாய் அனுசரிக்கவேண்டிய கடமைகள் எவை?

சகல பிரஜைகளும் அநுசரிக்கத்தக்க கடமைகள் :—

(1) சர்க்கார் சட்டதிட்டங்களுக்குக் கீழ்ப்படிந்து சர்க்கார் கேட்கும் கேள்விகளுக்கு எதார்த்தமாய் உண்மையான பதில் கூறி, சர்க்கார் இடுகிற ஆக்கினை அபராதங்களுக்கு அமைந்து நடக்கவேண்டும்.

(2) தற்காலம் அரசாட்சி செலுத்தும் சர்க்காரை நன்கு மதித்து, ஆளுகைப் புரட்சி நேரிடாது யாவும் மனதிர்ப்தியாகவும் ஒழுங்காகவும் அமரிக்கையாகவும் நடைபெறும்வண்ணம் உதவிபுரியவேண்டும்.

(3) யாதாவது கக்கிஷம் கஷ்டம் குறையை நிவர்த்திக்க வேண்டியதாயின், கிரமமாய் மேலதிகாரிகளுக்குத் தங்களுக்கிருக்கும் கஷ்டங்களைத் தெரிவித்து சீர்திருத்தமடையத் தேடலாம். ஆனால் எங்கும் கலகமும் குழப்பமும் கிளர்ச்சியும் உண்டுபண்ணி அலங்கோலக்கு [illegible] செய்யலாகாது. அதாவது

கபடற்ற பாமர ஜனங்கள் மனதைக் கலக்கிக் குழப்பி, ஆட்சி விஷயம் அறவே அறியாத குடிகளுக்குள் குட்டிக்கலகம் உண்டு பண்ணி, எங்கும் அதிர்ப்தியும் மனச்சஞ்சலமும் ஏற்பட வழி வைத்துக்கொள்ளத்தகாது. ஏனெனில், அரசாட்சியின் நல்லிருப் புக்கும் சிறப்புக்கும் ஜனங்களுடைய மன அமைதியும் திர்ப்தி யுமே அறிகுறியாகும்.

(4) சர்க்கார் அதிகாரிகளுடைய நடவடிக்கைகளைக் கண்டனம் பண்ணுவதில், நீதி, நியாயம், உண்மை, பிறர்சிநேகம் என்னும் பிரமாணங்களை மீறலாகாது. அபாண்டமான குற்றங் களை அவர்களின்மேல் சுமத்தி அவர்களுடைய பெயரையும் கீர்த்தி யையும் கெடுக்கக்கூடாது. அவர்களுடைய செய்கைகளைப்பற்றித் தப்பறையான அபிப்பிராயங்களைப் பிரசித்தப்படுத்தலாகாது. அரசாட்சி விஷயத்தில் ஏதாவது சீர்திருத்தம் வேண்டுமென்றிருந் தால், அதற்கான ஒளிவு மறைவான கபடச் செய்கைகளும், புரட்டு நியாயங்களும், வஞ்சனைகளும் செய்வது அடாத காரியமாகும்.

607. இறை வரி தீர்வைகள் விஷயமாய் பிரஜைகளின் கடமைகள் என்ன?

இவைகளை விதிக்கும்படியாக, உன் நிலபலம் சொத்து களைப்பற்றி அல்லது வேறெதைப்பற்றி எந்த வாக்குமூலமாவது உன்னிடமிருந்து சர்க்கார் கேட்கும்போது, எதார்த்தமான உண்மையைச் சொல்லவேண்டும். அவ்விதம் கேட்காவிடில், நீயே போய் சர்க்காரிடம் உள்ளதைச் சொல்லவேணுமென்ற அவசியமில்லை. ஆனால், விதிக்கப்படும் நியாயமான இறை வரி தீர்வையை, கபடு தந்திரங்களால் தப்பித்துக்கொள்ள வழி தேடாமல், செலுத்தவேண்டிய கடமை உண்டு.

608. ஆயத்துறை தீர்வைகளைப்பற்றி அறியவேண்டிய தென்ன?

ஆள் வைத்துத் திட்டம்பண்ணி சதா திருட்டுத்தன மாய்த் தீர்வையில்லாமல் சாமான்களைக் கொண்டுபோகும் வழக்கம், பொது ஒழுங்குக் கிரமத்துக்கு அடாத துர்வழக்கம். நாமே பயணம் செய்யும்போது, நம்முடன் கொண்டுபோகும் சிப்பந்தி சாமான்களைப் பரிசோதனை செய்யத் தடை செய்ய லாகாது; ஆனால், இன்னின்ன சாமான் கொண்டுபோகிறோம் என்று உறுதிமொழி கூறக் கடமை இல்லை; தெரிவித்தால், உள்ளதைச் சொல்லவேண்டும். ஏனெனில் பொய்மொழி கூறுவது எப்போதும் பாவந்தான்.

609. ஆயத்துறை ஆட்களை வசம்பண்ணி அவர்களுடைய சிநேக காரணத்தால் அல்லது அவர்களுக்கு ஏதோ இனம்,

லஞ்சம் கொடுத்து, இவ்விதமாகத் தீர்வை கொடுக்காமல் தப்பிக்கப் பார்க்கலாமா?

இது செய்யத்தகாது; சர்க்காரால் நியமிக்கப்பட்ட வேலைக்காரன் தன் கடமையை மீறி நடந்து குற்றம் கட்டிக் கொள்ள நாம் காரணமாகிறோம்.

610. "தண்டனை வந்தால் நான் பட்டநுபவித்துக்கொள் கிறேன்" என்பதாகத் துணிந்து சட்டத்தை மீறவும் அலட்சியம் செய்யவும் தகுமா?

சட்டம் நிரூபிப்பது அறநெறி விஷயமானால், அதை ஒருக்காலும் மீறலாகாது. பொது ஒழுங்குக் கிரமத்துக்காகத் திட்டம் செய்யப்பட்ட காரியமானால், பொதுப் பிரயோசனத்துக்கும் ஒழுங்குக்கும் உண்டாகும் இடையூறுக்குத் தகுந்தவண்ணம், அச்சட்டத்தை மீறுவதினால் உண்டாகும் குற்றம் கனமானது அல்லது அற்பமானதாகும். ஆனால், பொதுவான காரியங்களுக்கு யாதொரு இடையூறும் விளைவிக்கக்கூடிய விஷயமாயின்றி, உனக்குமாத்திரம் தின்மையை வருவிக்கக்கூடியதானால், அத்தகைய சட்டங்கள் "குற்றப்படுத்துகிற" (criminal) சட்டங்களல்ல. "தண்டனை விதிக்கிற" (penal) சட்டங்கள் என்னப்படும். அதாவது "அவற்றை, உனக்கு இஷ்டமானால், மீறலாம்; அகப்பட்டுக்கொண்டால் தண்டனைக்கு அமைந்து தீர வேண்டும்".

611. அத்தகைய விஷயங்களில் இஷ்டம்போல் நடப்பது நல்லதா?

நல்லதன்று; சகல சட்டங்களையும் அநுசரிப்பதே, பொது நன்மைக்குப் பிரயோசனமானது. இது தவிர, தன்னைத் தானே அடக்கி ஆளவும், குணபான்மையை வளர்ப்பிக்கவும் இது ஏற்ற வழி. பிரமாணிக்கமான பிரஜையின் அடையாளம் இது. அற்பக்காரியந்தானே என்று அலட்சியம் செய்வது, மெள்ள மெள்ளக் கனத்த காரியங்களிலும் முக்கியமான விஷயங்களிலும் அஜாக்கிரதையை உண்டுபண்ணிவிடும். இறுதியில் முற்றும் தாறுமாறாய் முடியலாம். ஆகையால் அற்ப விஷயத்திலும், அலட்சியம் ஆகாது.

---

# அநுபந்தம்

## I. காலை ஜெபம்

1. **நித்திரையைவிட்டு எழுந்திருக்கும்பொழுது**:—என் சர்வேசுரா, இந்த நாளில் என்னை ஆசிர்வதித்துக் காப்பாற்றி ஆண்டு நடத்தி, நித்திய ஜீவியத்தை நான் அடையச் செய்தருளும்.

2. **சர்வேசுரனுடைய சந்நிதானத்தைப்பற்றி** :—என் சர்வேசுரா, தேவரீர் இவ்விடத்தில் பிரசன்னராயிருந்து, என்னைப் பார்க்கிறீரென்றும், என்னுடைய நினைவு கிரிகைகள், என்னுடைய இருதய அந்தரங்கங்கள் யாவும் சம்பூரணமாய் அறிகிறீரென்றும் உறுதியாக விசுவசிக்கிறேன். ஜெபத்தின் வழியாக முதலாய் உம்மை அண்டி வருவதற்கு நான் அபாத்திரன் என்பதை அங்கீகரித்து, தகுந்த விதமாய் நான் ஜெபிக்கும்படியாக உமது உதவியை இரந்து மன்றாடுகிறேன்.

3. **ஆராதனை, நன்றியறிந்த தோஸ்திரம்** :—சகலத்துக்கும் ஆதியும் அந்தமுமான நித்திய சர்வேசுரா, உமது சமூகத்தில் சாஷ்டாங்கமாய் விழுந்துகிடந்து என்னால் இயன்றமட்டும் உம்மை ஆராதித்து வணங்குகிறேன். உம்மைத் தோத்தரித்து நமஸ்கரித்து, எனக்குச் செய்தருளிய சகல உபகாரங்களுக்காகவும் உமக்கு நன்றிசெலுத்துகிறேன். தேவரீர்தாமே என்னை உண்டாக்கிக் காப்பாற்றி உமது பராமரிப்பினால் என்னைத் தற்காத்துக் கொண்டு வருகிறீர். எனக்குத் தேவரீர் செய்திருக்கும் சகலத்துக்கும் என்ன பிரதிநன்றி செய்யப்போகிறேன்? உமது திவ்விய நாமத்தைத் தோத்தரித்து, என் ஜீவிய காலமெல்லாம் பிரமாணிக்கமாய் உமக்கு ஊழியஞ்செய்யப் பிரயாசைப்படுவேன்.

4. **தன்னை ஒப்புக்கொடுக்கும் ஜெபம்** :—ஓ! என் சர்வேசுரா, இன்றைக்கும் என் ஜீவியகாலத்திலும் எனக்கு வரும் துன்ப துரிதங்கள், என் ஆசை நினைவு வாக்கு கிரிகை யாவையும்

ஆராதனைக்குரிய உமது மகத்துவத்துக்கு மகிமையாகவும், உமது நன்மை வரப்பிரசாதங்களுக்குப் பிரதி நன்றியாகவும், எனது பாவங்களுக்குப் பரிகாரமாகவும் ஒப்புக்கொடுக்கிறேன். உமது உதவி ஒத்தாசையால், கடைசிபரியந்தம் உமது சித்தப்பிரகாரம் நடந்து, மறு ஜீவியத்தில் என்றென்றைக்கும் உம்மோடு வீற்றிருக்கக் கிருபை கூர்ந்தருளும்.

5. **பிரதிக்கினை** :—உமக்குப் பிரியப்படும்படி என்னுடைய கிரிகைகளெல்லாம் செய்து, உமது சித்தத்தின்படி இந்த நாளைச் செலவழிக்கப் பிரயாசப்படுவேன். எனக்கு வழக்கமான குற்றங்களை இன்று விலக்கும்படி விசேஷ கவனம் செலுத்தி, என்னுடைய அந்தஸ்துக்கும் வேலைக்கும் தகுந்த புண்ணியங்களைச் செய்யப் பிரயாசப்படுவேன்.

6. **மன்றாட்டு** :—உமது உதவியில்லாமல் இந்தத் தீர்மானங்களின்படி நடக்க என்னால் இயலாதென்றும், நான் எவ்வளவு பலவீனனென்றும், உமக்கு நன்றாய்த் தெரியும். என்னைத் தனியே விட்டுவிடாமல், உமது பாதுகாப்பில் என்னை ஏற்றுக்கொண்டு இவையாவையும் பிரமாணிக்கமாய் நிறைவேற்ற எனக்கு உதவி புரியும். என் கடமையைக் கண்டுபிடிக்கும்படி என் புத்தியைத் தெளிவித்தருளும்; என் கடமையைக் கண்டுபிடிக்கும்படி என் மனதைத் திடப்படுத்தியருளும். என் பலவீனத்தைப் பலப்படுத்தி, என் ஆசாபாசங்களை அடக்கி, நன்மை செய்வதற்கான சமயங்களையெல்லாம் சரியாய் உபயோகிக்கும்படி எனக்கு நல்ல யோசனை தந்து, சகலவித பாவச் சமயங்களையும் சோதனைகளையும் விலக்கிவிடச் செய்தருளும்.

7. **பொது ஜெபம்** :—இந்த நாளை நாங்கள் காணும்படி உதவி புரிந்த வல்லமையுள்ள கர்த்தாவே, இன்று எந்தப் பாவத்திலும் விழாமலிருக்கும்படி சர்வ வல்லமையுள்ள உமது ஒத்தாசையால் கிருபை கூர்ந்தருளும். எங்களுடைய சகல நினைவு வாக்கு கிரிகைகளும் உமது தெய்வீக நீதிக்கு விரோதம் பண்ணாமல், உமது சட்டத்தை அநுசரிக்கும்படியாகச் செய்தருளும். உமது உதவியால் காப்பாற்றி இரட்சிக்கப்பட்டு, நித்திய பாக்கியம் அடையும்படி அநுக்கிரகம் பண்ணியருளும்.

## II. மாலை ஜெபம்

1. சுருக்கமான ஜெபம் :—சர்வ வல்லமையுள்ள சர்வேசுரா, தேவரீர் எனது ஜீவியகால முழுவதும் விசேஷமாய் இன்றையத் தினம் எனக்குச் செய்த உபகாரங்களுக்காக உமக்கு நன்றியறிந்திருக்கிறேன்.

2. நம்பிக்கை முயற்சி :—ஓ! என் சர்வேசுரா, தேவரீர் எனது சிருஷ்டிகரும், ஆண்டவரும், எஜமானரும், என்னை ஆளுகிறவரும் எனது நியாயாதிபதியுமாயிருக்கிறீரென்று விசுவசிக்கிறேன் ; பூரணபாக்கியத்துக்காக என்னை உண்டாக்கியிருக்கிறீரென்றும், அந்தப் பாக்கியத்தை அடைவதற்கான ஜீவிய சட்டத்தைக் கொடுத்திருக்கிறீரென்றும், உமது சட்டத்தின் பிரகாரம் நடக்கவும் அதற்கு விரோதமானதெல்லாம் விலக்கவும் உமது உதவியைத் தந்தருளுவீரென்றும் நம்புகிறேன். உமது கற்பனைகளுக்குப் பிரமாணிக்கமாய்க் கீழ்ப்படிகிறவர்களுக்கு நீதிப்பிரகாரம் சன்மானம் அளிப்பீரென்றும், அவற்றை மீறுகிறவர்களை நீதிப்பிரகாரம் தண்டிப்பீரென்றும் விசுவசிக்கிறேன். பாவஞ்செய்தவர்கள் பச்சாதாபப்பட்டு இனிமேல் அவ்விதம் செய்வதில்லையென்று பிரதிக்கினை செய்தால், அவர்களை மீளவும் ஏற்றுக்கொள்ளச் சித்தமாயிருக்கிறீரென்றும், உம்மை மன்றாடுகிறவர்களுக்குச் சகாயம் செய்து, அவர்கள் தங்களுக்கு வரும் சோதனைகளை ஜெயித்து, இவ்வுலகில் உமக்குப் பிரமாணிக்கமாய் ஊழியஞ்செய்யவும், மறு உலகில் உம்மோடு நித்திய பாக்கியத்தை அநுபவிக்கவும் கிருபைகூர்ந்தருளுவீரென்றும் நம்பியிருக்கிறேன்.

3. சிநேக முயற்சி :—என் சர்வேசுரா, தேவரீர் மட்டற்ற நன்மைத்தனமுள்ளவரும், அதிமிக நேசத்துக்குரியவருமானதால், உம்மைச் சகலத்துக்கும் மேலாக என் முழு இருதயத்தோடு சிநேகிக்கிறேன். உம்மைப்பற்றி, என்னைப்போலவே என் அயலானையும் நேசிக்கிறேன், எனக்குத் தின்மை செய்தவர்களை மன்னித்துக்கொண்டு, என்னால் துன்பப்பட்டவர்களிடமிருந்து மன்னிப்புக் கேட்கிறேன்.

4. **உள்ளப் பரிசோதனைக்குமுன் செய்யத்தகும் ஜெபம் :—** நித்திய வல்லபமுள்ள சர்வேசுரா, சீவியரையும் மரித்தோரையும் நடுத்தீர்க்கிறவரும், என் சீவிய காலத்தில் நான் செய்த யாவற்றிற்கும் ஒருநாள் என்னிடம் கணக்குக் கேட்கப்போகிறவருமாகிய நீதிபரே, என் புத்திக்குப் பிரகாசத்தைத் தந்து உமக்கு விரோதமாய் நான் செய்த குற்றங்களை அறியவும் அவைகளுக்காக பச்சாத்தாபப்பட்டு அவற்றை அருவருத்துத் தள்ளவும் உதவிபுரிந்தருளும்.

5. **உள்ளப் பரிசோதனை :—** நீ இன்று நினைவு வாக்குக் கிரிகைகளினுல் கட்டிக்கொண்ட பாவங்கள் எவையென்று பரிசோதித்துப் பார்.

**கடவுளுக்கு விரோதமாய் :—** தேவதூஷணம், அவசங்கை, ஜெபத்தில் அலட்சியம், வீண் சடங்குகள், வேத விரோதமான புஸ்தகங்களையும், கெட்ட புஸ்தகங்களையும் வாசித்தது ;

**தனக்குத்தானே விரோதமாய் :—** சோம்பல், அசதி அசட்டைத்தனம், ஆங்காரம், தற்பெருமை, சிலாக்கியம், மிதமிஞ்சிச் சாப்பிட்டது, குடித்தது, கண் அடக்கமில்லாமை, சிற்றின்பம், அங்கசேஷ்டை ;

**பிறருக்கு விரோதமாய் :—** அதாவது, பெற்றோர், பிள்ளைகள், உறவினர், சிநேகிதர், அறிமுகமானவர், அன்னியர் இவர்களுக்கு விரோதமாய் ;

**நீதிக்கு ஏற்காத :—** திருட்டு, வஞ்சகம், பிறர்பொருளை நஷ்டப்படுத்தல், பேரைக் கெடுத்தல், பொய், வஞ்சனை, பிறர் மட்டில் உள்ள கடமையை அலட்சியஞ்செய்தல் ;

**பிறர் சிநேகத்துக்கு ஏற்காத :—** காய்மகாரம், வர்மம், பகை, துர் எண்ணம், சண்டை சச்சரவு, துர்மாதிரிகை, கோள் குண்டணி, ஈயாமை.

**அந்தஸ்துக்கு விரோதமானவை :—** புருஷன், பெண்சாதி, பெற்றோர், பிள்ளைகள், உபாத்தியாயர், மாணுக்கர்,

முதலாளி, வேலையாள், கடைக்காரன் முதலானவர்கள் தங்கள் தங்களுக்குரிய கடமைகளை நிராகரித்தல்.

6. பச்சாத்தாப முயற்சி :—என் சர்வேசுரா, உமது தெய்வீக மகத்துவத்துக்குத் துரோகம் பண்ணித் தண்டனைக்குப் பாத்திர வானேன்; நான் செய்த இந்தப் பாவங்களையெல்லாம் முழு மனதோடு அருவருத்துத் தள்ளி அவற்றிற்காக மிகுந்த துக்கப் பட்டு, இனிமேல் அவற்றை ஒருக்காலும் செய்வதில்லையென்று பிரதிக்கினை பண்ணுகிறேன். அளவற்ற நன்மைத்தனமுள்ள உம்மை நிந்தித்ததைப்பற்றி மற்ற எல்லாத்தையும்விட அதிகக் கஸ்திப்படுகிறேன். உம்மை என் முழு இருதயத்தோடும் ஆத்துமத்தோடும் சிநேகிக்கிறேன்; உமது ஒத்தாசையால் இனி மேல் உமக்கு அதிகப் பிரமாணிக்கமாய் ஊழியஞ்செய்ய மனதா யிருக்கிறேன்.

7. மனவல்லய ஜெபம் :—சர்வ வல்லபமுள்ள கடவுள் என் பேரில் இரக்கமாயிருந்து, என் பாவங்களை மன்னித்து, எனக்கு நித்திய பாக்கியத்தைக் கட்டளையிட்டருள்வாராக!

8. பிறருக்காக மன்றாடுதல் :—நான் யார் யாருக்காக மன்றாட வேண்டுமோ, அவர்கள் எல்லாரையும் (என் புருஷன், மனைவி, பிள்ளைகள்—என்னுடைய தாய் தந்தையர், சகோதரர் சகோதரி கள்); என் உறவினர், உபகாரிகள், சிநேகிதர், அறிமுகமுள்ளவர் யாவரையும் உம்மிடம் ஒப்புவிக்கிறேன். எனக்குத் துரோகஞ் செய்தவர்களுக்காகவும், தின்மை செய்தவர்களுக்காகவும், நான் யார் யாருக்குத் தின்மை புரிந்தேனோ, துர்மாதிரிகை காட்டி னேனோ அவர்களுக்காகவும், என்னுடைய ஜெபத்தை விரும்பு கிறவர்களுக்காகவும் உம்மைப் பிரார்த்திக்கிறேன். அவர் களுக்குத் தேவையானதெல்லாம் கொடுத்தருளும்; அவர்க ளுடைய துன்பதுரிதங்களில் அவர்களுக்கு ஆறுதலும் ஆதரவுமா யிரும்; சகல சோதனைகளினின்று அவர்களை இரட்சித்தருளும்; அவர்கள் இவ்வுலகில் உம்மை நேசித்து, உமக்கு ஊழியஞ் செய்யவும், மறு உலகில் உம்மைச் சுகிக்கவும் கிருபை கூர்ந்தருளும்.

தப்பறையான வழியில் இருப்பவர்கள் உண்மையைக் கண்டுணரும்படியாகவும், பாவிகள் மனந்திரும்பும்படியாகவும், நீதியும் உண்மையும் எங்கும் பரம்பும்படியாகவும் உம்மை மன்றாடுகிறேன். எனது தேசத்துக்காகவும், என் நாட்டிலுள்ளவர்களுக்காகவும், அதிகாரம் செலுத்தி, அரசாட்சி செய்பவர்களுக்காகவும் உம்மைப் பிரார்த்திக்கிறேன்; உமது தெய்வீக பராமரிப்பில் மனுக்குலம் முழுவதையும் ஒப்படைக்கிறேன். அவர்களைக் காப்பாற்றி இரட்சிப்பீராக.

## III. பற்பல ஜெபங்கள்

1. **பாவச்சோதனை வரும்பொழுது :**—நான் நல்லவனாயிருக்கவும், இந்தப் பாவத்தைச் செய்யாதிருக்கவும் எனக்கு உதவியாயிரும் சர்வேசுரா!

2. **கடமை கடினமானதாகத் தோன்றும்பொழுது :**—என் சர்வேசுரா, எவ்வளவுதான் கடினமாயிருந்தாலும், நான் தகுந்ததைச் செய்யத் தயைசெய்யும்.

3. **பாவத்தில் தவறி விழுந்துவிட்டால் :**—இந்தப் பாவத்தை மன்னித்துக்கொள்ளும். நான் இதைச் செய்ததைப்பற்றித் துக்கிக்கிறேன்; இனி இவ்விதம் செய்யவேமாட்டேன்.

---

# விஷய அட்டவணை

# அநுபந்தம்

## I. காலை ஜெபம்



## II. மாலை ஜெபம்



## III. பற்பல ஜெபங்கள்

